# சங்க இலக்கிய நாட்டுப்புற விளையாட்டுக்கள் – ஓர் ஆய்வு

முனைவர் பட்டத்திற்காகத் திருச்சிராப்பள்ளி
பாரதிதாசன் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பெறும் ஆய்வேடு



பகுதிநேர ஆய்வாளர்
அ.மதிவாணன்,
பி.லிட்., எம்.பி.எட்., எம்.ஃபில்., பி.ஜி.டி.எஸ்.எம்., பி.ஜி.டி.ஒய்.எம்.,
உடற்கல்வி இயக்குநர்,
மன்னர் சரபோசி அரசுக்கல்லூரி,
தஞ்சாவூர்–613 005.

நெறியாளர்
முனைவர் த.பிச்சையப்பா,
எம்.ஏ., எம்.பி.எட்., எம்.ஃபில்., என்.ஐ.எஸ்., பிஎச்.டி.,
உடற்கல்வி இயக்குநர், உடற்கல்வித்துறை,
தேசியக் கல்லூரி, திருச்சி–620 001.



உடற்கல்வித்துறை
தேசியக்கல்லூரி
(தேசியத் தரக்குழுவால் ‘A’ தகுதி பெற்றது)
திருச்சிராப்பள்ளி–620 001.

செப்டம்பர் 2008



முனைவர் த.பிச்சையப்பா,
எம்.ஏ., எம்.பிஎட்., எம்.ஃபில்., என்.ஐ.எஸ்., பிஎச்.டி.,
உடற்கல்வி இயக்குநர், உடற்கல்வித்துறை,
தேசியக் கல்லூரி, திருச்சி–620 001.

---

## நெறியாளர் சான்றிதழ்

சங்க இலக்கிய நாட்டுப்புற விளையாட்டுக்கள் – ஓர் ஆய்வு என்னும் தலைப்பில் அமைந்த இந்த ஆய்வேடு, பாரதிதாசன் பல்கலைக்கழக முனைவர் பட்டத்திற்காக என் மேற்பார்வையில் திரு.அமதிவாணன், எம்.பிஎட்., எம்.ஃபில்., அவர்கள் ஆய்வு செய்த காலத்தில் (2005–2008) அவரால் உருவாக்கப்பட்ட ஆய்வுப்படைப்பாகும். இந்த ஆய்வேடு குறித்து வேறெந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்பெறவில்லை என்று சான்று அளிக்கிறேன்.

இடம் : திருச்சிராப்பள்ளி,

நாள் :

T. Pichy 27/09/08

(த.பிச்சையப்பா)
நெறியாளர்

*Dr. T. PITCHAIAPPA,*
*Director of Physical Education*
*National College,*
*TRICHY - 620 001*

திரு. அ.மதிவாணன்,
பி.லிட்., எம்.பி.எட்., எம்.ஃபில்., பி.ஜி.டி.எஸ்.எம்., பி.ஜி.டி.ஒய்.எம்.,
உடற்கல்வி இயக்குநர்,
மன்னர் சரபோசி அரசுக்கல்லூரி,
தஞ்சாவூர்–613 005.

---

## ஆய்வாளர் உறுதிமொழி

**சங்க இலக்கிய நாட்டுப்புற விளையாட்டுக்கள் – ஓர் ஆய்வு** என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்காகச் செய்யப் பெற்ற இந்த ஆய்வு என் முயற்சியில் உருவானதாகும். இதற்கு முன்பு வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்காகவும் இந்த ஆய்வேடு அளிக்கப்பெறவில்லை என்று உறுதி கூறுகிறேன்.

இடம் : திருச்சிராப்பள்ளி
நாள் : 25.09.08

(அ.மதிவாணன்)
ஆய்வாளர்

(த.பிச்சையப்பா)
நெறியாளர் 25/09/08
*Dr. T. PITCHAIAPPA,*
*Director of Physical Education,*
*National College,*
*TRICHY - 620 001*

## நன்றியுரை

திருச்சி, பாரதிதாசன் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்ட ஆய்வை மேற்கொள்ள அனுமதி அளித்த துணைவேந்தர் **முனைவர் பொன்னவைக்கோ** அவர்கட்கும், **தேர்வுக்கட்டுப்பாட்டு அலுவலர், உடற்கல்வித்துறையினர்** மற்றும் பல்கலைக்கழகத்தில் பணியாற்றும் அனைவருக்கும் நன்றியை உரித்தாக்கிக் கொள்கின்றேன். **சங்க இலக்கிய நாட்டுப்புற விளையாட்டுக்கள் – ஓர் ஆய்வு** என்ற தலைப்பில் செம்மொழித் தமிழ்மொழியில் உடற்கல்வித்துறையில் ஆய்வேட்டினை அளிக்க அனுமதி வழங்கியதோடு, மிகுந்த ஈடுபாட்டினையும் செம்மொழி மீது கொண்டுள்ள உணர்வினையும் வெளிப்படுத்திட வாய்ப்பினை நல்கி அனுமதி அளித்துள்ளமைக்கு நன்றியினை உரித்தாக்கிக் கொள்கின்றேன்.

ஆய்வேட்டினை உடனுக்குடன் திருத்திச் செம்மைப்படுத்தி, உரிய காலத்தில் ஆய்வேட்டினை அளிக்க முதற்காரணமாய் அமைந்து, சிறந்த நெறிமுறைகளை வழங்கிய ஆய்வு நெறியாளர் **முனைவர் த.பிச்சையப்பா,** உடற்கல்வி இயக்குநர் (ஓய்வு) அவர்கட்கும் நன்றிகூறக் கடப்பாடு உடையேன்.

இந்த ஆய்வினை மேற்கொள்ள உதவியாகவும், துணையாகவும், அவ்வப்போது கருத்துக்களை வழங்கிய என் துணைவியார் **முனைவர் ந.தமிழரசி** (உதவித் தலைமை ஆசிரியை, கோ.அ.ம.பெ. பெண்கள் மேல்நிலைப்பள்ளி, முத்துப்பேட்டை) அவர்கட்கும், **முனைவர் க.சாந்தி, முனைவர் ஆ.சண்முகம்,** நாட்டுப்புறவியல் துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் அவர்கட்கும் என் நன்றியினை உரித்தாக்கிக் கொள்கின்றேன்.

கல்லூரிக்கல்வி இயக்குநர், சென்னை, முதல்வர், மன்னர் சரபோசி கல்லூரி, தஞ்சாவூர், தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் மற்றும் பிறதுறை பேராசிரியர்கள், ஆசிரியரல்லா அலுவலர்கள் அனைவருக்கும் நன்றியை உரித்தாக்கிக் கொள்கின்றேன்.

இந்த ஆய்வினை மேற்கொள்ள அனைத்து நிலைகளிலும், நல்ல உற்சாகத்தினையும், சூழ்நிலைகளையும் எனக்கு அளித்து அன்பினை வெளிப்படுத்திய என் செல்வங்கள் **மதி.தமிழ்வாணன்,** B.E. (ECE), **மதி.இளவரசன்,** (M.B.B.S.), ஆகியோருக்கு என் நன்றியினை உரித்தாக்கிக் கொள்கின்றேன்.

தரவுகளைச் சேகரிக்கும் பொருட்டு, களப்பணி சென்றபோதெல்லாம் இன்முகத்துடன் வரவேற்று, நாட்டுப்புறத்தில் உள்ள சரியான செய்திகளைத் தெரிவித்து தரவுகளை நல்கிய தகவலாளிகளுக்கும் என் நன்றியை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

என் ஆய்வுக்கு வழிகாட்டியாய் திருச்சி, பாரதிதாசன் பல்கலைக்கழகத்தின் நூலகம், தஞ்சாவூர் தமிழ்ப்பல்கலைக்கழக நூலகம் ஆகியன அடிப்படையாக அமைந்ததற்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆய்வேட்டினைக் குறித்த காலத்தில் சிறந்த முறையில் கணிப்பொறியில் வடிவமைத்து உதவிய தஞ்சை நாகு கம்ப்யூட்டர்ஸ் நிறுவனத்தாருக்கும் என் நன்றியை நவில்கின்றேன்.

**அ.மதிவாணன்**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அ. | – | அல்லது |
| அகம். | – | அகநானூறு |
| அதி. | – | அதிகாரம் |
| அயோத். | – | அயோத்தியாகாண்டம் |
| ஆய்ச்சியர் | – | ஆய்ச்சியர் குரவை |
| ஆ.எ. | – | ஆடுபவரின் எண்ணிக்கை |
| இலாவண. | – | இலாவண காண்டம் |
| உஞ்சை. | – | உஞ்சைகாண்டம் |
| ஐங்குறு. | – | ஐங்குறுநூறு |
| கம்ப. | – | கம்பராமாயணம் |
| கண்ணப்ப. | – | கண்ணப்பநாயனார் |
| கலித். | – | கலித்தொகை |
| குறுந். | – | குறுந்தொகை கூர்ம–கூர்மபுராணம் |
| கை.கோ. | – | கைகோத்திருப்பவர் |
| சிலம்பு | – | சிலப்பதிகாரம் |
| சிறுபாண். | – | சிறுபாணாற்றுப்படை |
| சீவக. | – | சீவகசிந்தாமணி |
| சூளா. | – | சூளாமணி |
| சொல். | – | சொல்லதிகாரம் |
| தொல். | – | தொல்காப்பியம் |
| நற். | – | நற்றிணை |
| ப. | – | பக்கம் |
| பக். | – | பக்கங்கள் |
| பால. | – | பாலகாண்டம் |
| பதிற்று. | – | பதிற்றுப்பத்து |
| பரி. | – | பரிபாடல் |
| புறம். | – | புறநானூறு |
| பூக்கொய். | – | பூக்கொய்படலம் |
| பெரும்பாண். | – | பெரும்பாணாற்றுப்படை |
| பெயர். | – | பெயரியல் |
| பொருள். | – | பொருளியல் |
| பொருநர். | – | பொருநராற்றுப்படை |
| மதுரை. | – | மதுரைக்காஞ்சி |
| வாழ்த்து. | – | வாழ்த்துக்காதை |
| வி.பெ. | – | விளையாட்டின் பெயர் |

# பொருளடக்கம்

# முன்னுரை

"சங்க இலக்கிய விளையாட்டுக்களும் - நாட்டுப்புற விளையாட்டுக்களும் ஓர் ஆய்வு" என்ற தலைப்பில் இவ்வாய்வேடு அமைந்துள்ளது.

**சங்க இலக்கிய விளையாட்டுக்கள்**

சங்ககாலம், தமிழக மக்கள் வாழ்க்கையில் ஒரு மாறுதல் நிலையைக் குறிக்கும் காலமாகும். இம்மாறுதலையும், வேறுபாடுகளையும், சில தவிர்க்கவியலா உண்மைகளையும் நமக்கு உணர்த்துவன சங்க இலக்கியங்கள். இலக்கியம் என்பது எந்தக் காலத்திலும் சமுதாயத்தின் முழுமையான சித்தரிப்பு என்று சொல்ல முடியாது. உயர்ந்த கருத்துக்களைப் பதிவு செய்த வார்ப்படமாகச் சங்க இலக்கியங்கள் திகழுகின்றன. வாழ்க்கை முறையை வகை, தொகைப்படுத்தி இப்படி வாழுதல் நலம் பயக்குமெனச் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. இவை குறித்து நமக்குச் சான்றுகளாக உள்ள சங்கநூல்கள், பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் இவற்றை அடிப்படையாகக் கொண்டு வாழ்க்கை முறைமையை எண்ணிப் பார்க்க வேண்டும்.

சங்க நூல்கள் காதலையும், போரையும் பாடியுள்ளன. காதல்-போர் காரணமாக விளையாட்டுக்கள் தோன்றியுள்ளன.

பொதுவாக விளையாட்டுக்கள் மக்கள் வாழ்வில் பொழுது போக்கிற்காகவும், மனமகிழ்ச்சிக்காகவும், வீரத்தைக் காட்டுவதாகவும் அமைகின்றன.

சில விளையாட்டுக்கள் தந்திரத்தினால் சிலருடைய பொருள் இழப்பிற்குக் காரணமாகவும் அமைகின்றன. சில விளையாட்டுக்கள் உடற்பயிற்சியோடு அறிவுத்திறன் உடையதாகவும் காணப்படுகின்றன.

விளையாட்டுக்கள் பொதுவாக அகவிளையாட்டுக்கள் புறவிளையாட்டுக்கள் என்று பிரிக்கப்பட்டு மகளிர் விளையாட்டுக்கள், சிறுவர்-சிறுமியர் விளையாட்டுக்கள்

அகவிளையாட்டுக்களாகவும், ஆண்கள் விளையாட்டுக்கள் புறவிளையாட்டுக்களாகவும் கூறப்படுகின்றன.

இவ்விளையாட்டுக்களுக்கும் விதிவிலக்குகள் இருந்துள்ளன. காலத்திற்கும், சூழ்நிலைக்கும், மனநிலைக்கும் ஏற்பப் பெண்களும் சில புறவிளையாட்டுக்களில் ஈடுபட்டுள்ளனர். இவைதவிர, காலத்திற்கேற்ப சில விளையாட்டுக்களும், வசதியையொட்டி அமைக்கப்பட்டுள்ளதையும் கருத்தில் கொள்ள வேண்டியுள்ளது.

**நாட்டுப்புற விளையாட்டுக்கள்**

உலக இலக்கியங்களில் எழுத்திலக்கியம் தோன்றுவதற்கு முன்பே வாய்மொழி இலக்கியம் தோன்றியிருத்தல் வேண்டும் என்பது யாவரும் அறிந்ததே. மனித இன வரலாறு என்று தொடங்கியதோ அன்றே வாய்மொழி இலக்கியங்கள் தோன்றியது எனலாம்.

தொன்மை வாய்ந்ததாகக் கருதப்படும் தொல்காப்பியத்திலும் வாய்மொழி இலக்கிய வகைகள் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. தமிழ் மொழி வரலாறு வரையறுக்க இயலாத காலந்தொட்டே இந்நாட்டுப்புற விளையாட்டுப் பாடல்கள் தோன்றியுள்ளன.

நாட்டுப்புறப் பாடல்கள் கதை, கதைப்பாடல்கள் பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், தெய்வங்கள், வேளாண்மை, மருத்துவம், கலை, கைவினைப் பொருட்கள் போன்றே நாட்டுப்புற விளையாட்டுக்களும், நாட்டுப்புறவியலின் முக்கியக் கூறாக விளங்குகின்றன.

வீரத்தோடு மனமகிழ்ச்சியும் இணைய விளையாட்டுக்கள் தோன்றலாயின. வீரத்தை வளர்க்க, பயத்தை விரட்ட, நம்பிக்கையை வளப்படுத்த, நண்பர்களைப் பெருக்க, பொழுதுபோக்கை வரவேற்க, முரண்பாட்டைத் தவிர்க்க, வாழ்க்கையினையும், தொழிலினையும் எதிரொலிக்க, போலச் செய்தல் எனப் பலநிலைகளில் விளையாட்டுக்கள் தோன்றலாயின.

விளையாட்டால் ‘உவகை’ கிடைக்கும் என்பதைத் தொல்காப்பியம்,

செல்வம் புலனே புணர்வு விளையாட்டென்று
அல்லல் நீத்த உவகை நான்கே (தொல்., நூ.1205)

என்ற நூற்பாவில் சுட்டியுள்ளது.

விளையாட்டுக்களைப் பற்றிப் பலகொள்கைகள் கூறப்படுகின்றன. விளையாட்டுக்களை அவற்றின் நிலைக்கொண்டு வீரவிளையாடல்கள், பொழுது போக்கு விளையாடல்கள் என்று இருவகையாகப் பகுக்கலாம். வீரவிளையாடல்கள் உடலுக்கு வேலை தருவனவாகவும்; பொழுது போக்கு விளையாடல்கள் அறிவுக்கு வேலை தருவனவாகவும் அமைந்துள்ளன.

நாட்டுப்புற மக்களின் நாகரிகம், பண்பாடு, வாழ்க்கை நிலை-சமுதாய உணர்வு-பழக்க வழக்கங்கள் ஆகிய அனைத்தையும் பிரதிபலிக்கும் நிலைக்களன்களாக நாட்டுப்புற விளையாட்டுக்கள் அமைந்துள்ளன.

## ஆய்வுத் தலைப்பு

சங்க இலக்கிய விளையாட்டுக்களும்-நாட்டுப்புற விளையாட்டுக்களும் ஓர் ஆய்வு.

சங்க இலக்கிய-நாட்டுப்புற விளையாட்டுக்களைப் பற்றிய இவ்வாய்வின் மூலம் மக்களின் நாகரிகம், பண்பாடு, வாழ்வியல் முறைகள் விளையாடப்பெறும் விளையாட்டுக்கள் பற்றிய செய்திகளை அறிந்து கொள்ள முடிகிறது.

இருவகையான அகப்புற விளையாட்டுக்கள் மூலம்-விளையாட்டுக்களின் ஒற்றுமை-வேற்றுமைகளும் மக்களின் பண்பாடு, கலாச்சாரம், நாகரிகம், வாழ்வியல் போன்றவற்றை அறிந்து வெளியுலகிற்கு உணர்த்தும் பொருட்டும் காலத்தால், சூழலால் அழிந்தும், சிதைந்தும் மாறியும் வரும் விளையாட்டுக்களை, அவற்றின் அமைப்புகளை ஆவணப்படுத்தும் பொருட்டும் மேற்குறிப்பிட்ட தலைப்பு ஆய்விற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது. ஒரு சில விளையாட்டுக்களில் சில காரணங்களால் மாற்றம்

ஏற்பட்டுள்ளன. அவ்வக்காரணங்களை ஆராய்வதும் இவ்வாய்வேட்டின் கருதுகோளாக அமைந்துள்ளன.

**முன்னாய்வுகள்**

இலக்கியத்தில் விளையாட்டுக்கள் தொடர்பாக நடந்த ஆய்வுகள் மிகக் குறைவு. இப்பொருளில் வெளிவந்த நூல்களும் குறைவு; கட்டுரைகளும் குறைவு. தமிழக வரலாறு எழுதியவர்கள், ஒரு சிறு பகுதி என்ற அளவில் மட்டும், தம் நூல்களில், விளையாட்டுக்கள் பற்றி எழுதியுள்ளார்கள். ஏனெனில் ஆதாரங்கள் பெரும்பாலும் சுட்டிச் சொல்லப்படவில்லை. எடுத்துக்காட்டாக இவற்றிலுள்ள "பந்து விளையாட்டுச் சிறுவரால் விரும்பப்பட்டது" என்ற செய்தியையும்,[1] "கால்பந்தாட்டம் பெருவழக்கான ஆட்டம்" என்ற செய்தியையும்[2] குறிப்பிடலாம்.

தமிழில் அம்மானைப் பாடல்கள் என்ற தலைப்பில் ஓர் ஆய்வு நடந்துள்ளது.[3] இதில் "சங்க இலக்கியத்தில் மகளிர் ஆட்டங்கள்" என்பது ஓர் இயல். இதில் பெண்பாலார் விளையாட்டுக்கள் மட்டும் ஆராயப்பட்டுள்ளன. ஆண்பாலார் விளையாட்டுக்களையும், இருபாலார் விளையாட்டுக்களையும் ஆய்வாளர் எவ்வகையிலும் எடுத்துக் கொள்ளவில்லை.

இலக்கியங்களை வரலாற்றுப் பின்னணியில் சிலர் ஆராய்ந்துள்ளனர். இவற்றில் அவர்கள், விளையாட்டுக்கள் பற்றியும் பொழுதுபோக்குகள் பற்றியும் விவரித்துள்ளனர். இவ்வகைக்குச் சான்றாக "வரலாற்றுப் பின்னணியில் அகநானூறு" என்ற ஆய்வைச் சுட்டலாம்.

தமிழில் 1238 தலைப்புகளில் ஆய்வுகள் நடந்துள்ளதாகத் தமிழியல் ஆய்வு விவரநூல் தகவல் தருகிறது. [4] இந்த எண்ணிக்கையில், நிறைகலை வகுப்பு ஆய்வுகளும்

---

1 ந.சு.கந்தையா பிள்ளை, தமிழ் இந்தியா, ப.69.

2 Pillay, K.K., **A Social History of the Tamils**, Vol.I, p.323.

3 Annie Thomas, **Dt. Dissertations on Tamilology**, p.164.

4 மேற்படி, ப.164.

அடங்கும். இவ்வாறிருந்தும், அவற்றில் 'விளையாட்டுக்கள்' பற்றி ஓர் ஆய்வுத் தலைப்பும் காணப்படவில்லை. இத்துறையில் ஆராய ஏன் எவரும் பல ஆண்டுகளாக முன்வரவில்லை என்பது புதிராக உள்ளது. ஆனால் கடினமான பொருள்களைப் பற்றியெல்லாம் ஆராய்ந்துள்ளனர். சான்றாகப், 'பழந்தமிழ் இசை', 'பழந்தமிழ் இலக்கியத்தில் அறிவியல்' என்ற தலைப்புகளைச் சுட்டலாம்.[5]

தற்பொழுது ஒரு பத்தாண்டுக் காலமாக மட்டுமே, ஒரு சிலர் இத்துறையில் ஆராய முன்வந்துள்ளனர். "தமிழர்களின் நீராடல், "தமிழிலக்கியத்தில் மகளிர் விளையாட்டுக்களும் நோன்புகளும்" கி.பி. பத்தாம் நூற்றாண்டு வரை, "தமிழர் நாட்டுப்புற விளையாட்டுக்கள்", "நாட்டுப்புறப் பாடல்கள் - ஓர் ஆய்வு (தொழிலும் விளையாட்டும்)", "தமிழரின் விழாக்களும் பொழுதுபோக்கும் - கி.பி. மூன்றாம் நூற்றாண்டு வரை" என்ற தலைப்புகளில் ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.[6]

விளையாட்டுக்கள் பற்றி ஆராய நிறைய வாய்ப்புள்ளது. சங்க இலக்கியம், காப்பியங்கள், பக்தி இலக்கியங்கள், சிறு பிரபந்தங்கள், நாட்டுப்புற இலக்கியங்கள் என்ற பல பிரிவுகளுள் ஏதேனும் ஒன்றிலுள்ள விளையாட்டுக்களை, ஆராய்ந்து முடிவுகளை ஒருவர் புலப்படுத்தலாம்.

இவ்வாறே, இலக்கண நூல்கள் மற்றும் உரையாசிரியர் விளக்கங்களிலுள்ள செய்திகளையும் ஆராய்ந்து முடிவுகளை வெளிக்கொணரலாம். இவ்வகை ஆய்வுகளை மேற்கொண்டு முடிவுகளைத் தந்துதவினால், தமிழ்நாட்டு விளையாட்டுக்கள் பற்றிப் பற்பல வகைகளில் ஒப்பீட்டு ஆய்வுகளும், நுட்ப ஆய்வுகளும் செய்யப் பிற ஆய்வாளர்களுக்கு நல்ல வழிகாட்டுதலாக அமையும். இவற்றால், தமிழ்நாட்டு விளையாட்டுக்கள் பற்றி நூல் எழுதத் தேவைப்படும் ஆதாரங்களைச் செம்மையாகப் பெற இயலும்.

---

5 மேற்படி, பக்.207, 210.

6 தமிழண்ணல் & முத்தையா, தமிழியல் ஆய்வு, ப.

## ஆய்வுச்சிக்கல்

விளையாட்டுக்களை ஆராயாமல் இருந்ததற்குக் காரணம் என்ன? அத்துறை சார்ந்த செய்திகள், ஆராய்தற்குப் போதுமான அளவு, நூல்களில் குறிப்பிடப்படாமல் இருந்திருக்கலாமோ என்ற ஐயம் இந்த ஆய்வாளர்க்கு இருந்து வந்தது. இலக்கியங்களை மேலோட்டமாகப் படித்துப் பார்த்த பொழுது, அவற்றில் பெண்கள் விளையாட்டுக்கள் மட்டும் சில தென்பட்டன. மேலும் நிகண்டுகளில், பெண்களின் விளையாட்டுக்களைக் குறிக்கும் சொற்கள் மட்டும் தொகுத்துத் தரப்பட்டிருந்ததும் அறியப்பட்டது.

'சங்க இலக்கியத்தில் விளையாட்டுக்கள்' என்ற இரா.நஞ்சுண்டான் நூலில் ஆண்பாலார் விளையாட்டுக்கள், பெண்பாலார் விளையாட்டுக்கள், இருபாலார் சேர்ந்து விளையாடிய நீர் விளையாட்டும் மொத்தம் முப்பத்தைந்து விளையாட்டுக்கள் குறித்து அறியப்பட்டது.

நாட்டுப்புற விளையாட்டுக்கள் தொடர்பான ஆய்வு நூல்களையும், பல இலக்கியங்களையும் ஆதாரமாகக் கொண்டு சிக்கலைச் சோதித்தால் அதில் கிடைக்கும் முடிவு உறுதியும் தெளிவும் கொண்டதாய் இருக்கும் என்று கருதப்பட்டது. இவ்வகையில் இந்த ஆய்வு மேற்கொள்ளப்பட்டது.

## ஆய்வுக்களம்

தஞ்சை வட்டத்தைச் சேர்ந்த பத்து கிராமங்களே தேர்ந்தெடுத்துக் கொண்ட ஆய்வுக்களப் பகுதியாகும்.

1. கள்ளப்பெரம்பூர்
2. சித்திரக்குடி
3. இராயந்தூர்
4. கல்விராயன்பேட்டை
5. பிள்ளையார் நத்தம்
6. சீராளூர்
7. வெண்ணெலோடை
8. சக்கரசாமந்தம்


THANJAVUR DISTRICT
EIGHT MILES TO AN INCH
SOUTH ARCOT
PERAMBALUR
TIRUVIDAI-MARUDUR
NAGAPATTINAM
TIRUCHIRAPPALLI
KUMBAKONAM
PAPANASAM
THIRUVAIYARU
VALANGIMAN
THANJAVUR
ORATHANAD
TIRUVARUR
PUDUKKOTTAI
PATTUKKOTTAI
PERAVURANI
PALK STRAIT
REFERENCE
Boundary
Boundary
Highways
Roads
Line

9. வண்ணாரப்பேட்டை

10. மேலவெளித்தோட்டம்

இவ்வூர்களுக்குச் சென்று களப்பணியினை மேற்கொண்டு சேகரித்த தரவுகளைச் செம்மையாக்கி ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது. பத்துப்பாட்டு, எட்டுத்தொகை நூல்கள், நாட்டுப்புறத்தில் ஆண்கள், பெண்கள், சிறுவர்கள், சிறுமியர்களிடமிருந்து விளையாட்டு வகைகள் பற்றித் திரட்டப்பட்ட களப்பணிச் செய்திகள் முதன்மையான சான்றாதாரங்களாகும்.

மேலும், சங்க இலக்கிய நாட்டுப்புற விளையாட்டுக் குறித்த செய்திகள் கொண்ட பல்வேறு நூல்கள், கட்டுரைகள், இதழ்கள் போன்றவை இவ்வாய்வேட்டிற்குத் துணைமைச் சான்றாதாரங்களாக அமைகின்றன.

**தஞ்சை மாவட்டப் பூகோள அமைப்பு**

(Geographical distribution) பின்வருமாறு விளக்கப்பட்டுள்ளது.

**புதிய தஞ்சை மாவட்டம்**

தஞ்சாவூர், திருவையாறு, பாபநாசம், கும்பகோணம், வலங்கைமான், திருவிடைமருதூர், ஒரத்தநாடு, பட்டுக்கோட்டை, பேராவூரணி என ஒன்பது வட்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

தஞ்சை மாவட்டத்தில் தஞ்சை வட்டமே ஆய்வுப்பகுதி. தஞ்சை வட்டத்தில் 85 கிராமங்கள் உள்ளன. மொத்தப் பரப்பளவு 60,045.40 ஹெக்டர்.

| | | |
|---|---|---|
| ஆண்கள் | : | 1,94,048 |
| பெண்கள் | : | 97,760 |
| சிறுவர்கள் | : | 13,357 |
| சிறுமிகள் | : | 12,929 |

ஆய்வுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள 12 கிராமங்களின் விவரக்குறிப்புக்கள் அட்டவணை 1இல் கொடுக்கப்பட்டுள்ளன. மேற்கூறப்பட்ட புள்ளி விவரங்கள் மற்றும் வரைபடம் களப்பணி வாயிலாகத் தஞ்சை மாவட்ட ஆட்சியர் அலுவலகத்தில் இருந்து சேகரிக்கப்பட்டன.

புதிய தஞ்சை மாவட்டம் பிரிவதற்கு முன்னர், பழைய தஞ்சை மாவட்டம், திருவாரூர், நாகப்பட்டினம் பகுதிகளையும் தன்னகத்தே கொண்டிருந்தது.

அட்டவணை – 1

ஆய்வுப்பகுதியின் விவரக் குறிப்புகள்

| வ.எண் | ஊர் | பரப்பளவு | ஆண்கள் | பெண்கள் | சிறுவர்கள் | சிறுமியர்கள் |
|---|---|---|---|---|---|---|
| 1. | சித்திரக்குடி | 822.25 | 1621 | 1427 | 238 | 180 |
| 2. | இராயந்தூர் | 589.91 | 829 | 850 | 109 | 126 |
| 3. | கல்விராயன்பேட்டை | 553.00 | 708 | 725 | 98 | 105 |
| 4. | பெரம்பூர்-II சேத்தி | 835.48 | 867 | 904 | 112 | 104 |
| 5. | பெரம்பூர்-I சேத்தி | 329.50 | 1067 | 1065 | 155 | 157 |
| 6. | பிள்ளையார் நத்தம் | 685.33 | 890 | 862 | 98 | 88 |
| 7. | சீராளூர் | 296.57 | 424 | 443 | 52 | 58 |
| 8. | வெண்ணெய் ஓடை | 197.06 | 162 | 157 | 20 | 20 |
| 9. | சக்கரசாமந்தம் | 310.09 | 919 | 934 | 132 | 127 |
| 10. | பள்ளியேறி | 236.21 | 223 | 247 | 22 | 35 |
| 11. | வண்ணாரப்பேட்டை | 801.83 | 1182 | 1226 | 181 | 142 |
| 12. | மேலவெளித்தோட்டம் | 662.24 | 1880 | 1789 | 235 | 221 |

## ஆய்வுநெறிமுறை

விளையாட்டுக்கள் தொடர்பான செய்திகள் சங்க இலக்கியங்களில் - நாட்டுப்புறங்களில் எவ்வாறு ஒத்தும், வேறுபட்டும் உள்ளன என்ற வினாக்களுக்கு விடைகாண்பது ஆய்வின் நோக்கமாதலால், இதற்குத் 'தொகை வகைவிரி' என்ற நெறிமுறை பயன்படும் என்று கருதப்பட்டது. ஆதலால் சங்க இலக்கியங்களில், நாட்டுப்புற மக்களின் விளையாட்டு நிகழ்ச்சிகளைக் கற்றுத் தெளிந்து, தொகுத்து, ஒரு சில அடிப்படைகளில் சில பிரிவுகளாக வகுத்துக் கொண்டு, பின்னர் அவ்வப்பிரிவுகளின்

*கீழ்த் தொடர்புடைய விளையாட்டுக்களை விரித்து எழுதுவதாக ஆய்வு நெறிமுறை அமைத்துக் கொள்ளப்பட்டது.*

## ஆய்வேட்டின் அமைப்பு

*"சங்க இலக்கிய விளையாட்டுக்களும் - நாட்டுப்புற விளையாட்டுக்களும் ஓர் ஆய்வு" என்ற இவ்வாய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களைக் கொண்டுள்ளது.*

1. *சங்க இலக்கிய விளையாட்டுக்கள்-நாட்டுப்புற விளையாட்டுக்கள்-ஒரு பார்வை.*
2. *சிறுவர்-சிறுமியர் விளையாட்டுக்கள்.*
3. *ஆடவர் விளையாட்டுக்கள்.*
4. *பெண்கள் விளையாட்டுக்கள்.*
5. *சங்க இலக்கிய-நாட்டுப்புற விளையாட்டுக்கள்-ஓர் ஒப்பீடு.*

## இயல்1. சங்க இலக்கிய விளையாட்டுக்கள் - நாட்டுப்புற விளையாட்டுக்கள்-ஒரு பார்வை

*இவ்வியலில் விளையாட்டுக்கள் தொடர்பான விளக்கங்களும் பல்வேறு அறிஞர்களின் கருத்துக்களும் விளக்கப்பட்டுள்ளன.*

*சங்க இலக்கிய விளையாட்டுக்கள்-விளக்கம் அறிஞர்களின் கருத்துக்கள்-வரையறை-எடுத்துக்காட்டுக்களுடன் வகைப்பாடுகள் விளக்கப்பட்டுள்ளன.*

*நாட்டுப்புற விளையாட்டுக்கள்-விளக்கம் அறிஞர்களின் கருத்துக்கள்-வரையறை-வகைப்பாடுகள் எடுத்துக்காட்டுக்களுடன் விளக்கப்பட்டுள்ளன.*

*"உள்ளுக்குள்ளே அடைப்பட்டுக் கிடக்கும் கிளர்ச்சிகள் மனம் முறியாதபடி வெளிவருவதற்கு அமைந்த ஒரு வழியே விளையாட்டாம்"*[7] *என்பார் ஆப்பிள்டன்* (Appleton) *அம்மையார்.*

---

7 *சு.சண்முகசுந்தரம், நாட்டுப்புறவியல் ஆய்வு, ப.126.*

சங்க இலக்கிய-நாட்டுப்புற விளையாட்டுக்கள்-அறிஞர் கருத்துக்களில், வரையறைகளில், வகைப்பாடுகளில் கருத்துகள் ஒப்பீடு செய்யப்பட்டு விளக்கப்பட்டுள்ளன.

## இயல் 2. சிறுவர்-சிறுமியர் விளையாட்டுக்கள்

இவ்வியலில் விளையாட்டின் சில பொதுக்கூறுகள், விளையாட்டு வகைகள். சங்க இலக்கிய சிறுவர் விளையாட்டுக்கள் ஐந்தும் சிறுமியர் விளையாட்டுக்கள் ஐந்தும் சிறுவர், சிறுமியர் விளையாட்டுக்கள் மூன்றும் சான்றுகளுடன் விளக்கிக் கூறப்பட்டுள்ளன.

நாட்டுப்புறச்சிறுவர் விளையாட்டுக்கள் ஆறும், சிறுமியர் விளையாட்டுக்கள் ஐந்தும் சிறுவர்-சிறுமியர் விளையாட்டுக்கள் ஐந்தும், பாடல் மற்றும் விளையாட்டு முறைகள் விளக்கமாக கூறப்பட்டுள்ளன.

சிறுவர்-சிறுமியர் விளையாட்டுக்கள்-சங்க இலக்கிய-நாட்டுப்புற விளையாட்டுக்களாக வகைப்படுத்தியும் ஒப்பிட்டும் பார்க்கப்பட்டுள்ளன.

## இயல் 3. ஆடவர் விளையாட்டுக்கள்

சங்க இலக்கிய ஆடவர் விளையாட்டுக்கள், நாட்டுப்புற ஆண்கள் விளையாட்டுக்கள், உடல்திறன் விளையாட்டுக்கள், அறிவுத்திறன் விளையாட்டுக்கள், பொறிபுலன் இயக்க விளையாட்டுக்கள்-உடல், அறிவு, பொறிபுலன் மூன்றும் இணைந்த விளையாட்டுக்கள் என எடுத்துக்காட்டுகளோடு-விரிவாக சொல்லப்பட்டுள்ளன. ஆடவர் விளையாட்டுக்கள் (சங்க இலக்கியம்) ஆறும் நாட்டுப்புற ஆடவர் விளையாட்டுக்கள் ஏழும் விரிவாக விளக்கி ஆராயப்பட்டுள்ளன.

சங்க இலக்கிய-நாட்டுப்புற ஆடவர் விளையாட்டுக்களின் ஒற்றுமை-வேற்றுமை ஆராயப்பட்டு விளக்கப்பட்டுள்ளன.

சங்க இலக்கிய-நாட்டுப்புற விளையாட்டுக்களில் கூறப்படும் இருபாலர் விளையாட்டுக்கள் ஒற்றுமை-வேற்றுமை-சான்றுகளுடன் விரிவாக விளக்கமாக ஆராயப்பட்டுள்ளன.

இதுகாறும் இவ்வாய்வேட்டின் ஐந்து இயல்களில் ஆராய்ந்து கண்ட மெய்ம்மைகள் முடிவுரையில் சுருங்கக் கூறப்பட்டுள்ளன. ஆராய்ச்சியின் முடிவுகளும் விளக்கப்பட்டுள்ளன.

இவ்வாய்விற்குத் துணைநின்ற நூல்கள் அகரநிரல் படுத்தப்பட்டுத் துணை நூற்பட்டியலில் கொடுக்கப்பட்டுள்ளன. இதனுடன் சங்க இலக்கிய விளையாட்டுக் கலைச் சொற்கள்-நாட்டுப்புற விளையாட்டுக் கலைச் சொற்களின் பட்டியல்கள், விளையாட்டுத் தொடர்பான சங்க இலக்கிய, நிகண்டு மேற்கோள் பட்டியல்கள் தகவலாளர் பட்டியல் இணைக்கப்பட்டுள்ளன.

# இயல் 1

# சங்க இலக்கிய விளையாட்டுக்கள் நாட்டுப்புற விளையாட்டுக்கள் - ஒரு பார்வை

*1.0.* முன்னுரை

*1.1.* விளையாட்டுக்கள் தொடர்பான விளக்கங்கள், அறிஞர்கள் கருத்துக்கள்

*1.2.* சங்க இலக்கிய விளையாட்டுக்கள்-விளக்கம்-அறிஞர்களின் கருத்துக்கள்-வரையறை-வகைப்பாடு

*1.3.* நாட்டுப்புற விளையாட்டுக்கள்-விளக்கம்-அறிஞர்களின் கருத்துக்கள்-வரையறை-வகைப்பாடு

*1.4.* சங்க இலக்கிய-நாட்டுப்புற விளையாட்டுக்கள்-ஒப்பீடு

*1.4.1.* அறிஞர் கருத்துக்கள்

*1.4.2.* வரையறை

*1.4.3.* வகைப்பாடு

*1.5.* தொகுப்புரை

# இயல் 1

# சங்க இலக்கிய விளையாட்டுக்கள் நாட்டுப்புற விளையாட்டுக்கள் - ஒரு பார்வை

## 1.0. முன்னுரை

விளையாட்டுப் பொழுபோக்கிற்காக மட்டுமின்றி உடல்நலம், மனநலம் பேணுபவையாகவும் உள்ளது. விளையாட்டை மனமகிழ்ச்சியூட்டும் செயல் என்றே குறிப்பர்.[1]

## விளையாட்டுக்கள்-தோற்றம்

வாழ்க்கையை ஒரு போராட்டமாகச் சந்தித்த முற்கால மனிதன் அதன்மூலம் பலபடிப்பினைகளைப் பெற்றான். தற்காப்புக்காகத் தாண்டியும், ஓடியும், நீந்தியும், மரமேறியும் பழகிய முற்கால மனிதன் கையில் கிடைத்தவற்றை வைத்துக் கொண்டு போராடவும் தயாரானான். நாடோடி வாழ்க்கையை விட்டுவிட்டு நிலைத்த வாழ்க்கைக்கு வந்தடைந்தபோது குழுவாழ்க்கையைப் புரிந்து கொண்டு செயல்பட்டான். அப்பொழுது அவன் பெற்ற பயிற்சி அவனது வீரத்தைப் புலப்படுத்த வகை செய்தது. வீரத்தோடு மனமகிழ்ச்சியும் இணைய விளையாட்டுக்கள் தோன்றலாயின. வீரத்தை வளர்க்க, அச்சத்தை அகற்ற, நம்பிக்கையை ஊட்ட, நண்பர்களைப் பெருக்க, பொழுது போக்கை வரவேற்க, முரண்பாட்டைத் தவிர்க்க வாழ்க்கையினையும், தொழிலினையும் எதிரொலிக்க, போலச் செய்தல் எனப் பலநிலைகளில் விளையாட்டுக்கள் தோன்றலாயின.

விளையாடும் மக்களின் மனநிலைக்கேற்பவும், சூழலுக்கேற்பவும் விளையாட்டினுள் மாற்றங்கள் சேர்க்கப்பெறுகின்றன. மக்கள் பொழுதுபோக்கிற்காகவும், வீரத்தைக் காட்டுவதற்கும் விளையாட்டுக்கள் அமைகின்றன. இவ்விளையாட்டுக்களிலே சில உடற்பயிற்சியோடு அமைந்ததாகவும் காணப்படுகின்றன.

---

1 சு.சக்திவேல், நாட்டுப்புறவியல் ஆய்வு, ப.246.

விளையாட்டு என்பது வெளித்தூண்டல்களின்றி மகிழ்ச்சியூட்டும் செயல்களில் இயற்கையாக ஈடுபடுவதாகும். வாழ்க்கைக்குப் பயிற்சி அளிக்கும் களம் விளையாட்டென்பர். விளையாட்டு சமூக நிறுவனமாகவும் கருதப்படுகின்றது. மனித இன வரலாற்றைக் கூர்ந்து நோக்கின் மனிதன் இன்றைய நிலையை எய்த பல்வேறு காலகட்டங்களைக் கடந்து முன்னேறியுள்ளான். அவற்றிற்காகப் பல பயிற்சிகளை மேற்கொண்டான். அப்பயிற்சிகள் காலப்போக்கில் விளையாட்டாகப் பரிணமித்தன. விளையாட்டு எல்லா மனித இனப் பண்பாட்டிலும் காணப்படுவதொன்றாகும்.

விளையாட்டு என்பது அமைப்புடைய ஆட்டமாகவும் போட்டியை ஏற்படுத்துவதாகவும் வெற்றியை நிர்ணயிக்கும் விதிகளைக் கொண்டதாகவும், விதிகள் பலரால் ஏற்றுக் கொள்ளத்தக்கதாகவும் இருக்க வேண்டும். சிறந்த உடற்கட்டினைப்பெற, அன்றாட வாழ்க்கையில் துன்பத்தை மறக்க, பிறருடன் பகை, நொதுமல் ஆகிய உணர்ச்சிகளின்றி நட்புடன் பழக, உள்ளத்திற்குத் தேவையான ஓய்வைத் தரும் உறக்கம்பெற, மனம் வலிமைபெற, ‘ A sound mind is a sound body’ என்ற நிலைபெற, ஓர் அணியில் பங்கேற்று விளையாடுவதால், கூட்டுறவு மனப்பான்மை உண்டாக, தன் அணிக்காகப் போராடும் மனப்பக்குவம்பெற, சமுதாயத்தார் வெற்றி பெற்றால் பாராட்டுகையில் அளவில்லா மகிழ்ச்சி பெற, மனிதரை அழிக்கும் தன்மையைக் கொண்ட சோம்பலை அறவே ஓட்டி சுறுசுறுப்பாகிய சிறந்த பண்பைப் பெற, இன்று தோற்பவன் நாளை வெற்றியடையலாம் என்ற உயரிய கருத்தினை மனத்தில் கொண்டு விடாமுயற்சியுடன் பயிற்சி பெற்று வெற்றி பெற்று பாராட்டுப் பெற விளையாட்டுக்கள் வாய்ப்பளிக்கின்றன.

### 1.1. அறிஞர்களின் கருத்துக்கள்

‘விளையாட்டு என்பது வாழ்க்கைக்குப் பயிற்சியளிக்கும் களம்’[2] என்றும், பொதுவாக ‘விளையாட்டுக்களை அகவிளையாட்டுக்கள் (Indoor Games), புறவிளையாட்டுக்கள் (Outdoor Games) என இருவகைப்படுத்தலாம்’[3] என்றும்,

---

2 இரா.பாலசுப்பிரமணியம், தமிழ்நாட்டு விளையாட்டுக்கள், ப.2.

3 கி.கருணாகரன், நாட்டுப்புறவியலாய்வு நெறிமுறைகள், ப.68.

விளையாட்டு என்பது, 'மனமகிழ்வுணர்வுடன் தொடங்கி மகிழ்வுணர்வுடன் நிகழ்ந்து மகிழ்வுணர்வுடன் முடிவது'[4] என்றும், 'இன்பம் மட்டும் விளைவிப்பது'[5] என்றும், 'விளையாட்டு அதன் செயற்பாட்டிலேயே அமைதி, ஆறுதல்,இன்பம் தருவது'[6] என்றும் சுட்டுவர்.

'விளையாட்டு என்பது ஒருசெயல், அதில் மனநிறைவு என்பது ஒரு பகுதி தன் ஆற்றலை வெளிப்படுத்தும் ஒரு இனிய கருவியாகவும் விளையாட்டு அமைகிறது'[7] எனவும், 'விரும்புகிற ஆட்டம்'[8] எனவும், 'இன்பம் விளைவிக்கும் ஆட்டம்'[9] எனவும், 'விதிகளை விளைவித்துக் கொண்டு ஆடும் ஆட்டம்'[10] எனவும் கூறுவர்.

'விளையாட்டிற்கு இலக்கணம் கூறுவது எளிதன்று'[11] எனவும், 'விளையாட்டு என்ற சொல்லானது என்ன பொருளைத் தரும் என்று பகுத்துப் பார்க்கக் கூடிய அக்கணத்திலேயே அதை விளக்குவதும் நிகழ்த்துவதும் எவ்வளவு கடினமானது'[12] என்றும் கூறுகின்றனர்.

விளையாட்டு என்பதற்குத் தமிழ்ப் பேரகராதி (Tamil Lexicon) ஐந்து பொருளைத் தந்துள்ளது. அவை, 1. பொழுதுபோக்குக்குரிய மகிழ்ச்சிச் செயல், 2. சிரமமின்றி இலேசாகச் செய்யுந் தொழில், 3. வேடிக்கை, 4. காமலீலை, 5. கலைத்தொழில் எட்டனுள் பாட நினைத்த வண்ணத்தில் சந்தத்தை விடுகை என்பன.[13]

---

[4] க.பெருமாள், விளையாட்டுக்கலை, ப.9.

[5] எஸ்.நவராஜ் செல்லையா, விளையாட்டுக்களின் விதிகள் 72, முன்னுரை.

[6] சிவகுருநாதன், சிறுமகளிர் விளையாட்டு, ப.125.

[7] வ.பெருமாள், மகளிர் விளையாட்டுக்கள், ப.125.

[8] ஞா.தேவநேயன், தமிழ்நாட்டு விளையாட்டுக்கள்.

[9] மு.இராகவையங்கார், விலங்குப் போர் விளையாட்டு, ப.297.

[10] க.மீனாட்சி சுந்தரம், பன்மையில் ஒருமை, ப.74.

[11] ஈ.த.இராசேசுவரி, குழவி உள்ளம், ப.5.

[12] கோ.சுப்பிரமணியப் பிள்ளை, பண்ணை விளையாட்டுக்கள், ப.12.

[13] Tamil Lexicon, Vol.VI, Part I, p.3730.

மொழியியல் வகையில் இதனை ஆராய்ந்த ஒருவர், விளையாட்டிலுள்ள 'விளை' என்பது மொழியியலார் சிந்தனைக்குள் அகப்படாமல், விளையாட்டுக் காட்டுகிறது என்று தெரிவித்துள்ளார்.[14]

ஓய்வு வேலையில் மனமகிழ்வுக்காகச் செய்யக்கூடிய எளிய அல்லது வேடிக்கையான செயல்களில் சில வரையறைகள் வகுக்கப்பட்டால் விளையாட்டிலும் ஒழுங்கு முறை ஆட்டம் உருவாகிறது. ஒழுங்கு முறைகளை ஒழுங்காகக் கடைப்பிடித்து வெற்றி பெறுகின்றவர்களைக் கண்டறிய முற்படும் பொழுது போட்டியாட்டம் ஏற்பட்டு விடுகிறது. போட்டியாட்டத்தின் வெற்றி அல்லது முடிவினை அறிவிக்க முற்படும் போது விளையாட்டின் தரம், உயர்வு நிச்சயிக்கப்படுகிறது. இம்முடிவினைப் பெற உடல்திறனோ, அல்லது அறிவுத்திறனோ அல்லது வாய்ப்பு நிலையோ காரணமாக இருக்கலாம். "உடல்திறன், அறிவுத்திறன் வளர்ச்சிக்கு உணவு முக்கிய இடத்தை வகிக்கிறது. நல்ல சத்துள்ள ஊட்ட உணவு தேவைக்கேற்ப உண்ணும் பொழுது விளையாட்டுத் துறையிலும் ஒளிவிட முடிகிறது"[15] என்கிறார்.

விளையாட்டு இன்பந் தருவது பற்றியே 'நகை விளையாட்டு'[16] என்றும், நயந்து ஆடும் விளையாட்டு,[17] என்றும், "இன்பக்காரணமாம் விளையாட்டு"[18] என்றும் சங்க நூல்கள் கூறுகின்றன.

### 1.2. விளையாட்டு - விளக்கம்

'ஆடு' என்னும் வினையடிச் சொல்லோடு 'அல்' என்னும் தொழிற்பெயர் விகுதியைச் சேர்க்க 'ஆடல்' என்னும் பெயர்ச்சொல் தோன்றுகிறது. 'ஆட்டு' என்னும் சொல்லோடு 'அம்' என்னும் விகுதியைச் சேர்த்து ஆட்டம் என்னும் சொல்லைப் பயன்படுத்துகின்றனர்.

---

14 மு.வை.அரவிந்தன், மொழியியல் சிந்தனைகள், ப.79.

15 சு.சிவகாமசுந்தரி, மனையியல், ப.5.

16 குறுந்தொகை, 394:6.

17 அகநானூறு, 302:7.

18 சீவகசிந்தாமணி, 58:909.

'விளை' என்றால் விருப்பம் எனப்பொருள் கொண்டு' விரும்பியாடும் ஆட்டம் விளையாட்டு' என்று விளக்குகின்றார் தேவநேயப்பாவாணர். 'விளை' என்னும் சொல்லுக்கு மூலச் சொல்லாக 'விழை' என்று கூறி 'விழையாட்டு' என மாறி இருக்கலாம் என மு.வை.அரவிந்தன் விளக்குகிறார். விளையாட்டு என்னும் சொல்லுக்கு இணையாகத் தொல்காப்பியத்தில் 'பண்ணை' என்னும் சொல் கையாளப்பட்டுள்ளது. இதை,

கெடவரல் பண்ணை ஆயிரண்டும் விளையாட்டே[19] (தொல்.உரியியல், நூ.21)

என்கிறது தொல்காப்பியம்.

விளையாட்டெனில் ஆட்டம் (Play) போட்டி விளையாட்டு (Game), வன்மை விளையாட்டு (Sports), இன்பப் பொழுது போக்கு (Recreation) என்ற தொடர்ச்சி வகையினைச் சொற்களஞ்சியம் தருகிறது.

விளையாட்டின் அடிப்படை இயல்பு, விளையாட்டின் பயன், ஏன் விளையாடுகிறோம் போன்றவற்றிற்குப் பதிலிறுக்கும் வகையாக விளையாட்டுப் பற்றிய கொள்கையே (Theories Play) எழுந்தது.

1. மிகை ஆற்றல் கொள்கை (Surplus energy Theory)
2. ஆயத்தக் கொள்கை (Preparatory Theory)
3. புணராக்கக் கொள்கை (Recapitulatory Theory)
4. பொழுதுபோக்குக் கொள்கை (Recreation Theory)
5. காலுதற் கொள்கை (Eathartic Theory)
6. போட்டி மனப்பான்மை (Rivabry)

இவ்வாறு, விளையாட்டிற்கான விளக்கங்கள் அமைந்துள்ளன.

**சங்ககால மக்கள் வாழ்க்கையில் விளையாட்டுக்கள் பெற்றிருந்த இடம்**

சங்க நூல்கள் காதலையும், போரையும் பாடியுள்ளன. எனினும் மக்கள் தொடர்பான செய்திகளைச் சுட்டிச் சொல்லவும், விரிவாகப் பேசவும் அவை

[19] தொல்காப்பியம், உரியியல், நூ.21.

தவறவில்லை. சமய வழக்கங்களைப் பற்றியும், நடைமுறைகளைப் பற்றியும் கூறிச் சென்ற போதும் சமயச் சார்பான நூலாக எதுவும் அமையவில்லையென்பது குறிப்பிடத்தக்கது. சமூக மரபுகள், பழக்க வழக்கங்கள், நடைமுறைகள், பொழுது போக்குகள் பற்றிக் குறிப்பிடவும் தவறவில்லை.

மன்னர் ஆட்சியின் செழுமை சங்க காலத்தில் மேலோங்கி இருந்தது. மக்கள் வாழ்க்கையில் அமைதியும், முன்னேற்றமும், நிறைவும் காணவேண்டுமென உணர்ந்து அதனை வளர்க்கத் தலைப்பட்டனர்.

மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம் என்பதற்கேற்ப, மக்களின் தந்தையாக அரசன் விளங்க வேண்டுமென விரும்பியதை, "காவல் குழவி கொள்பவரி னோம்புமதி"[20] என்றும், புலி தன் குருளைகளைப் பேணுவதுபோல அரசன் மக்களைப் பேணி நடத்தியதை, "புலி புறங்காக்கும் குருளை போல"[21] என்றும் புறநானூறு எடுத்துக் காட்டுகிறது. இத்தகு உறவினைச் சங்க காலத்து நாட்டாட்சி நிலை நாட்டியதால், நாட்டில் உள்ள மக்கள் அனைவரும் எல்லாக் கலைகளிலும், சிறப்புக்களிலும் மேலோங்கி வாழ்ந்தனர்.

அவ்வகையில் சங்க கால மக்கள் பண்பாட்டு வரலாற்றில் குறிப்பிடத்தக்க இடம் பெறுவதாக விளையாட்டுக்கள் உள்ளன. விளையாட்டுக்கள் பற்றிய நோக்கம், அமைப்பு, விளைவு பற்றிய தனிக் குறிப்புகளெல்லாம் கிடைக்கவில்லையென்பது உண்மையென்றாலும் சங்க கால மக்கள் பல்வேறு விளையாட்டுக்களை மிக விரும்பி விளையாடியுள்ளனர். விளையாட்டுக்கள் அக்காலத்தில் சிறப்புற்று விளங்கியது என்பதற்கு மன்னர்களே விளையாடியுள்ளமை சான்றாக உள்ளன. மக்கள் பார்க்க மன்னர்களும், மன்னர்கள் வாழ்த்திப் பாராட்டிப் பரிசுகள் வழங்க மக்களும் விளையாடியுள்ளனர்.

---

20 புறநானூறு, 5:6-7.

21 மேற்படி, 42:10.,

உற்றுழி யுதவியு முறுபொருள் கொடுத்தும்

பிற்றைநிலை முனியாது கற்ற னன்றே[22]

என மன்னனே கல்வியின் முக்கியத்துவம் குறித்துப் பாடியுள்ளதால், கல்வியின் ஓர் அங்கமாக விளையாட்டுக்கள் கவனித்துக் கருதப்பட்டது எனக் கருத இடமுள்ளது. எழுதவும், படிக்கவும் அறிந்திருந்த சங்க கால மக்கள், உயிரையும், உணர்வையும், உடல் ஆற்றலையும் வளர்த்துக் கொள்ள முனைந்திருந்தனர்.

பொருதுபட்ட வீரரின் பெயரை உலகமறிய நடுகல்லில் எழுதும் வழக்கத்தை மலைபடுகடாம்,

பெயர்மருங் கறிமார்

கல்லெறிந் தெழுதிய நல்லரை மராஅத்த[23]

எனக் குறிக்கிறது. பதிற்றுப்பத்தில் வருகின்ற “ஒண்பொறிக் கழற்கால்”[24] என்னும் தொடரிலிருந்து சங்க காலத்தில் வீரர்கள் தங்கள் கால்களில் அணியப்பெறும் வீரக்கழல்களில் வீரச்செயல்களைப் பொறித்துவைப்பரென அறியலாம். படித்து, எழுதி அதனைப் பலரும் அறியக் கூற வேண்டுமென்ற உந்து சக்தியோடு வாழ்ந்த தமிழ்மக்கள் தாங்கள் வளர்க்க எண்ணிய கலைகளில் ஒன்றாக விளையாட்டுக்களைக் கருதி வளர்த்துள்ளனர். வாழ்க்கை வழங்கும் சிறப்புகள் அனைத்திலும் திளைத்து இயற்கையான வாழ்வினில் சிறந்து விளங்க சங்க கால மக்கள் விரும்பிய காரணத்தினால் விளையாட்டு அவர்களுக்குத் தேவைப்பட்டது.

சங்க கால அரசர்களின் வீரம் சிறிது உயர்வு நவிற்சியாகக் கூறப்பட்டிருந்தாலும், மக்களின் சமுதாய வாழ்வின் எல்லாக் கூறுகளும் தெளிவாகவும், உண்மையாகவும் விளக்கப்பட்டிருப்பது உண்மையாகும். மரபாக வந்ததையும், காதால் கேட்டதையும் குறிப்பிடாமல், தாங்கள் கண்டு, உணர்ந்து, அனுபவித்த உண்மைகளை விளக்கியதால் விளையாட்டுக்கள் கற்பனையாக அமையாமல் வாழ்வின் நிகழ்ச்சிகளாக விளங்கின.

---

22 புறநானூறு 183:1-2.

23 மலைபடுகடாம் 394-395.

24 பதிற்றுப்பத்து 19:3.

சங்க இலக்கியங்களில் காணப்பெறும் முப்பத்தேழு விளையாட்டுக்களும் மக்களின் பயன்பாட்டில் நடைமுறையில் இருந்தது குறிப்பிடத்தக்கதாகும். அவற்றில் ஆடவர் விளையாட்டுக்கள் பத்து, பெண்கள் விளையாட்டுக்கள் பதினைந்து, இருபாலர் விளையாட்டுகள் பன்னிரண்டு என மொத்தம் முப்பத்தேழு விளையாட்டுக்கள் என்று குறிக்கப்படுவதால் சங்க காலத்தில் விளையாட்டுக்கள் பெற்றிருந்த இடம் தெளிவாக உணர முடிகிறது.

**விளையாட்டு நெறிமுறைகள்**

சங்க இலக்கியங்களில் காணப்படும் முப்பத்தேழு விளையாட்டுக்களும் பொதுவான நெறிமுறையாக அனைவரும் விளையாடுவதென்பது ஏற்றுக்கொள்ளப் பெற்றிருந்தது. சமுதாயம் அதனை மதித்து வரவேற்றுள்ளது. ஐவகை நிலங்களில் வாழ்ந்து வந்த அனைவரும் விளையாடாலாமென்பதற்கானக் குறிப்புகளும் விளக்கங்களும் இருந்தன. விளையாடுவதிலிருந்து யாரும் தடுக்கப்படவில்லை. குறிப்பிட்ட விளையாட்டு வீட்டிற்குள் அல்லது வெளியில் விளையாடலாம் அல்லது இரண்டு இடங்களிலும் விளையாடலாம். சில விளையாட்டுக்கள் தனித்து விளையாட முடியாது. பலருடன் சேர்ந்து தான் விளையாட முடியும். கருவிகள் இல்லாமல் ஆட முடியாது. காற்றோட்டமான இடங்களில் மட்டுமே ஆடலாம். உடல் வலிமை போதுமான அளவில்லாமல் ஆடமுடியாது. விளையாடுவதற்கேற்ற சில நெறிமுறைகளை வகுத்துக் கொண்டுதான் ஆடவேண்டும். துன்பப்படுத்துவது விளையாடுவதின் நோக்கமாக அமைந்துவிடக் கூடாது. குறிப்பிட்ட காலத்தில் விளையாட வேண்டும். சில விளையாட்டுக்களுக்கு இடம், பொருள், சூழல் அமைந்திருக்க வேண்டும். விளையாட்டு அல்லது விளையாட்டு நெறி முறைகள் என்று தனியே வகைப்படுத்திக் கூறாவிட்டாலும் அவ்விளையாட்டின் அமைப்பிலேயே அதற்கான நெறிமுறைகளும் அமைந்திருந்தன என்பதுதான் உண்மையாகும்.

அரசன், அரசி, அமைச்சன் போன்றோரும் கூனி, குறளன், விதூடகன் ஆகியோர் அசதியாடி மகிழ்ந்ததைக் கலித்தொகை விரிவாகக் குறிப்பிடுகிறது. ஆக, விளையாட்டு என்பது வயது வரம்பில்லாமலும், பொருளாதார ஏற்றத்தாழ்வைக் கருதாமலும் பொதுவாக ஆடப்பெற்ற நிலையைச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன.

**விளையாடுவதற்கேற்ற சூழ்நிலை**

இயற்கை சூழ்நிலைகளிலும், காற்றோட்டமான இடங்களிலும் விளையாடியுள்ளனர். குன்றம், நீர்நிலைகள், பொழில், மணல்வெளி என்பவை விளையாட்டுக்களங்களாக விளங்கியமைக் குறிப்பிடத்தக்கதாகும்.

"வெளிகமழ் சோலை நயந்து விளையாடல்"[25], "வெள்வேலான் குன்றில் மேல் விளையாட்டு"[26] என்பதும் கலித்தொகையாகும். சோலைகள், குன்றுகள், நீர்நிலைகளைப் போன்ற வெளியிடங்களில் விளையாடியதோடு அமையாமல் அம்பலம், மாடம் போன்ற வீட்டுப் பகுதிகளிலும் விளையாடியுள்ளமையைச் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன. குன்றத்தில் எதிரொலி கேட்டலும், நீர் நிலைகளில் நீர் விளையாட்டும், பொழிலில் பல்வகையான விளையயாட்டுக்களும், மணலில் பாவை விளையாட்டும் ஒளிந்தாடலும், அம்பலத்தில் சூதும், மாடத்தில் பந்தாட்டமும், உலாவலும், வீட்டின் பின்புறத்தில் சிறுசோறு ஆக்கலும், வீட்டின் முன்புறத்திலும், தெருவிலும் சிறுதேர் உருட்டலும் நிகழ்ந்துள்ளன. இதுதவிர உலாவுதற்கென்று தனியாக சிறுமண்டபங்களும் இருந்துள்ளன. இவற்றை நோக்கும்போது விளையாடுவதற்கேற்ற சூழ்நிலைகள் இருந்ததே தவிர, தடையேதும் இருக்கவில்லை என்பது தெளிவாகிறது. போர்க்காலங்களில் ஏற்பட்ட சிறப்புச் சூழல் தவிர மற்ற எல்லாக் காலங்களிலும் விளையாடியுள்ளனர். அதற்கேற்ற வாய்ப்புகளை உருவாக்கிக் கொண்டனர்.

**விளையாடுவதற்கு வசதிகள்**

விளையாடுவதற்கேற்ற நிலை மட்டுமல்லாமல் அதற்கேற்ற வசதிகளும் மிகுதியாகவே சங்க காலத்தில் இருந்துள்ளன. அம்மானை, கழங்கு, பந்து, பாவை, வட்டு என்பவை குறிப்பிடத்தக்க விளையாட்டுக் கருவிகள் ஆகும். விளையாட்டுக் கருவிகள் சில பொது இடங்களில் விற்கப்பட்டன. விளையாடுவதற்கேற்ற கருவிகளை விளையாடுகின்றவர்களே மகிழ்ச்சியோடு செய்து கொண்டனர்.

---

[25] கலித்தொகை

[26] மேற்படி.

"தாதின் செய்த தண்பணிப் பாவை"[27] என்பது பாவை அமைத்த கருவியும், சிறுசோறு ஆக்க வசதிகள், நீராடுவதற்கேற்ற வகை, சூது விளையாடப் பலகை, கவறு, நாய், உழக்கு என்று பலகருவிகள் இருந்துள்ளன.

விளையாடுவதற்கேற்ற இடம், வசதி, சூழ்நிலை, ஊக்குவிக்க சுற்றம், பாராட்டக் கொற்றம், வெற்றி பெற வேட்கை கொண்ட விரும்பமுள்ள மக்கள் இருந்த காலம் சங்க காலம் ஆகும்.

## வாழ்க்கைக்கு விளையாட்டுக்கள்

வாழ்க்கையில் நிறை, குறை உண்டு. குறையைக் குறையாகக் காணாமல் நிறைவாகக் காண்பது மனிதனின் மனதை ஒட்டியதாகும். வாழ்க்கையில் நிறைவுகாண, இன்பம் பெருக விளையாட்டுக்கள் உதவியுள்ளன. இயற்கைச் சூழலில் விளையாட்டை அமைத்துக் கொள்ளும் போது சுத்தமானக் காற்றை உட்கொண்டு, உலாவி மகிழ்ந்து வாழ்நாளைப் பெருக்கிக் கொள்கின்றனர். "அம்புலி காட்டல்" என்பது இனிமையான நிகழ்ச்சியாகும்.

"அம்புலி காட்டல் இனிது"[28] என்பது கலித்தொகை இனிதாக மட்டுமல்லாது உயர்வானவற்றில் நாட்டங்கொள்ள வேண்டிய பண்பையும் வளர்க்கிறது. சிறுவர் சிறுமியரின் சிறுதேர், சிறுபறை, சிறுசோறு ஆக்கல், சிற்றில் செய்தல் போன்றவை அவர்களின் ஆளுமைப் பண்பைச் சிறப்பாக வளர்க்க உதவுகிறது. கூடிவாழும் பெருங்குணத்தையும் விட்டுக்கொடுக்கும் பெருஞ்சிறப்பும் வளர உதவுகிறது. செடி கொடி வளர்த்தல், பறவை, விலங்கு வளர்த்தல் போன்றவை உயிர்க்குலத்தை நேசிக்க வாய்ப்பு கொடுக்கிறது. எண்ணி விளையாடல், கண்புதைத்து ஒளிந்தாடல், பிசி, நொடி விளையாட்டு, அசதியாடல் போன்றவை அறிவையும் ஆற்றலையும் வளர்த்துக்கொள்ள உதவுகிறது.

---

27 குறுந்தொகை 48:1.

28 கலித்தொகை 80:18-19.

வீரத்தை நிலைநாட்டி, அதன் விளைவாகத் திருமணம் புரிந்த நிகழ்ச்சிகளை,

ஓஒ இவள், பொருபுகல் நல்லேறு கொள்பவ ரல்லால்
திருமாமெய் தீண்டல ரென்று கருமமா
எல்லாரும் கேட்ப அறைந்தறைந் தெப்பொழுதுந்
சொல்லாற் றரப்பட்டவள்[29]

என்ற கலித்தொகைப் பாடல் வரிகள் எடுத்தியம்புகின்றன.

சுண்ணந்தூவலும் இதைப் போலவே உதவியுள்ளது. மலர்பறித்து மாலை கட்டி விளையாடும் பொழுது மலர் பறித்துத் தந்த தலைவனை விரும்பி மணந்த செய்திகளறிய விளையாட்டுக்கள் துணையாகின்றன.

சிந்தனை வளர்ச்சிக்கு விளையாட்டுக்கள் பெரிதும் துணை செய்துள்ளன. கற்பனைத் திறத்தை வளர்த்துக் கொள்ளவும், எண்ணியதை நிறைவேற்றவும், கூடித் தொழில் செய்யும் பெருமையை உணரவும், உணர்த்தவும் விளையாட்டுக்கள் உதவியுள்ளன. விளையாட்டுக்களின் மூலமாக இசைக்கலையும், கூத்துக்கலையும் வளர்ந்துள்ளதைக் கூடக் குறிப்பிடலாம். ஒன்றிரண்டு விளையாட்டக்களினால் மக்கள் மனநிலை வளர்ச்சிக்கும், மன அமைதிக்கும் பாதிப்பு ஏற்பட்டிருந்தாலும், மிகப்பெரும்பாலான செய்திகள் விளையாட்டுக்களின் மீது சங்கத் தமிழர் கொண்டிருந்த அளவிறந்த ஈடுபாட்டைப் புலப்படுத்துவதே உண்மை. சங்க இலக்கியம் காட்டும் மக்கள் வாழ்க்கையில் விளையாட்டுக்கள் மிகச் சிறந்த இடத்தைப் பெற்றிருந்தன. சங்க இலக்கிய விளையாட்டுக்களாகப் பின்வருவனவற்றைக்குறிக்கலாம்.

### 1.2. சங்க இலக்கிய விளையாட்டுக்கள்

1. அசதியாடல்
2. அம்புலி அழைத்தல்
3. அலவன் ஆட்டல்
4. உலாவல்
5. ஊசல்

---

[29] மேற்படி, 102:9-12.

6. எண்ணி விளையாடல்
7. எதிரொலி கேட்டல்
8. ஏறுகோள்
9. கண்புதைத்து ஒளிந்தாடல்
10. கவண்
11. கழங்கு
12. குதிரை ஏற்றமும் யானை ஏற்றமும்
13. குரவை
14. குறும்பு விளையாட்டுக்கள்
15. சாம விளையாட்டு
16. சிறுசோறு
17. சிறுதேர்
18. சிறுபறை
19. சிற்றில் செய்தல்
20. சுண்ண விளையாட்டு
21. சூது
22. செடி, கொடி வளர்ப்பு
23. நீர் விளையாட்டு
24. பந்து
25. பறவைகளைக் காணலும், அவற்றின் செயல்கள் போல் செய்தலும்
26. பறவை வளர்ப்பும், விலங்கு வளர்ப்பும்
27. பறவை-விலங்குகளுடன் விளையாடல்
28. பாவை விளையாட்டு
29. பிசி, நொடி விளையாட்டு
30. புள் ஓட்டல்
31. மணற்குவியலில் மறைத்தாடல்
32. மலர் கொய்தலும், மாலை தொடுத்தலும்
33. மடல்
34. வட்டு

35. வள்ளை

36. வில் விளையாட்டு

37. வேட்டை

## 1. அசதியாடல்

'அசதியாடல்' என்ற தொடர் சங்க இலக்கியத்தில் காணப்படவில்லையாயினும், இவ்வகை விளையாட்டு அக்காலத்தில் இருந்துள்ளது. "வல்லுப்பலகை எடுத்து நிறுத்தன்ன, கல்லாக்குறள்", "கொக்குரித் தன்ன கொடுமடாய்", "உழுந்தினும் துவ்வாக் குறுவட்டா நின்னின் இழிந்ததோ கூனின் பிறப்பு" என்ற செய்யுட்பகுதியில் (கலித்தொகை 94-96) கூனியும் குறளனும் ஒருவருடன் மற்றொருவர் வேடிக்கையாகப் பேசி - அசதியாடி - மகிழ்ந்ததைத் தெரிவித்துள்ளன.

## 2. அம்புலி காட்டல்

குழந்தைகளிடம் பெரியவர்கள் அம்புலி காட்டி விளையாடச் செய்வர். 'யான் நின்னை அம்புலி காட்டல் இனிது' என்று கலித்தொகையும் அம்புலி அழைத்தல் என்று கம்பராமாயணமும் குறிப்பிட்டுள்ளன.

## 3. அலவன் ஆட்டல்

கடற்கரைப் பகுதியில் அலவன்களைப் பிடித்து ஆட்டியும் மோதவிட்டும் விளையாடும் விளையாட்டு. இவ்விளையாட்டுப் பற்றி, "அலவன் ஆட்டுவோள் சிலம்பு ஞெமிர்ந்து" (நற்றி.363:10) என்றும், "பொன்வரி அலவன் ஆட்டிய ஞான்றே" (குறுந்.303:7) என்றும், "திணிமணல் அடைகரை அலவன் ஆட்டி" (அகம்.280:3) என்றும் விளக்கப்பட்டுள்ளது.

## 4. உலாவல்

நிலா முற்றத்தில் பெண்கள் உலாவி மகிழ்ந்ததை அணங்கு வீழ்வன்ன பூந்தொடி மகளிர் ... திருமுகம் ... தெண்கடற் திரையின் அசைவளி புடைப்ப, நிரைநிலை மாடத்து

*அரமியம் தோறும், மழைமாய் மதியின் தோன்றுபு மறைய" (மதுரைக்காஞ்சி 446-451) என்ற பகுதி புலப்படுத்துகிறது.*

### 5. ஊசல்

*மரக்கிளைகளில் நீண்ட கயிற்றைக் கட்டிவிட்டு அதில் அமர்ந்து விளையாடும் திட்டமிட்ட விளையாட்டு ஊசலாகும். உடல் உறுப்பு இயக்க விளையாட்டாகும். இதனை "ஊசல் ஊர்ந்து ஆட ஒருஞான்று வந்தானை" (கலி.37:14) என்றும், "தாழை வீழ்கயிற்றூசல் தூங்கி" (அகம்.20:6) என்றும் ஊசல் விளையாட்டுக் குறித்து சங்க இலக்கியங்கள் குறிப்பிட்டுள்ளன.*

### 6. எண்ணி விளையாடல்

*ஓரிடத்தில் அதிக எண்ணிக்கையிலுள்ள பொருள்களைக் கண்டால், அவற்றை ஒன்று, இரண்டு, மூன்று ... என்றவாறு எண்ணி வியந்து பொழுதுபோக்குவது மாந்தரிடம் இயல்பாய்க் காணப்படும் ஒரு பண்பாகும்.*

*உப்பு வண்டிகள், படகுகள், யானைகள், குதிரைகள் என்பனவற்றைப் பெண்கள் எண்ணி விளையாடிய செய்திகள் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன (புறநானூறு 116, நற்றிணை 331 & 372, பதிற்றுப்பத்து 43).*

### 7. எதிரொலி கேட்டல்

*மலைச்சிகரத்திற்குச் சென்று கூவி, எதிரொலி கேட்டு மகிழ்ந்து பெண்கள் பொழுது போக்கியுள்ளனர். "ஒடியா உள்ளமொடு உருத்து, ஒருங்கு உடன் இயைந்து இடிஎதிர் கழறும்" என்ற பரிபாடல் செய்யுட்பகுதி (பரி.2, 36-37) இவ்விளையாட்டை விவரித்துள்ளது.*

### 8. ஏறுகோள்

*ஏறுகோள் என்பது, இளைஞர்கள் ஆர்வமுடன் கலந்து கொண்ட ஒரு வீர விளையாட்டு. இதில், எருதுகளை ஆயுதம் ஏதுமின்றித் தம் உடல் வலிமையால் அடக்குவர்.*

*ஆயர்குடிப் பெண்கள், தம் திருமணம் கருதி எருதுகளை வளர்ப்பர் என்றும், இளைஞர்கள் இவ்வீரவிளையாட்டில் தம் உயிரையும் பொருட்படுத்தாமல் அடர்த்தும், ஊர்ந்தும் அடக்கிப் பெண்களை மணப்பர் என்றும், அவர்களுக்கு இது மகிழ்ச்சி நிறைந்த செயல் என்றும் கலித்தொகையில் உள்ள முல்லைக்கலி விரிவாகக் கூறியுள்ளது.*

**9. கண்புதைத்து ஒளிந்தாடல்**

*ஒருத்தியின் கண்களை மற்றொருத்தி, தன் கைகளால் மறைத்து நிற்க, அந்த நேரத்தில் பிற மகளிரெல்லாம் மறைவான இடங்களுக்குச் சென்று ஒளிந்து கொள்வார்கள். பின்னர், ஒளிந்தவர்களைக் கண்டு வருமாறு கண் பொத்தப்பட்டு நின்ற பெண் செலுத்தப்படுவாள். இவ்விளையாட்டை "நலம் பெறு கையின் என்கண் புதைத்தோய்" (ஐங்குறு.293:2) என்று புலப்படுத்தியுள்ளது.*

**10. கவண்**

*இது போர் புரியவும், புள் ஓட்டவும் மாந்தர்க்குப் பயன்படும் ஒரு கருவி. இக்கருவியைப் பயன்படுத்திக் கிளிக்கூட்டத்தை ஓட்டிப் பெண்கள் விளையாடியுள்ளனர். "ஏனல் காவலர் கவண்ஒலி வெரீஇக்" (குறுந்.54:2) என்றும், "கடுவிசைக் கவணின் எறிந்த சிறுகல்" (அகம்.292:11) என்றும் இவ்விளையாட்டை விவரித்துள்ளன.*

**11. கழங்கு**

*இயற்கையில் கிடைத்த காய்களைக் கொண்டு, சங்க காலத்தில் பெண்கள் விளையாடி வந்தனர். காய்களை எடுத்தும், எறிந்தும், பிடித்தும் ஆடியதாகவும், வீட்டிலும், மாடத்திலும், மரநிழலிலும் பொன், மணி, முத்து, பூக்களால் ஆன கழங்கு கொண்டு ஆடியதாகவும் சங்க நூல்கள் தெரிவிக்கின்றன. "முத்த வார்மணற் பொற் கழங் காடும்" (பெரும்பாண்.335) என்றும், "அரங்கு அறி கழங்கின் கோட்டம்" (நற்.47:8) என்றும், "பொலஞ்செய் கழங்கிற் றெற்றி யாடும்" (புறம்.3614) என்றும் இவ்விளையாட்டை விளக்குகின்றன.*

### 12. குதிரை ஏற்றமும் யானை ஏற்றமும்

அரசர், வீரர் முதலியோர் குதிரை, தேர், யானை போன்றவற்றைச் செலுத்துவதும், அவற்றில் ஊர்ந்து போர்ப் பயிற்சி செய்வதும் உண்டு. இவை அவர்களுக்குரிய தொழில்கள்; விளையாட்டுக்கள் அல்ல. ஆனால் இவற்றில் அவர்கள் பொழுதுபோக்காக ஊர்ந்து செல்வதும் உண்டு; விளையாடுவதும் உண்டு. இவ்விளையாட்டை "மாஅல் யானையொடு மறவர்ஆடி" (கலித்.5:2) என்றும், "ஏற்றுகோட்டு எழில் யானை ஏறி" (கலித்.7:10) என்றும், "குதிரை மழவ ரோட்டிய" (அகம்.1:2) என்றும் விவரிக்கின்றன.

### 13. குரவை

குரவை என்பது ஒரு வகை நாட்டியம். இதனை ஒரு விளையாட்டாகவும் பெண்கள் மேற்கொண்டுள்ளனர். மகளிர் பலர் மகிழ்ந்து கூடித்தழுவியும், கைகளைக் கோத்தும், கைகொட்டியும், சத்தமிட்டும், பாடியும் குரவை ஆடியுள்ளனர். "பரதவ மகளிர் குரவையொடொலிப்ப" (மதுரைக்காஞ்சி, 97) என்றும், "மன்றுதொரு நின்ற குரவை" (மேற்படி, 615) என்றும், "நாம் ஆடும் குரவை" (கலித்-104:69) என்றும், "சினமாந்தர் வெளிக் குரவை" (புறம் 22:22) என்றும் இவ்விளையாட்டுக் குறித்து சங்க இலக்கியங்கள் குறிப்பிட்டுள்ளன.

### 14. குறும்பு விளையாட்டுக்கள்

சிறுவர் விளையாட்டுக்களில் சில நிகழ்ச்சிகள், பிற மாந்தர்க்கு அல்லது அஃறிணை உயிர்களுக்கு, ஏதேனும் ஒரு வகையில் தொல்லை தந்தவையாக உள்ளன. ஒரு பொருளைக் கவர்தல், அறுத்தல், சிதைத்தல், உடைத்தல், அழித்தல் என்றவாறு பல வகைகளில் அவை நிகழ்ந்துள்ளன. ஆனால் இச்செயல்கள் யாவும் விளையாட்டு நிகழ்ச்சிகளே. ஏனெனில் அவ்வாறு செய்தவர்கள் அவற்றால் மகிழ்ந்துள்ளனர். தம் மகிழ்ச்சிக்காகவே அவற்றை அவர்கள் மேற்கொண்டுள்ளனர். "கடுந்தேறு உறுகிளை மொசிந்தன துஞ்சும் செழுங்கூடு கிளைத்த இளந்துணைமகாஅர்" (பதிற்று 71:6-7) என்ற சங்க இலக்கியப் பகுதிகள் சிறுவர் செய்த குறும்புகளை விவரித்துள்ளன.

**15. சாம விளையாட்டு**

*சிறுவர்கள் தமக்குள் அவரவர்க்குச் சமமான கற்பனைப் பெயர்களை வைத்துக் கொண்டு ஆடும் விளையாட்டு "பெயர்கூறி பைய விளையாடு வாரும்" (பரிபாடல் 10:104) என்ற பகுதி இவ்விளையாட்டுக் குறித்து செய்தியைக் குறிக்கிறது.*

**16. சிறுசோறு**

*பலவகை கற்பனைகளோடு பெண்கள் - குறிப்பாகச் சிறு பெண்கள் சோறு சமைத்து விளையாடுவதைப் பொதுவாகச் 'சிறுசோறு ஆக்கல்' என்று இலக்கியங்கள் குறிப்பிடும். "சிறு சோற்றானும் நனி பல" (புறம் 235:4)என்ற பாடல் வரி இதனைப் புலப்படுத்துகிறது.*

**17. சிறு தேர்**

*தேரினை உருட்டியும், இழுத்தும் சிறுவர்கள் விளையாடுவது சிறு தேர் விளையாட்டாகும். ஒரு குறிப்பிட்ட தூரம் வரை இழுத்துச் சென்று ஒரு எல்லையில் தேரினை நிலைப்படுத்தி மகிழ்ந்துள்ளனர். விளையாட்டுத் தேரினை இலக்கியங்கள் 'பொற்சிறுதேர்', 'சிறுமணித்தேர்', 'தமனியச் சிறுதேர்' எனக் குறிப்பிட்டுள்ளன. "பொற்காற்புதல்வர் புரவியின் றுருட்டு முக்காற் சிறுதேர் முன்வழி விலக்கும்" (பட்டினப்பாலை 24-25) "பூரா நற்றே ருருட்டிப் புதல்வர்" (பெரும்பாண் - 249) "முற்றத்துக் கால் வல் தேர் கையின் இயக்கி" (கலித் 81:7-8) என்ற பகுதிகள் சிறுதேர் விளையாட்டை விவரிக்கின்றன.*

**18. சிறுபறை**

*சிறுவர்களுடைய விளையாட்டுக் கருவிகளுள் ஒன்று பறை. பறையை ஒலிக்க வைத்துத் தாளத்திற்கேற்பச் சிறுவர்கள் விளையாடும் விளையாட்டு சிறுபறை ஆகும். "மான்றோற் சிறுபறை கறங்கக் கல்லென" (மலைபடு : 321) "தொண்டகச் சிறுபறைப் பாணி" (நற்றிணை 104:5) "இரவு அரிவாரின் தொண்டகச் சிறுபறை" (குறுந்தொகை 375:4) என்ற சங்க இலக்கியப் பகுதிகள் சிறுபறை பற்றிய செய்திகளைத் தெரிவிக்கின்றன.*

## 19. சிற்றில் செய்தல்

*மகளிர் - குறிப்பாகச் சிறுமியர் விளையாட்டுக்களுள் சிற்றில் செய்தல் விளையாட்டும் ஒன்றாகும். மணலில் சிறிய, சிறிய வீடுகளைக் கட்டித் தங்கள் கற்பனைத் திறத்திற்கேற்ப விளையாடுவர். "வரி புனை சிற்றில் பரி சிறந்து ஓடி" (நற். 123:8), "வரி மணல் முன்துறைச் சிற்றில் புனைந்த" (கலித் 114:15), புதுக்கலத் தன்ன செவ்வாய்ச் சிற்றில்" (அகம் 394:9) என்ற சங்கப்பாடல் வரிகள் சிற்றில் செய்தல் விளையாட்டை விவரிக்கின்றன.*

## 20. சுண்ணம் தூவல்

*சுண்ணம் என்பது ஒருவகை வாசனைப் பொடி. இதனைத் தயாரிக்கும் பொறுப்பினைப் பெண்கள் ஏற்றிருந்தனர். சுண்ணத் தயாரிப்பில் தங்கள் முழுத் திறமையையும் காட்டிப் போட்டியில் வெற்றி பெற்று முதலிடத்தைப் பெற்றுள்ளனர். பலரும் சேர்ந்து ஒருவர் மீது ஒருவர் சுண்ணப்பொடியினைத் தூவி மகிழ்ந்து பெண்கள் விளையாடியுள்ளனர். "புன்காய்ச் சுண்ணம் புடைத்த" (பெரும்பாண் 220), "பலர் தொகுபு இடித்த தாதுஉரு சுண்ணத்தார்" (மதுரைக்காஞ்சி 399), "சாந்தும் கமழ்தாரும் கோதையும் சுண்ணமும்" (பரிபாடல் :2) என்ற பாடல் வரிகள் சுண்ணம் தூவல் குறித்த செய்திகளைப் புலப்படுத்துகின்றன.*

## 21. சூது

*இது ஒரு பொழுதுபோக்கு விளையாட்டு. காலம் போவது தெரியாமல் ஆடும் விளையாட்டு. வீடுகளிலும், பொது இடங்களிலும் ஆடிய செய்தியை இலக்கியங்கள் தெரிவிக்கின்றன. "பொதியில் நரை, நரை மூதாளர் நாயிடக் குழிந்த வல்லின் நல்லுலகம் (புறம் 32:4-6), "மன்றத்து நரை மூதாளர் அதிர் தலையிறக்கிக் கவை மனத் திருத்தும் வல்லு" (அகம் 377:3-5), "சூதார் குறுந்தொடிச் சூரமை நுடக்கத்து" (ஐங்குறு. 71:1) என்ற சங்கப் பாடல்வரிகள் இவ்விளையாட்டுக் குறித்துத் தெரிவிக்கின்றன.*

## 22. செடி, கொடி வளர்ப்பு

செடி, கொடிகளை வளர்ப்பது பெண்களின் பொழுதுபோக்கு விளையாட்டு புன்னை, குவளை, தெற்றி, நொச்சி முதலிய செடிகளை வளர்த்து அதன் வளர்ச்சி கண்டு மகளிர் மகிழ்ந்துள்ளனர். "கண்ணு நுதலு நீவித் தண்ணெனத் தடவுநிலை நொச்சி. . . . தருமணற் கிடந்த பாவை" (அகம் 165:8-12), "தெற்றி யுலறினும் வயலை வாடினும் . . . . .நின்னினும் மடவள் நனிநின் னயந்த" (அகம் 259:13-15), விளையாடு ஆயமொடு வெண்மணல் அழுத்தி" (நற். 172:1) என்ற பகுதிகள் செடி, கொடி வளர்ப்பு விளையாட்டிற்குச் சான்று பகர்கின்றன.

## 23. நீர் விளையாட்டு

ஆண், பெண் இருபாலரும் விளையாடும் பொழுதுபோக்கு விளையாட்டு. நீரில் நீச்சலடித்தும், படகுகளைப் பயன்படுத்தியும் விளையாடுவது. நீர் விளையாட்டு ஒரு விழாவாகவும் நடைபெற்றுள்ளது. "மலி புனல் நிகழ்தரும் தீம் நீர் விழாவின்" (பதிற்று 48:14), "விழவுப் புனல்" (மேற்படி 12:99), "அறம் காவற்பெண்டிர் மணி அணிந்த தம் உரிமை மைந்தரோடு ஆடித் தணிவின்று, வையைப்புனல்" (பரிபாடல் 48-50) என்ற செய்திகளைச் சங்கப்பாடல் வரிகள் நீர்விளையாட்டுக் குறித்து தெரிவிக்கின்றன.

## 24. பந்து

உருண்டை வடிவமுள்ள விளையாட்டுக் கருவி. இதைக் கொண்டு விளையாடுவது பந்து விளையாட்டாகும். பந்து, கைவிரல் ரேகை பந்தின் மீது பதிந்துவிடும் அளவிற்கு பளபளப்பான மேற்பரப்பு கொண்டது. பந்தெறிகளம், பந்தடிமேடை இருந்த விரவங்களை இலக்கியங்கள் கூறுகின்றன. மாடி வீடுகளில், மேல் மாடத்தில், நிலாமுற்றத்தில் பெண்கள் பந்தாடியுள்ளனர். "வரிப்புனை பந்தொடு பாவை தூங்க" (திருமுரு. 68), "வான்தோய் மாடத்து வரிப்பந் தசைஇ" (பெரும்பாண் 333), "பந்து நிலத்து எறிந்து பாவை நீக்கி" (நற்றிணை 179:2) என்ற பகுதிகள் பந்து விளையாட்டுக் குறித்து விளக்கியுள்ளன.

**25. பறவைகளைக் காணலும், அவற்றின் செயல்கள் போல் செய்தலும்**

கிளி, குயில், மயில் போன்ற பறவைகளின் செயல்களால் மனம் கவரப்பட்ட பெண்கள், அவற்றின் செயல்கள் போல் செய்து மகிழ்ந்து விளையாடியுள்ளனர். கிளியுடன் மழலை மொழி பேசியதையும், குயிலுடன் எதிர் கூவியதையும், மயில் ஆடுவது போல் நடனம் ஆடியதையும் "நறவுண் வண்டாய் நரம்பு ஊர்நரும் சிகைமயிலாய்த் தோகை விரித்து ஆடுநரும் கோகுலமாய்க் கூவுநரும் ஆகுலம் ஆகுநரும்" (பரி. 6:3-6) என்ற பகுதி இவ்விளையாட்டுக் குறித்த செய்திகளை விளக்குகின்றது.

**26. பறவை வளர்ப்பும், விலங்கு வளர்ப்பும்**

பறவைகளையும், விலங்குகளையும் பொழுதுபோக்காகவும், விளையாட்டாகவும் பெண்கள் வளர்த்துள்ளனர். 'ஏறுகோள்' என்ற வீர விளையாட்டிற்குரிய எருதுகளைப் பெண்கள் வளர்த்து வந்ததைத் "தொழுவிடை ஏறு குறித்து வளர்த்தார்" என்ற பகுதி சுட்டியுள்ளது. (21: மதுரை: ஆய்ச்சியர்), "கோழி சேக்கும் கூடுடைப்புதவு வைத்து" (பெரும்பாண் -117) என்ற பகுதியும் இவ்விளையாட்டுக் குறித்த செய்தியை விளக்குகிறது.

**27. பறவை - விலங்குகளுடன் விளையாடல்**

இருபாலாரும் அவரவர் விரும்பும் பறவை - விலங்குகளுடன் விளையாடி மகிழ்ந்துள்ளனர். வேந்தர்கள் களிற்றுடன் ஆடிப்பொழுது போக்கியுள்ளனர். புலிக்குட்டிகளுடனும், யானைக் கன்றுகளுடனும் சிறுவர்கள் விளையாடியுள்ளனர். மான்குட்டிகளுடன் பெண்கள் விளையாடியுள்ளனர். "சிறுகுறும் பறவையுடன் ஓடி" (நற்றிணை 277:9), "தாதுதேர் பறவையின் இன்மொழி கேட்டு" (கலித் 22:7), "களிற்றோ டாடித் தொழுதகக் கழிப்பர் வேந்தே" (சீவக சிந்தாமணி 58:289), வன்புலிக் குருளையோடும். . . . மானின் குழவியொடு ஆட் (கண்ணப்ப. 4, 32:17) என்ற பகுதிகள் இவ்விளையாட்டுக் குறித்த செய்திகளை விளக்குகின்றன.

**28. பாவை விளையாட்டு**

'பாவை' என்றால் 'உருவம்' என்பது பொருள். பாவை புனைந்து பாவையர் விளையாடியுள்ளனர். பாவை என்ற சொல் ஆண் - பெண் இருபால் உருவங்களையும்

குறிக்கும். பாவையைச் செய்வதும் விளையாட்டு நிகழ்ச்சியே. இயற்கையில் கிடைத்த குரவமலர் கொண்டு பாவை செய்து விளையாடியதைக் 'குரவம்பாவை என்ற தொடர் தெரிவித்துள்ளது. மனித உருவங்கள், பறவைகள், விலங்குகள் போல உருவங்கள் அமைத்து மகிழும் அறிவயப்பட்ட விளையாட்டாகும். "செந்நீர்ப் பசும்பொன் புனைந்த பாவை" (மதுரைக்காஞ்சி - 410), "வல்லோன் றைகிய வரிப்புனை பாவை" (மேற்படி - 723), "யவன ரியற்றிய வினைமாண் பாவை" (நெடுநல் - 101), தாதின் செய்த தண்பணிப்பாவை" (குறுந் - 48:1) என்ற தொடர்கள் பாவை செய்து விளையாடிய செய்திகளைத் தெரிவிக்கின்றன.

## 29. பிசி - நொடி விளையாட்டு

புதல்வரிடத்தும், தோழியரிடத்தும் விலங்குகள் பற்றிய கதைகள் கூறிப் பெண்கள் பொழுது போக்கியுள்ளனர். இவற்றைப் 'பிசி' என்றும் 'நொடி' என்றும் கூறுவர். "பைம்பூண் சேய்ப் பயந்த மாமோட்டு துணங்கை அம் செல்விக்கு அணங்கு நொடித் தாங்கு" (பெரும்பாண் 457-459) என்ற பகுதி நொடி குறித்த செய்தியைப் புலப்படுத்தியுள்ளது.

## 30. புள் ஓட்டல்

மகளிர் இதனை ஒரு தொழிலாகவும், விளையாட்டாகவும் செய்துள்ளனர். கவண், தட்டை என்ற கருவிகளைப் பயன்படுத்திப் புள் ஓட்டியுள்ளனர். "வள்ளுகிர்த் தெள்விளி யிடையிடைப் பயிற்றிக்கிள்ளை யோப்பியுங் கிளையிதழ்" (மதுரைக்காஞ்சி 101-102), "நல்கோட் சிறுதினைப் படுபுள் ஓப்பி எல்பட வருதியர் என நீ விடுத்தலின்" (மேற்படி 38-39), "பெருவரை அடுக்கத்துக் குரீஇ ஒப்பி இன்இசை ஓரா இருந்தனமாக" (அகம்-388)என்ற தொடர்கள் பறவைகளை ஓட்டிய செய்திகளைத் தெரிவிக்கின்றன.

## 31. மணற்குவியலில் மறைத்தாடல்

மணற்குவியலில் ஒரு பொருளை மறைத்து வைப்பதும், அதனைக் கண்டெடுக்குமாறு தன்னுடன் விளையாடுபவளைக் கேட்பதும் மிகப் பழைமையான விளையாட்டு நிகழ்ச்சிகளாகும். புன்னை விதையை மணலில் மறைத்து வைத்து

விளையாடிய நிகழ்ச்சி, சங்க இலக்கியத்தில் "விளையாடு ஆயமொடு வெண்மணல் அழுத்தி" (நற்றிணை 172:1) என்ற பகுதியால் அறியப்பட்டுள்ளது.

### 32. மலர்க்கொய்தலும், மாலை தொடுத்தலும்

மகளிர் விளையாட்டுக்களுள் 'மலர்க்கொய்தல்' சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது. மலர்களைக் கொய்வதுடன் அவற்றைப் பல வகைகளில் மாலைகளாகத் தொடுத்தும் பெண்கள் விளையாடியுள்ளனர். தழைகளைக் கொய்து ஆடையாகத் தைத்துள்ளனர். "பைந்தழை மா மகளிரொடு" (பட்டினப்பாலை - 91), "பூக்கொய் மகளிர்" (குறுந் 26:3), "கொய் தரு தளிர் சேர்த்து" (ஐங்குறு 216:5), "தாது சேர் பலமலர் கொய்யும்" (குறுந் 311:6) என்ற பகுதிகள் மலர்க்கொய்து மாலை தொடுத்து விளையாடிய நிகழ்ச்சிகளைப் புலப்படுத்தியுள்ளன.

### 33. மல்

மல் என்பது, கருவிகளின் துணையில்லாமல், தம் உடல்வலிமையால், இருவர், தமக்குள் சண்டையிடும் ஒரு வகைப்போர் முறை. இதனை ஒரு வீர விளையாட்டாகவும் இளைஞர்கள் மேற்கொண்டுள்ளனர். மக்கள் இதனைக் கண்டு மகிழ்ந்துள்ளனர். விளையாடுவதற்கேற்ற அரங்கு அமைக்கப்பட்டு விளையாடப்பட்டது. "மல் ஆர் அகலம் வடு அஞ்சி" (பரிபாடல் 12:72), "மல்லடு மார்பின் வலியுற வருந்தி" (அகம் 386:4) என்ற தொடர்கள் 'மல்' விளையாட்டுக் குறித்த செய்திகளைத் தெரிவித்துள்ளன.

### 34. வட்டு

இது, ஒரு வகைச் சிறுவர் விளையாட்டு. இதில் வட்டுகளை உருட்டி ஆடியுள்ளனர். ஆடுவதற்கு வசதியாகச் சிறுவர்கள் தரையில் கோடு கிழித்துக் கொண்டு விளையாடியுள்ளனர். "வண்ண நீர்கரந்த வட்டு விட்டு எறிவோரும்" (பரிபாடல் 11-55), "பூ எழில் வண்ண நீர் பூரித்த வட்டு எறிய" (மேற்படி 12-68), வட்டு உருட்டு வல்லாய் (மேற்படி 18-42), "கையாடு வட்டின் தோன்றும்" (அகம் 108:17) என்ற தொடர்கள் வட்டு விளையாட்டு நிகழ்ச்சிகளைத் தெரிவித்துள்ளன.

### 35. வள்ளை

உரலில் ஏதாவதொரு தானியம், அல்லது இடித்துப் பயன்படக்கூடிய ஒன்றை இட்டு, பாடிக்கொண்டு உலக்கையால் குற்றி மகழும் ஒரு வகை மகளிர் விளையாட்டை 'வள்ளை' என்கின்றனர். உலக்கைப்பாட்டு, உரற்பாட்டு, அம்மனை வள்ளை என்றும் குறிக்கப்பட்டுள்ளது. "தினைகுறு மகளிரிசைபடு வள்ளையுஞ்" (மலைபடு:342), "பாஅடி உரல பகுவாய் வள்ளை" (குறுந் 89:1), "வளைக் கை மகளிர் வள்ளை கொய்யும்" (பதிற்று 29:2) என்ற தொடர்கள் வள்ளை குறித்த செய்திகளைத் தெரிவித்துள்ளன.

### 36. அம்பு - வில் விளையாட்டு

உண்டைகளை (உருண்டைகளை) அம்பாகக் கொண்டு, வில்லில் தெறித்துச் சிறுவர்கள் விளையாடியுள்ளனர். வில் பழக விழா எடுத்துள்ளனர். கற்றுத்தரக் கைதேர்ந்த ஆசிரியர்கள் இருந்துள்ளனர். இலட்சியத்தில் வெற்றிபெற்று வீரத்தை நிலைநாட்டிக் கொள்ள இவ்விளையாட்டு பயன்படுத்தப்பட்டது. "தடக்கையின் வண்ண வரிவில்லேந்தி யம்பு தெரிந்து" (குறிஞ்சிப். 123-124), "வில்லுச்சொரி பகழி ஆடி" (பரிபாடல் 18:40), "அம்புடைக்கையர்" (அகம் 69:16) என்ற தொடர்கள் அம்பு - வில் விளையாட்டுத் தொடர்பான செய்திகளை விளக்கியுள்ளன.

### 37. வேட்டை

'வேட்டை' என்ற சொல் விலங்குகளை வீழ்த்துவதைப் பொதுவாகக் குறிக்கும். தவிர, காட்டு விலங்குகளை அடக்கிப் பிடிக்கும் செயலைக் குறிப்பிடவும் இச்சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. வெற்றி விளையாட்டு வீரத்தை வெளிப்படுத்தும் விளையாட்டு. இதனை ஒரு தொழிலாகவும், பொழுதுபோக்காகவும் கருதியுள்ளனர். வில், அம்பு இவற்றோடு நாய்களையும் வேட்டைக்குப் பயன்படுத்தியுள்ளனர். "எல்லு முயல் எறிந்த வேட்டுவன்" (நற் 59:3), "வேட்டச் செந்நாய் கிளைத்தூண் மிச்சில்" (குறுந். 56:1), "வல்வில் வேட்டம் வலம்படுத் திருந்தோன்" (புறம் 152:6), "வேட்டு வரில்லை நின்னொப் போரென" (புறம் 152:24) என்ற தொடர்கள் வேட்டை குறித்த செய்திகளைத் தெரிவித்துள்ளன.

**விளையாட்டுக்களின் வகைப்பாடுகள்**

விளையாட்டுக்களைப் பொதுவாக அகவிளையாட்டுக்கள் (Indoor games) என்றும் புறவிளையாட்டுக்கள் (Outdoor games) என்றும் பிரிக்கலாம். இவ்வகையில் மகளிர் விளையாட்டுக்கள் சிறுவர், சிறுமியர் விளையாட்டுக்களும் முதல் வகையிலும், ஆடவர் விளையாட்டுக்கள் இரண்டாம் வகையிலும் அடங்கும் என்றாலும் இதற்கும் விதிவிலக்குகள் இருந்துள்ளன. காலத்திற்கும், சூழ்நிலைக்கும், மனநிலைக்குமேற்பப் பெண்களும் சில புறவிளையாட்டுக்களில் ஈடுபட்டுள்ளனர். தவிர, காலத்திற்கேற்ப சில விளையாட்டுக்களும் வசதியை ஒட்டி அமைக்கப்பட்டுள்ளதையும் கருத்தில் கொள்ள வேண்டியுள்ளது.

விளையாடப்படும் நேரத்தினைக் கொண்டு பார்க்கும் பொழுது அநேகமாக இரவு நேரத்து விளையாட்டுக்கள் குறைவு என்றே கூறலாம். சிறுவர், சிறுமியர் பகலில் விளையாடுவது போலவே இரவின் முற்பகுதியிலும் விளையாட்டில் ஈடுபடுகின்றனர்.

பங்கு கொள்வோர் அடிப்படையிலும் விளையாட்டுக்களை மூன்று வகையில் பிரித்துக் காணலாம். தனிநபர் விளையாட்டு, இருவர் கலந்து கொள்ளும் விளையாட்டு குழுவிளையாட்டு என்பவையாகும்.

மேலும்,

1. உடல் உறுப்பு இயக்க விளையாட்டுக்கள்
2. பொறிபுலன் இயக்க விளையாட்டுக்கள்
3. அறிவு இயக்க விளையாட்டுக்கள்
4. உடல் உறுப்பு, பொறிபுலன், அறிவு மூன்றுஞ் சார்ந்த விளையாட்டுக்கள் என நான்காகவும் பகுக்கலாம்.

**சங்க இலக்கிய விளையாட்டுக்கள்-வகைப்பாடு**

1. உடல் உறுப்பு இயக்க விளையாட்டுக்கள்
2. பொறிபுலன் இயக்க விளையாட்டுக்கள்

3. அறிவு இயக்க விளையாட்டுக்கள்
4. உடல் உறுப்பு, பொறிபுலன், அறிவு மூன்றுஞ்சார்ந்த விளையாட்டுக்கள் என நான்காகப் பகுக்கலாம்.

**1. உடல் உறுப்பு இயக்க விளையாட்டுக்கள் பின்வருமாறு**

1. அலவன் ஆட்டல்
2. உலாவல்
3. ஊசல்
4. ஏறுகோள்
5. கவண்
6. கழங்கு
7. குதிரையேற்றமும் யானை ஏற்றமும்
8. குரவை
9. குறும்பு விளையாட்டுக்கள்
10. சிறுசோறு
11. சிறுதேர்
12. செடி-கொடி வளர்ப்பு
13. நீர் விளையாட்டு
14. பந்து
15. பறவை வளர்ப்பும், விலங்கு வளர்ப்பும்
16. பறவை, விலங்குகளுடன் விளையாடல்
17. புள் ஓட்டல்
18. மணற்குவியலில் மறைத்தாடல்
19. மலர் கொய்தலும் மாலை தொடுத்தலும்
20. மல்
21. வட்டு
22. வள்ளை

**2. பொறிபுலன் இயக்க விளையாட்டுக்களின் பட்டியல்**

1. அம்புலி அழைத்தல்
2. எண்ணி விளையாடல்
3. எதிரொலி கேட்டல்
4. கண்புதைத்து ஒளிந்தாடல்
5. பறவைகளைக் காணலும் அவற்றின் செயல்கள் போல் செய்தலும்

**3. அறிவு இயக்க விளையாட்டுக்களின் பட்டியல்**

1. அசதியாடல்
2. சாம விளையாட்டு
3. சிற்றில்
4. சுண்ண விளையாட்டு
5. சூது
6. பாவை விளையாட்டு

**4. உடல் உறுப்பு, பொறிபுலன், அறிவு-மூன்றும் சார்ந்த விளையாட்டுக்களின் பட்டியல்**

1. வில் விளையாட்டு
2. சிறுபறை
3. வேட்டை
4. பிசி-நொடி விளையாட்டு

**5. வீட்டிலிருந்தவாறே விளையாடும் விளையாட்டுக்கள்**

1. சாம விளையாட்டு
2. சிறு சோறு ஆக்கல்
3. பறவை வளர்ப்பும் விலங்கு வளர்ப்பும்
4. பிசி-நொடி விளையாட்டு
5. வள்ளை

**வெளியிடங்களில் விளையாடும் விளையாட்டுக்கள்**

1. அலவன் ஆட்டல்
2. ஊசல்
3. எண்ணி விளையாடல்
4. எதிரொலி கேட்டல்
5. ஏறுகோள்
6. கவண்
7. குதிரை ஏற்றமும் யானை ஏற்றமும்
8. குறும்பு விளையாட்டுக்கள்
9. சிறுதேர்
10. சிறுபறை
11. செடி-கொடி வளர்ப்பு
12. நீர் விளையாட்டு
13. பந்து
14. பறவைகளைக் காணலும், அவற்றின் செயல்கள் போல் செய்தலும்
15. மணற்குவியலில் மறைத்தாடல்
16. மல்
17. வட்டு
18. வில் விளையாட்டு
19. வேட்டை

**வீட்டிலும், வெளியிலுமாக விளையாடும் விளையாட்டுக்கள்**

1. அசதியாடல்
2. அம்பு அழைத்தல்
3. உலாவல்
4. கண்புதைத்து ஒளிந்தாடல்
5. கழங்கு
6. குரவை
7. சிற்றில்
8. சுண்ண விளையாட்டு

9. சூது

10. செடி-கொடி வளர்ப்பு

11. பறவை-விலங்குகளுடன் விளையாடல்

12. பாவை விளையாட்டு

13. மலர் கொய்தலும், மாலை தொடுத்தலும்

சங்க இலக்கிய விளையாட்டுக்கள் முப்பத்தேழும் மேற்குறித்த விளையாட்டு வகைகளுள் அடங்கும். விளையாட்டுக்கள் அனைத்தும் அந்தந்தப் பிரிவு விளையாட்டுக்களுள் விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

### 1.3. நாட்டுப்புற விளையாட்டுக்கள்

கிராமங்களில் விளையாடப்படும் பழைமையான விளையாட்டுக்களை நாட்டுப்புற விளையாட்டுக்கள் எனலாம். இந்நாட்டுப்புற விளையாட்டுக்கள், அவ்வப்பகுதி மண்ணிற்குரிய தனித்தன்மையுடன் விளங்குகின்றன. விளையாடும் மக்களின் மனநிலைக்கேற்பவும், சூழலுக்கேற்பவும் மாற்றங்கள் விளையாட்டினுள் சேர்க்கப் பெறுகின்றன.

நாட்டுப்புற விளையாட்டுக்கள் பெரும்பான்மை ஏதேனும் ஒரு பயன் அடிப்படையிலேயே அமைந்துள்ளன. உடல் திறம் பேணுதல், கேள்வியறிவினை வளர்த்தல், கற்பனையாற்றலைப் பெருக்குதல், அறிவுத் திறனை மேம்படுத்துதல், நடிப்பாற்றலை உருவாக்குதல் என்றவாறு விளையாட்டுக்களின் பயன் மதிப்பு மிகுதியாகும்.

ஓய்வு வேளையில் மனமகிழ்வுக்காகச் செய்யக்கூடிய எளிய அல்லது வேடிக்கையான செயல்களில் சில வரையறைகள் வகுக்கப்பட்டால் இவ்விளையாட்டிலும் ஒழுங்குமுறை ஆட்டம் உருவாகிறது. ஒழுங்கு முறைகளை ஒழுங்காகக் கடைபிடித்து வெற்றி பெறுகின்றவர்களைக் கண்டறிய முற்படும்போது போட்டியாட்டம் ஏற்பட்டுவிடுகிறது. போராட்டத்தின் வெற்றி அல்லது முடிவினை அறிவிக்க முற்படும்போது விளையாட்டின் தரம், உயர்வு நிச்சயிக்கப்படுகிறது. இம்முடிவினைப் பெற உடல் திறனோ அல்லது அறிவுத்திறனோ அல்லது வாய்ப்பு

நிலையோ காரணமாக இருக்கலாம். "உடல்திறன், அறிவுத் திறன் வளர்ச்சிக்கு உணவு முக்கிய இடத்தை வகிக்கிறது. நல்ல சத்துள்ள ஊட்ட உணவு தேவைக்கேற்ப உண்ணும் பொழுது விளையாட்டுத் துறையிலும் ஒளிவிட முடிகிறது" என்று சு.சிவகாமசுந்தரி 'மனையியல்' நூலில் கூறியுள்ளார்.[30]

நாட்டுப்புற வாழ்வியலின் ஒரு கூறான நாட்டுப்புற விளையாட்டுக்கள் பண்பாட்டின் அனைத்துக் கூறுகளும் அடங்கிய ஒன்றாகும். ஒரு சமுதாயத்தின் நாகரிகம் - பண்பாட்டோடு இணைந்ததே அந்தந்த நாட்டின் விளையாட்டுகளாகும்.

நமது கிராமச் சமுதாயத்தின் நாகரிகப் போக்கையும் பண்பாட்டுத் தாக்கத்தையும், பாரம்பரியத்தையும் விளக்க வல்லன நாட்டுப்புற விளையாட்டுக்கள். நாட்டுப்புற விளையாட்டுக்களைப் பற்றிப் பல்வேறு அறிஞர்களால் பல கருத்துக்கள் கூறப்பட்டுள்ளன.

"நாட்டுப்புற விளையாட்டுக்கள் எல்லாம் எண்ணிக்கையில் வரம்பு கடந்த ஆட்டக்காரர்களின் ஆர்வத்திற்கு இரைபோட்டு, இனிய உணர்வுகளை ஏற்றிவைத்து இன்பமயமான சூழ்நிலையில் உலவச் செய்திட உதவும் உயர்ந்த ஆட்டங்களாகவே உலகிலே உலா வருகின்றன"[31] என்ற எஸ்.நவராஜ் செல்லையாவின் கூற்று எண்ணத்தக்கது.

இரா.பாலசுப்பிரமணியன் 'தமிழர் நாட்டு விளையாட்டுக்கள்' என்ற நூலில் (1981) விளையாட்டின் சில பொதுவானக் கூறுகளை விளக்குகிறார். அத்துடன் ஆடவர், மகளிர், சிறுவர், சிறுமியர், குழந்தை எனப்பருவத்துக்கு ஏற்பப்பகுத்துப் பார்க்கிறார். 126 விளையாட்டுக்களைப் பற்றிய செய்திகளைத் தந்துள்ள இந்நூலைத் தவிரத் 'தமிழர் நாட்டுப்புற விளையாட்டுக்கள் ஓர் அறிமுகம்', "பண்டைத் தமிழ்ச் சிறுவர் விளையாட்டுக்கள்' முதலிய கட்டுரைகளையும் எழுதியுள்ளார்.

---

30 சு.சிவகாமசுந்தரி, மனையியல், ப.21.

31 எஸ்.நவராஜ் செல்லையா, ஒரு நூறு சிறு விளையாட்டுக்கள், ப.10.

*கி.வா.ஜகந்நாதன் 'குழந்தை உலகம்' (1955) என்ற நூலில் சில விளையாட்டுக்களைப் பற்றி விரிவான விளக்கங்களைத் தந்துள்ளார்.*

*ஞா.தேவநேயப்பாவாணர் 'தமிழ்நாட்டு விளையாட்டுக்கள்' (1962) என்ற நூலில் சிறுவர், சிறுமியர், பெண்கள், ஆடவர் விளையாட்டுக்கள், ஆடும் முறை, விளக்கம், விளையாட்டின் பயன் குறித்து விளக்கமாக எழுதியுள்ளார்.*

*சு.சக்திவேல், 'நாட்டுப்புற இயல் ஆய்வு'(1995) என்னும் நூலில் "இரண்டாயிரம் ஆண்டுகளாகத் தனக்கென ஒரு வாழ்வையும், வரலாற்றையும் வகுத்துக் கொண்ட நாடு நம்நாடு. அத்தகைய நாட்டில் தொடக்கத்தில் தொகுப்பு முயற்சிகள் தொடங்கின. பின்னர் ஆய்வுக் கட்டுரைகள் எழுந்தன. நாட்டுப்புறவியல் புதிய பரிமாணங்களைப் பெற்றுள்ளதோடு களங்களும் விரிந்துள்ளன" எனக் கூறியுள்ளார்.*

*த.இராசாராம், அம்மானை பற்றி ஆய்ந்து, 'தமிழில் அம்மானைப் பாடல்கள்' என்ற நூலை எழுதியுள்ளார்.*

1. *'நாட்டுப்புறஇயல்' (1975) டாக்டர் சு.சண்முக சுந்தரம்.*
2. *'தமிழக நாட்டுப்புறக் கலைகள்' (1980) டாக்டர் ஏ.என்.பெருமாள்.*
3. *'நாட்டுப்புற இயல் ஆய்வுகள்' (1983) டாக்டர் சு.சக்திவேல்.*
4. *'நாட்டுப்புற இயல் ஆய்வுகள்' (1986) டாக்டர் ஆறு.இராமநாதன்.*
5. *'நாட்டார் வழக்காறுகள்' (1988) டாக்டர் தே.லூர்து.*
6. *'வடார்க்காடு மாவட்ட நாட்டுப்புறப் பாடல்கள்' (1988) டாக்டர் மா.கோதண்டராமன்.*
7. *'நாட்டுப்புற நடனங்களும் பாடல்களும்' (1992) டாக்டர் கே.ஏ.குணசேகரன்.*
8. *'தமிழக மலையின மக்கள்' (1994) டாக்டர் கே.ஏ.குணசேகரன்.*
9. 'Folklore Survey of Thanjavur District' (1994) Dr. Mrs.G.Santhi.

*போன்ற நூல்களிலும் நாட்டுப்புற விளையாட்டுக்களைப் பற்றிய ஆய்வுகளைக் காணலாம்.*

விளையாட்டு என்பது நிலைக்களன், வாழ்க்கைத் தொழில், போர், அருஞ்செயல், சிறப்பு நிகழ்ச்சி முதலாகப் பலவகைப்படும் உழவர் செய்யும் பயிர்த்தொழிலைச் சிறுவர் நடித்தாடும் ஆடல் 'பண்ணை'யென்றும், ஓர் இளங்கண்ணிக்குக் களிறு, புலி முதலிய விலங்குகளாலும், சூழ்நீராலும் நேரவிருந்த கேட்டை, தற்செயலாக அவ்வழி வந்த காளைப் பருவத்தான் ஒருவன் நீக்கிய செய்தியைச் சிறார் நடித்தாடுவதைக் 'கெடவரல்' என்றும் பெயர் பெற்றதாக ஊகிக்க இடமுண்டு என்று எழுதுகிறார். ஞா.தேவநேயப் பாவாணர் (பண்ணை - வயல்) தமிழ்நாட்டு விளையாட்டுக்கள் (1962. முன்னுரை).

"சிறுவர்கள் போட்டி விளையாட்டுக்களில் அதிகம் ஈடுபடுகின்றனர். சிக்கல் மிகுந்த சமூக வாழ்க்கையில் பின்னர் ஈடுபட வேண்டியிருப்பதற்கு, இளம் வயதிலேயே அவற்றை எதிர்நோக்கும் பயிற்சியை விளையாட்டு அளிக்கிறது"[32] என்கிறார் சு.சக்திவேல்.

"உள்ளுக்குள்ளே அடைப்பட்டுக் கிடக்கும் கிளர்ச்சிகள் மனம் முறியாதபடி வெளி வருவதற்கு அமைந்த ஒரு வழியே விளையாட்டாம்" என்பார் ஆப்பிள்டன் (Appleton) அம்மையார்.

கட்ஸ்மத்ஸ் (Guts Muths) என்ற ஜெர்மனிய அறிஞர் "நம்முடைய உடலுக்கும், உள்ளத்திற்கும் ஓய்வும் அமைதியும் தேவை. அதனால் விளையாட்டுக்கள் விளையாடப்படுகிறது" என்கிறார்.

பாட்ரிக் (Patrich) "விளையாட்டுக்கள் அசதியினின்றும் விடுதலை பெறத் தேவைப்படுகின்றன" என்று கூறுகிறார்.

ஆப்பிள்டன் லேடி (Appleton Lady) நாட்டுப்புற விளையாட்டுக்கள் மூளையைப் பாதிக்காமல் ஒருவருடைய உள்ள உணர்ச்சிகளை, வெளிக் கொணர நல்ல வழி என்று கூறுகிறார்.

---

32 சு.சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, பக்.247-248.

விளையாட்டுக்களில் விளையாடுபவரின் செயல்களுக்கும், முடிவுகளுக்கும் முறையான உறவு இருப்பதில்லை. எனவே, ஒவ்வொரு நிலையிலும் முடிவுகள் கிடைக்க சந்தர்ப்பமே காரணமாக அமைகிறது. மேலும், ஒரு விளையாட்டில் வெற்றி, தோல்வி ஆகியவற்றின் விகிதம் ஓரளவிற்கு விளையாடும் முறையைப் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம். விளையாட்டைக் கற்றுக் கொள்ளப் பல நிலைகள் உள்ளன. அவையாவன,

1. முயற்சி - தவறு - முயற்சி - முறையில் கற்றல்.
2. ஒரு அமைப்போடு சேர்ந்து கற்றல்.
3. பார்த்துச் செய்தல் (அ) போலச் செய்தல் மூலம் கற்றல்.
4. எதிர்பாராத வண்ணம் கற்றல்.

**விளையாட்டின் சில பொதுவான வகைகள்**

**1.1. பட்டவரைத் தேர்ந்தெடுத்தல்**

முரணமைந்த விளையாட்டாக இருந்தால், பட்டவரைத் தேர்ந்தெடுப்பது வழக்கமாக உள்ளது. எடுத்துக்காட்டாகத் தொடுவிளையாட்டினைக் கூறலாம். ஒருவர் விரட்டப் பலர் ஓடுதல் வேண்டும். விரட்டி வரும் ஒருவர் 'பட்டவர்' என்று சொல்லப்படுகிறார். தானாக ஒருவர் முன் வந்து பட்டவராகச் செயல்படமாட்டார். ஆகவே, சில விதிமுறைகளின் படி 'பட்டவர்' தேர்ந்தெடுக்கப்படுகிறார்.

**காயா? பழமா?**

விளையாடும் சிறுவர்களுக்குள் தலைமைப் பொறுப்பேற்று நடத்தக் கூடியவர் ஒரு சில கற்களைக் கையில் வைத்துக் கொண்டு மற்றைய சிறுவரிடம் கையை நீட்டுவார். நீட்டிய இரு கைகளில் கல்லுள்ள கையைப் பிடித்தவரைப் 'பழம்' என்றும், கல்லில்லாத கையைப் பிடித்தவரைக் 'காய்' என்றும் சொல்வதுண்டு. காயானவர் பட்டவராகக் கருதப்படுவார்.

**சாட்பூட் திரி**

சிறுவர் நெருங்கி வட்டமாக நின்று கொண்டு 'சாட்பூட் திரி' என்று சொல்லிக் கொண்டே தங்களின் இரு கைகளையும் சேர்ப்பர். மேற்புறம் உள்ள கையை உள்ளங்கை

பக்கம் திருப்பியோ அல்லது புறங்கைப் பக்கம் திருப்பியோ வைக்கலாம். இப்படியே எல்லோரும் வைக்க எப்பக்கத்தைக் குறைவான எண்ணிக்கையில் வைத்துள்ளனரோ அவரெல்லாம் பழமாகிய வராகக் கருதப்படுவார்.

மீதமுள்ளவர் முன்போல் செயல்பட இறுதியில் இருவர் மட்டுமே இருப்பர். இருவரும் 'சாட்பூட்திரி' போடுதல் இயலாது என்று காரணத்தில் பழமேறியவரில் ஒருவர், துணைக் கையாக வருவார். இவ்வாறு இறுதியில் ஒருவரைப் பட்டவராகத் தேர்ந்தெடுப்பர்.

**கையினை இழுக்கும் முறை**

ஒருவர் கையினைக் கட்டிக்கொள்ள மற்றவரெல்லாம் அவர் கையைச் சிறிதுசிறிதாக இழுத்துவிட வேண்டும். யார் இழுக்கும் போது கட்டப்பட்டுள்ள கையானது முழுவதும் வந்து விடுகின்றதோ அவர் பட்டவராகக் கருதப்படுவார்.

**பாடல் முறை**

சிறுகுழந்தைகள் விளையாடக்கூடிய விளையாட்டாக இருந்தால் பட்டவரைத் தேர்ந்து எடுப்பதற்கு இப்பாடல் முறை பயன்படுத்தப்படுகிறது. விளையாட்டை நடத்தும் 'தாய்ச்சி' பாடலைச் சொல்லி ஒவ்வொரு குழந்தையையும் தொட்டு வருவாள். பாடலின் இறுதிச் சொல் யார் மேல் முடிகிறதோ அவள் பழம். இப்படியே எல்லோரும் பழமேறி இறுதியில் ஒருவரைப் பட்டவராகத் தேர்ந்தெடுப்பார்கள். பாடல் முறைக்கு எடுத்துக்காட்டாக "ஜம் ஜம், என்ன ஜம், ராஜம், என்னரா, கோரா, என்ன கோடீக்கோ" வைக்கூறலாம்.

**கட்சி பிரித்தல்**

குழு விளையாட்டாக இருந்தால் கட்சி பிரித்தாடும் இயல்பு காணப்படுகிறது. கட்சி பிரிக்கும் முறைக்கு 'உத்தி பிடிக்கும் முறை' என்றும் சொல்வதுண்டு. விளையாட்டில் கலந்து கொள்பவர்களில் இருவர் தலைவராக இருப்பர்.

தலைவரை 'உத்திதார்' என்றும் விளையாட்டில் கூறுவதுமுண்டு. மற்றவரெல்லாம் இரண்டு பேர்களாகச் சேர்ந்து கொண்டு மறைவான இடத்திற்குச் சென்று தங்களுக்குள்

ஒரு பெயரை வைத்துக்கொண்டு வரவேண்டும். இவ்வாறு பெயர் வைத்து வருதல் ‘உத்தி பிடித்தல்’ என்று கூறப்படுகிறது. இவர்கள் உத்தியாரிடம் வந்து மல்லிகைப்பூ வேண்டுமா? அல்லது தாமரைப்பூ வேண்டுமா? என்று தாங்கள் வைத்த பெயரைக் கேட்பார்கள். தலைவர் எப்பெயரைக் கேட்கிறாரோ அப்பெயருக்கு உரியவர் தலைவரின் உத்தியாளாகச் சேர்ந்து கொள்வார். இவ்வாறு இரு குழுக்களாகப் பிரிப்பார்கள்.

**முதலில் விளையாடும் முறை**

ஒரு விளையாட்டினை விளையாடுவதற்கு முன்பு யார் அல்லது எக்கட்சி முதலில் விளையாட வேண்டும் என்பதனைக் கண்டறியச் சில முறைகள் பின்பற்றப்படுகின்றன. தனியர் விளையாட்டாக இருந்தால் கலந்து கொள்பவரில் யார் முதலில் பச்சை மரத்தைப் பார்க்கின்றனரோ அவரே முதலில் ஆடும் தகுதியைப் பெறுகின்றார். பச்சை மரத்தைப் பார்த்து முதலில் ஆடும் தகுதியைப் பெற்றவரின் பெயரைக் குறிப்பிட்டு ‘அவர்கள் கை’ என்று யார் அடுத்து முதலில் கூறுகின்றனரோ அவர் அடுத்து ஆடும் தகுதியைப் பெறுகிறார். இப்படியே அடுத்து வருபவர்களும் சொல்லிக் கொண்டே வரவேண்டும்.

இரண்டு கட்சியினர் விளையாடுவதாக இருந்தால் எக்கட்சியினர் முதலில் விளையாட வேண்டும் என்பதை அறிய ‘எச்சி ஒட்டு’ முறை பயன்படுத்தப்படுகிறது. இந்த முறை நாணயத்தை வைத்துப் பூவா? தலையா? பார்க்கும் முறையுடன் இணைத்துக் கூறலாம்.

**அடையாளம் கொண்டு வருதல்**

ஒளிந்து விளையாடும் விளையாட்டுக்களில் இம்முறை இடம் பெறுகிறது. பழமேறியவர்கள் ஒளிந்து கொள்ள, பட்டவர் சற்றுத் தூரமான இடத்திற்குச் சென்று தொட்டுவர வேண்டும். ஏனெனில் பழமேறியவர் ஒளிந்து கொள்ளும் இடத்தைப் பட்டவர் பார்த்துவிடக் கூடாது என்பதற்காக இம்முறை பயன்படுத்தப்படுகிறது. தூரமான இடத்திற்குச் சென்று திரும்பும் பட்டவர் ஏதேனும் ஓர் அடையாளப் பொருளைக் கொண்டு வந்து காட்ட வேண்டும். எடுத்துக்காட்டாக, கடைக்குச் சென்று வருவதாக இருந்தால் வெற்றிலைக் காம்பையோ அல்லது புகையிலைக் கட்டையோ கொண்டு வருவது வழக்கம்.

**இடையில் நிறுத்துதல்**

*தவிர்க்க முடியாத காரணத்தால், விளையாட்டில் கலந்து கொள்ள இயலாத நிலை வரும் பொழுது 'இடையில் நிறுத்துதல்' என்ற செய்கை நடைபெறுகிறது. ஆடை அவிழ்வது, கூந்தல் கலைவது போன்றவைகளை உதாரணமாகக் கூறலாம். அவ்வமயம் 'தூவாச்சி' சொல்லுவார்.*

**பாட்டம்**

*மூச்சை அடக்கி, விளையாடும் இயல்பினைச் சுட்டிக்காட்டப் 'பாட்டம்' என்ற சொல் பயன்படுத்தப்படுகிறது. மூச்சை அடக்குவதற்காகப் பாடல் பாடுவது வழக்கமாக உள்ளது. மூச்சை விட்டு விட்டால் 'பாட்டம்' போயிற்று என்று சொல்வார்.*

**உப்பு வைத்தல்**

*விளையாட்டுக்களில் வெற்றி எண்ணிக்கையைக் குறிப்பதற்காக வைக்கப்படும் சிறுமணற் குவியலுக்குச் 'உப்பு வைத்தல்' என்று பெயர்.*

**தோற்றான்**

*விளையாட்டின் இறுதியில் யாரேனும் தோற்க நேர்ந்தால் அவருக்காக இறுதியில் தொடங்கும் ஆட்டத்திற்குத் தோற்றான் என்று பெயர்.*

*புளிய முத்தினைக் கொண்டு விளையாடப்பெறும் ஒத்தையா? ரெட்டையா? என்ற விளையாட்டைக் கூறலாம். விளையாட்டின் இறுதியில் அவருக்காகத் 'தோற்றான்' ஆட்டம் வைக்கப்படும். அப்போது அவர் வெற்றி பெற்றால் அவர் முன்போல விளையாட வாய்ப்புக் கிடைக்கும் இல்லையெனில் தோற்றானாக அறிவிக்கப்படுவார்.*

தோற்றனைக் கேலி செய்தல்

தோத்தா தொம்பா

சோறு போட்டா திம்பா

*என்று பாடுவதுமுண்டு.*

**தோற்றவருக்குத் தண்டனை**

*சில விளையாட்டுக்கள் மனமகிழ்ச்சிக்காக மட்டும் விளையாடப் படுகின்றன. சில விளையாட்டுக்கள் வெற்றி பெறுவதை மட்டுமே நோக்கமாகக் கொண்டு அமைந்திருக்கின்றன. வேறு சில விளையாட்டுக்கள் வெற்றி பெறுவதுடன், தோற்றவருக்குத் தண்டனை வழங்கும் முறையையும் கொண்டுள்ளன. தண்டனை வழங்கப்படுவதைச் சில விளையாட்டுக்களில் 'பழம் காய்ச்சுதல்' என்ற பெயரில் குறிப்பிடுவதுண்டு.*

**தண்டனைகளைப் பொதுவாக இரண்டு வகைகளில் கூறலாம்**

*தோற்றவர் தண்டனையாகத் தன் உடலை வருத்த வேண்டியிருக்கும்,*

*(அ) வெற்றி பெற்றவரைத் தூக்கிச் செல்லுதல்,*

*(ஆ) கைமணிக்கட்டினால் தேக்குதல்,*

*(எ.கா)*

1. *குதிரைச்சில்லி,*
2. *குண்டு விளையாட்டு,*

**தோற்றவர் தன் ஆடு கருவியை இழத்தல்**

*(எ.கா) 1. பம்பரம், 2. தெல்லுக்காய்,*

*நாட்டுப்புற விளையாட்டுக்கள் மனித எண்ணங்களை வெளிப்படுத்தும் ஒரு கருவியாக விளங்குவதால், எல்லா இனநாட்டுப் பண்பாடுகளிலும் காணப்படுகின்றன. விளையாட்டுக்கள் கால, இட அடிப்படையில் உண்மைத் தன்மையிலிருந்து பிரிக்கப்படுகிறது.* (Games are Separated from reality intime and space) *ஆனால் விளையாட்டின் எதிர்பார்ப்புகளும், நோக்கமும் கூரியதாகவுள்ளது.* Therefore its goals and Sources of motivation are intrinsic) *விளையாட்டை ஆடும்பொழுது விளையாடுபவர்கள். தங்களுக்கேயுரிய கற்பனைப் பாத்திரத்தை நிலை நாட்டுகின்றனர். எனவே, விளையாடும் பொழுது அவர்கள் செயல்கள் இந்தக் கூற்றின் சூழலில் அடிப்படையில் நோக்குதல் வேண்டும்.*

இவ்வாறான விளையாட்டுச் செய்கை அல்லது வெளிவட்டாரத் தொடர்பினால் புகுத்தப்படும் நிலையில் உண்மைக்குப் புறப்பான உணர்ச்சிகளுக்கும் இடத்திற்கும் ஒரு முடிவைத் தருகிறது. விளையாட்டை மற்ற ஆட்டங்களிலிருந்து பிரித்துப் பார்க்க இயலும். விளையாட்டு இருநபரிடையே போட்டியை ஏற்படுத்தவல்லன. விளையாட்டுக்கள் வெளிப்படையான அல்லது உள்ளுக்குள்ளே ஒரு சில வரையறைகளைக் கொண்டு, அந்த வரையறைகளின் அடிப்படையில் விளையாட அனுமதிக்கிறது. இந்த வரையறைகளை விளையாடுபவர்கள் முதலிலேயே தெரிந்து வைத்திருக்க வேண்டும். அதுவே வெற்றி தோல்வியை நிர்ணயிக்கும்.

## 1.3. நாட்டுப்புற விளையாட்டின் வகைகள்

நாட்டுப்புற விளையாட்டுக்களைப் பல்வகையில் பிரித்துக் காணலாம். உடல் நலத்தையும், அறிவுத்திறனையும் ஆக்கமுறச்செய்யும் ஊக்க உந்து கருவியான விளையாட்டுக்கள் காலம், கருவி, களம், பங்கு பெறுவோர், பால், வயது, பாடல், தன்மை, போட்டி, செயல்கள், வரைபடம் அடிப்படையில் பதினொரு வகையாகப் பகுத்துக் காணலாம்.

**கால அடிப்படையில் நாட்டுப்புற விளையாட்டுக்கள்**




**வெயிற்கால விளையாட்டு**

வெயிற்கால விளையாட்டாகப் 'புளியங் கொட்டை சீத்துதல்' விளையாட்டைக் குறிப்பிடலாம். இது ஒரு குழு விளையாட்டாகும். சிறுமியர் 10, 15, 20 எண்ணிக்கை புளியங்கொட்டைகளை ஒரு பெரிய வட்டம் வரைந்து அதில் போடுவர். சீத்தும் வகையில் சில் ஒன்று வைத்திருப்பர். சில்லை வீசி எவர் சில் முதலில் இருக்கிறதோ அவர்

முதலில் புளியங்கொட்டைகளைச் சீத்துதல் வேண்டும். அதிக புளியங்கொட்டைகளை எடுத்தவர் வென்றவராவார். புளியங்கொட்டைகள் கோடைக் காலத்தில் அதிகம் கிடைப்பதால் இவ்விளையாட்டுப் புற விளையாட்டாக அமைகிறது. புளியங்கொட்டைத் தாய விளையாட்டும் உண்டு.

"வெயிற்காலம்" - "கோடைக்காலம்" மக்கள் தங்கள் வீட்டில் வருடச் சமையல் சாமான்கள் சேகரிக்கும் பொழுது புளியமரங்களில் புளியம்பழம் உலுக்கி (அல்லது) வாங்கிப் புளியும் சேர்ப்பார்கள். அதைச் சுத்தம் செய்து அதில் உள்ள கொட்டைகளைப் பயன்படுத்தி விளையாட்டுக் கருவியாக மேற்கொள்வர்.

**மழைக்கால விளையாட்டு**

மழைக்காலங்களில் வெளியில் சென்று விளையாட முடியாது. எனவே, அகவிளையாட்டுக்களாகவே அமையும். சிறுவர்கள் காலையில் பளிங்கு, பம்பரம் சுற்றுதல், வீட்டுக்குள் ஒளிந்து பிடித்து விளையாடல் போன்றவையும், மாலையில் புளியங்கொட்டைத் தாய விளையாட்டுப் போன்றவையும் விளையாடக் காணலாம்.

**பம்பரம்**

சிறுவர்கள் சேர்ந்து குழுவாக இவ்விளையாட்டை விளையாடுகின்றனர். விளையாடுபவர்கள் அனைவரும் ஒரே நேரத்தில் பம்பரத்தை நூல்கயிற்றால் சுற்றி தரையில் விட்டு அக்கயிற்றில் சுழலும் பம்பரத்தைக் கையில் எடுக்க வேண்டும். இவ்வாறு செய்வதை 'ஆபிட்' என்கின்றனர். எவர் இறுதியில் 'ஆபிட்' எடுக்கிறாரோ அவர் தரையில் தோராயமாக இரண்டடி விட்டத்தில் குச்சியால் வரையப்பட்டுள்ள வட்டத்தில் பம்பரத்தை வைக்க வேண்டும். (அவ்வட்டத்தை 'வல்லா' என்றும் குறிப்பிடுகின்றனர்). இச்செயல் இறுதியாக 'ஆபிட்' எடுத்தவரின் திறமைக் குறைவுக்குத் தண்டனைபோல் அமைந்துள்ளது.

மற்றவர்கள் வட்டத்திற்குள் இருக்கும் பம்பரத்தைத் தங்கள் பம்பரங்களைவிட்டு அடித்து வெளியே கொண்டு வரவேண்டும். வட்டத்திற்குள் இருக்கும் பம்பரம் வெளியே வந்துவிட்டால் மீண்டும் அனைவரும் 'ஆபிட்' எடுக்க வேண்டும். இம்முறையும் எவர்

இறுதியில் 'ஆபிட்' எடுக்கிறாரோ அவர் வட்டத்திற்குள் பம்பரத்தை வைக்க, விளையாட்டுத் தொடர்ந்து நடைபெறும். பம்பர விளையாட்டில் மற்றும் சில வகைகள் உள்ளன.

**ஆடுகளம் அடிப்படையில் நாட்டுப்புற விளையாட்டுக்கள்**




**அகவிளையாட்டு**

அகவிளையாட்டிற்கு எடுத்துக்காட்டாக ஒத்தையா? ரெட்டையா? விளையாட்டு மட்டும் விளக்கப்பட்டுள்ளது.

**ஒத்தையா? ரெட்டையா?**

வீட்டுத்திண்ணையிலும், முற்றத்திலும் அமர்ந்து மடியில் புளியங் கொட்டைகளை வைத்துக்கொண்டு எதிர் எதிரே அமர்ந்து புளியங்கொட்டைகளைக் கையில் மூடியவாறு ஒத்தையா? ரெட்டையா? பம்பையா பரட்டையா? என்பர். ஒத்தை என்றால் கூறியவாறு ஒற்றைப் படையாக இருந்தால் அந்த அளவு புளியங்கொட்டைகளை அளிக்க வேண்டும். தவறாக இருந்தால் கூறியவர் தரவேண்டும்.

**புறவிளையாட்டு**

புறவிளையாட்டிற்குப் பச்சைக் குதிரை விளையாட்டு மட்டும் எடுத்துக்காட்டாக விளக்கப்பட்டுள்ளது.

**பச்சைக்குதிரை**

சிறுவர்கள் தெருக்களில் குழுவாக விளையாடுவர். ஒருவன் அமர்ந்து ஒரு காலை நீட்டி இருக்க, மற்றவர்கள் தாண்டித் தாண்டிச் செல்வர். பிறகு அடுத்த ஒருகால், ஒருகை,

மறுகை வைத்து, எழுந்து, குனிந்து நிற்பர். மற்றவர்கள் தாண்டித் தாண்டிச் செல்வர். கொஞ்சம் கையைக் காலில் உயர்த்தி வைப்பார். இவ்வாறே உயர்ந்து கொண்டே வர யார் தாண்ட முடியாமல் இருக்கிறாரோ அவர் குனிந்து நிற்பவர் முதுகில் தட்டிவிட்டால் அவர் தோற்றவராகிக் குனிந்து நிற்க வேண்டும். இவ்வாறே தொடர்ந்து ஆட்டம் நடைபெறும்.

**கருவி அடிப்படையில் நாட்டுப்புற விளையாட்டுக்கள்**




**சில்லுக்கோடு (ஒரு கருவி மட்டும் வைத்து விளையாடுதல்)**

கட்டம் போட்டுச் சில்லைக் கொண்டு ஆடும் விளையாட்டு ஆகும். இதில் பலவகை உண்டு. ஒற்றைச் சில்லி ஒரு கட்டமிட்டு விளையாடுதலாகும். சிறுமியர் விளையாடும் ஆட்டம் இது.

இவ்விளையாட்டைச் சில்லு அல்லது சில்லாக்கு அல்லது சில்லுக்கோடு என அழைக்கலாம். இருவர் இதை ஆடுவர்.



படத்தில் காட்டியவாறு ஆடுகளம் அமைத்துக் கொள்வர். உடைந்த ஓடுகள் சில்லாகப் பயன்படும். முதல் கட்டத்தில் சில்லைப் போட்டு நொண்டியடித்து அக்கட்டத்தைத் தாண்டி அடுத்த கட்டங்களை ஒவ்வோர் எட்டில் மிதித்துச் சென்று கடைசி கட்டத்திற்கு வெளியே காலூன்றி, மீண்டும் முன்போல் நொண்டி அடித்துக்கீழ் வந்து சில்லை மிதித்து வெளியே தள்ளி, அதை ஓர் எட்டில் மிதித்தல் வேண்டும்.

இங்ஙனம் பிற கட்டங்களிலும் தொடர்ந்து சில் எறிந்து ஆடல் வேண்டும். மேல் கட்டங்களில் எறிந்த சில்லை ஒவ்வொரு கட்டமாகக் கீழே தள்ளிக்கொண்டு வந்து ஆடிக் கட்டத்தில் இருந்து வெளியே தள்ளி ஒரே எட்டில் மிதித்தல் வேண்டும். கட்டங்களின் வெளியே செல்லும் போதும் மீளும் போதும் நொண்டியடிக்க வேண்டிய போதெல்லாம் நொண்டியடித்தே சென்று மீள வேண்டும்.

எறியப்பட்ட சில் கட்டத்திற்கு வெளியில் விழுந்தாலும், கட்டத்திற்குள் விழாமல் கோட்டின் மேல் விழுந்தாலும், நொண்டியடித்துக் கட்டத்திற்குள்ளும் வெளியேயும் ஒரே எட்டில் சில்லை மிதிக்கத் தவறினாலும், கோட்டின் மேல் மிதித்தாலும், நொண்டி அடிக்கும்போது தூக்கிய காலைக் கட்டத்திற்குள் ஊன்றினாலும், காலால்வெளியே தள்ளப்பட்ட சில் முதல் கட்டத்தில் இருந்து ஒரே எட்டில் மிதிக்க முடியாதபடி நெடுந்தொலைவிற்குச் சென்றாலும் ஆடுபவர் தோற்றவராவார். அதன்பின் அடுத்தவர் ஆடவேண்டும். ஆட்டம் முடியும் வரை இருவரும் மாறி மாறி ஆடுவர்.

நாலு கட்டங்களிலும் சில் எறிந்து அகங்கையில் ஒருமுறையும், புறங்கையில் ஒரு முறையும் குத்துக்கைமேல் ஒருமுறையும், சில்லை வைத்துக் கொண்டு மலைவரை நொண்டியடித்துச் சென்று மீள வேண்டும். மலையில் காலூன்றிக் கொள்ளலாம். அதன்பின் தலைமேல் ஒருமுறையும் வலப்பாதத்தின் மேல் ஒருமுறையும் சில்லை வைத்துக் கொண்டு மலைவரை நொண்டியடித்துச் சென்று மீள வரவேண்டும்.

பின்பு மலையிலிருந்து சில்லையெறிந்து நொண்டியடித்துச் சென்று மிதித்து அங்கிருந்து அடுத்த மலைக்கு எறிந்து நொண்டியடித்து வந்து மிதிக்க வேண்டும். பின் மலையிலிருந்து சில்லையெறிந்து கண்ணை மூடிக்கொண்டு அல்லது மேல்நோக்கிக் கொண்டு ஒவ்வொரு கட்டத்திலும் ஒவ்வோர் எட்டு வைக்கும் போதும் "இச்சா,

இனியா, காயா, பழமா" என்று சொல்ல வேண்டும். கால் கோட்டில் பட்டுவிட்டால் அடுத்தவர் ஆடவேண்டும். அடுத்து மேலா, கீழா என்று கேட்டு (மேட்டா, கீட்டா என்றும் கூறலாம்) சில்லை ஒரு கட்டத்தில் எறிய வேண்டும். எக்கட்டத்தில் விழுகிறதோ, அக்கட்டத்தில் மூலைக் குறுக்குக் கோடுகள் கீறல் வேண்டும். அது பழம் அல்லது மச்சு கட்டுதல் எனப்படும். பழம் போட்ட கட்டத்திற்குள் எதிரியார் கால் வைத்தல் கூடாது. எதிரியார் வசதிக்காக அக்கட்டத்திற்கு வெளியே வலப்புறம் அல்லது இடப்புறத்தில் கட்டத்தையொட்டி ஒரு அரை வட்டம் அமைத்துக் கொடுக்கப்படும். அதற்கு 'யானையடி' என்று பெயர்.

ஒருமுறை மச்சு கட்டியவர் மறுமுறை முந்தியாடுவர். இவ்வாறு எல்லாக் கட்டத்திலும் பழம் போட்டபின் விளையாட்டு கலைக்கப்பட்டு மீண்டும் கீறப்படும்.

**ஒன்றுக்கு மேற்பட்ட கருவி விளையாட்டிற்கு எடுத்துக்காட்டு**

**பல்லாங்குழி**

மரத்தால் செய்யப்பட்ட பதினான்கு குழிகளைக் கொண்ட பலகை அல்லது மண்ணிலும் குழிதோண்டிக் காயிட்டு விளையாடுதல் உண்டு.



**விளையாட்டுக்கருவி**

புளியங்கொட்டைகள் அல்லது சோழிகள். பல்லாங்குழியில் ஆட்ட வகைகள் பல உண்டு. இதனைப் பாண்டியாட்டம் என்றும் கூறுவர். பல பெயர்களும் உண்டு. அதில் முத்துப்பாண்டியின் ஆட்டமுறையைப் பின்வருமாறு காணலாம்.

**ஆடும் முறை**

இருவர் ஆடும் இந்த ஆட்டத்தில் ஒவ்வொருவருக்கும் ஏழு குழிகள் என்ற வீதத்தில் பிரிக்கப்பட்டு எதிர்எதிர் அமர்ந்து ஆடுவர். ஒவ்வொரு குழியினுள்ளும் ஐந்து ஐந்து காய்களை இடுவர். முதலில் ஆடுபவர் ஏதேனும் ஒரு குழியைப் பிரித்து அதன் வலப்புறக் குழியிலிருந்து தொடங்கி ஆடுவர். அக்காய் முடிந்தவுடன் அடுத்த குழியிலுள்ள காய்களைப் பிரித்தாடுவர். அப்பொழுது அடுத்த குழி வெறுமையாக இருந்தால் அதனைத் துடைத்து அடுத்துள்ள குழியின் காய்களை எடுப்பர். இதனைத் 'துடைத்து எடுத்தல்' என்பர். அவ்வாறு எடுக்கும் காய்க்குப் 'பாண்டி' என்று பெயர்.

ஒருவர் ஆடி முடித்தபின் மற்றொருவர் ஆடுவார். வெறுமையாக உள்ள குழிகளில் நான்கு காய்கள் சேர்ந்து விட்டால் அதனை 'முத்தென்று' சொல்லி அவரவர் எடுத்துக்கொள்வர். காய்கள் அனைத்தையும் ஒருவரே எடுத்துவிட்டால் ஆட்டம் முடிவுற்றதாகக் கருதப்படும்.

தோற்றவர்க்கு ஒரு குழிக்குத் தேவையான காய்கள் கிடைக்கவில்லை எனில் ஒவ்வொரு குழியிலும் ஒரு காயினையிட்டுக் குழியை நிரப்புவர். முன்போலப் பிரித்தாடுவர். இதனைக் 'கஞ்சி காய்ச்சுதல்' என்பர். கஞ்சி காய்ச்சுவதற்குக் கூடக் காயில்லாத நிலை தோற்றதாக அறிவிக்கப்படும்.

அறிவுத்திறன் விளையாட்டாகவும், அகவிளையாட்டாகவும் அமைகிறது.

**பங்கு பெறுவோர் அடிப்படையில் நாட்டுப்புற விளையாட்டுக்கள்**



**தனியார் விளையாட்டிற்கு எடுத்துக்காட்டு**

**சீதைப்பாண்டி**

தனிமையில் இருக்கும் ஒருத்தி தானாகவே விளையாடும் பல்லாங்குழி விளையாட்டுத் தனியார் விளையாட்டிற்கு எடுத்துக்காட்டு.



படத்தில் குறித்தவாறு பல்லாங்குழியில் ஏழு என்ற எண்ணிக்கையில் தொடங்கி ஒன்று எனக் காயை நிரப்புவர். முதலில் ஏழுகாய் உள்ள குழியையே பிரித்தாடுவர். பிரித்தாடும் போது இறுதிக்காய் முடிந்து அடுத்து ஆறுகாய் குழி பிரிபடும். இவ்வாறே தொடர்ந்து ஆட, ஏழு பாண்டி சேர்ந்து ஒவ்வொன்றாகப் பிரித்து ஆடிக்கொண்டே இருக்க வேண்டும். முதலில் எவ்வாறு காயைப் பூட்டி ஆட்டம் தொடங்கினோமோ அவ்வாறே காய்கள் வந்துவிடும். முத்தெடுப்பதும் துடைத்து எடுப்பதும் இப்பாண்டியில் இல்லை.

தனிமைத் துயரில் சீதை, தன் சிந்தனையை ஒரு முகப்படுத்தி இந்த விளையாட்டில் செலுத்தியதாகக் கொண்டு தனிமையில் இருப்பவர் ஆடும் ஆட்டம். இதனால் துன்பம் வடிகாலாய் மாற வாய்ப்பும், சிந்தனையும் ஒரு முகப்படும். மற்றவரோடு வம்பு வளர்க்க வாய்ப்பில்லை.

**ஒன்றுக்கும் மேற்பட்டோர் (அ) இருவர் விளையாட்டிற்கு எடுத்துக்காட்டு**

**கிச்சு கிச்சுத் தாம்பூலம்**

இருவர் எதிர் எதிரே அமர்ந்து கொள்வர். மணலை நீளவாக்கில் சிறு கோபுரம் போலச் சேர்த்துக் கொண்டு அம்மண்ணில் சிறுகுச்சியை மறைத்து வைத்துவிட்டு அடுத்தவரைக் கண்டுபிடிக்கச் சொல்லும் விளையாட்டாகும். இதில் மறைத்து வைப்பவர் பாடிக் கொண்டே குச்சியை மறைத்து வைப்பர்.

கிச்சு கிச்சுத் தாம்பூலம்

கிய்யா கிய்யாத் தாம்பூலம்

நட்டு வச்சா பட்டுப்பூ பட்டுப்பூ

எனக் கூறி தன் கையால் குச்சி வைத்த இடத்தை மூடிக்கொள்ள வேண்டும். எதிரில் இருப்பவர் குச்சியைக் கண்டுபிடிக்க வேண்டும். அவர் கையில் குச்சி கிடைத்தால் அவர் ஆட்டத்தைத் தொடங்குவார். ஆடியவர் கண்டுபிடித்தால் அவர் வென்றவர். அதிகப்புள்ளிகள் பெறுபவர், குறைந்த புள்ளிகள் பெற்றுத் தோல்வி அடைந்தவர் கையைப் பின்னால் கோத்து வைத்து அதில் மணலைக் குச்சியுடன் சேர்த்து வைத்துக் கண்ணைப் பொத்திக் கொண்டு "வண்ணான் வீடு எங்கிருக்கு" என்று வினவக் கண்பொத்தப்பட்டவள் "ஆத்துக்கு அந்தாண்ட" என்று கூறிக்கொண்டே சென்று தொலைவான தூரத்தில் கையில் உள்ள மண்ணைக் கீழே வைக்கச் சொல்லி மீண்டும் விளையாடிய இடத்திற்கே அழைத்து வந்து தலையை இரண்டு, மூன்று முறை சுற்றிவிட்டு கண்ணைத் திறந்து விடுவாள். மணல் வைத்த இடத்தை அவள் கண்டுபிடிக்க வேண்டும். கண்டுபிடித்தால் அவள் வெற்றி பெறுவாள். இல்லையேல் தோல்வி அடைவாள்.

**குழு விளையாட்டு**

**கண்ணா மூச்சி**

முதியவள் ஒரு சிறுமியின் கண்ணைப் பொத்திக் கொள்வாள். மற்றவர்கள் ஓடி ஒளிந்து கொள்வர். முதியவள் பொத்தியிருந்த கண்ணைத் திறந்து,

கண்ணா மூச்சி ரே ரே

காதடைப் பான் ரே ரே

பீமுட்டையைத் தின்னுபுட்டு

நல்ல முட்டை கொண்டுவா

எனக் கூறுவாள். ஒளிந்து கொண்டிருப்பவர்களைக் கண்டுபிடித்து தொட வேண்டும். இதற்கிடையில் ஒளிந்து கொண்டிருப்பவர்கள் முதியவளை வந்து தொட்டுவிட்டால் அவர்கள் 'அவுட்' ஆவதில்லை. கண்பொத்தி வந்தவள் பிடித்துவிட்டால் பிடிபட்டவள் கண்பொத்தி வரவேண்டும். யாரையும் தொடாவிட்டால் அவளே மீண்டும் கண்ணைப் பொத்தி வரவேண்டும். இவ்வாறாக ஆட்டம் தொடரும்.

**பால் அடிப்படையில் நாட்டுப்புற விளையாட்டுக்கள்**




ஆண்கள் விளையாட்டுக்கள் பெரும்பான்மையும் உடல்திறன் விளையாட்டுக்களாகவும், புறவிளையாட்டுக்களாகவும் அமையும்.

பெண்கள் விளையாட்டுக்கள் அகவிளையாட்டுக்களாகவும் அறிவுத்திறன் விளையாட்டுக்களாகவும் அமையும்.

**ஆண்கள் விளையாட்டு: எடுத்துக்காட்டு**

**மற்போர்**

இஃது ஒரு தொன்மையான விளையாட்டு. உண்மையாகவே உள்ளத்தில் சினமோ, பகையோ இல்லாமல் வெற்றி தோல்விக்காக ஆடும் விளையாட்டு. இதற்குப் பயிற்சி தேவை.

'மல்' என்றால் வலிமை என்று பொருள், தம் வலிமையை வெளிப்படுத்தப் போரிடுவதே இவ்விளையாட்டு. இதற்கென்று பழகியவர்களே இவ்விளையாட்டில் ஈடுபடுவர்.

**பெண்கள் விளையாட்டு : எடுத்துக்காட்டு**

**ஊஞ்சலாட்டம்**

கிராமப்புறங்களில் அறுவடைக்காலங்களில் களத்துமேட்டை விளையாட்டுக் களமாக்கி விளையாடும் ஆட்டங்களுள் ஊஞ்சலாட்டமும் ஒன்று. ஆட்டம் ஒரே முறையாக அமைவதினால் கலை என்று கூறுவதைவிட ஓர் 'இன்ப விளையாடல்' என்று சொல்வதே பொருந்தும்.

வாய்ப்பான மரக்கிளைகளில் இரண்டு கயிறுகளைக் கட்டித் தொங்க விடுவர். கயிறு வைக்கோல் பிரியால் முறுக்கப்பட்டிருக்கும். தொங்கும் பகுதியில் ஒரு பலகையை இணைத்து அமருவதற்கு வசதி செய்வர். அதில் பெண்கள் அமர்ந்து, கயிற்றைப் பலமாகப் பிடித்துக் கொண்டு ஆடுவர். கால் உந்துதலால் ஊஞ்சலை அங்கும், இங்கும் வேகங்கொள்ளுமாறு செய்வர். ஒருவருக்குமேல் ஆடும்போது இருபக்கமும் மாறி மாறி அமர்ந்து கொள்வர் தனிப்பட்ட நோக்கம் எதுவுமில்லை - மனமகிழ்ச்சி விளையாட்டாகும்.

**வயது அடிப்படையில் நாட்டுப்புற விளையாட்டுக்கள்.**




**சிறுவர் விளையாட்டிற்கு எடுத்துக்காட்டு**

**கால் தூக்கிக் கணக்குப் பிள்ளை**

ஒரு முதலாளியின் காலைத் தூக்கிக் கணக்குப்பிள்ளை போல். ஒருவன் இன்னொருவன் காலைத் தூக்கி ஆடும் ஆட்டம். இதை ஆட நால்வர் வேண்டும். இவ்விளையாட்டுப் பொட்டலிலும் தெருவிலும் ஆடப்பெறும்.

**ஆடும் முறை**

ஒருவன் வலக்கையும் மற்றவன் இடக்கையுமாக இருவர் கைக்கோத்துக் கீழே தொங்கவிட்டு முன்னோக்கி நிற்க, மூன்றாமவன் அவ்விருவர் தோளிலும் அணைத்துக் கொண்டு, தன் வலது முழங்காலை அவருடைய கோத்த கையில் வைத்தபின் அவனது

இடது முழங்காலை நான்காமவன் நிலத்தில் ஊன்றாதவாறு இருகைகளாலும் தாங்கிப் பிடித்துக் கொள்வான். இந்த நிலையில் மூன்றாமவனைத் தூக்கிக் கொண்டு முதலிருவரும், நாலாமவனும் அங்குமிங்கும் செல்வர். அப்படிச் செல்லும் போது முதல் இருவரும் "கால் தூக்குகிற கணக்குப் பிள்ளைக்கு மாசம் பத்து ரூபா" என்று மீண்டும் மீண்டும் சொல்லிக் கொண்டே செல்வர்.

**சிறுமியர் விளையாட்டிற்கு எடுத்துக்காட்டு**

**ஒருகுடம் தண்ணீர் ஊத்தி**

"ஒருகுடம் தண்ணீர் ஊத்தி" என்று தொடங்கும் பாட்டைப் பாடி ஆடும் விளையாட்டு ஆதலால் இவ்விளையாட்டு அப்பெயரையே கொண்டது.

இதை ஆட நால்வருக்குக் குறையாது இருக்க வேண்டும். இந்த ஆட்டம் தெருவில் விளையாடப்படும்.

**ஆடும் முறை**

இருவர் கைகோத்து உயர்த்தி வைத்துக் கொண்டிருக்க அவருக்கிடையே வேறிருவர் அல்லது பலர் ஒருத்தி பின் ஒருத்தியாக ஒருத்தியை ஒருத்தி பற்றிக் கொண்டு நுழைந்து சென்று "ஒரு குடம் தண்ணீர் ஊற்ற ஒரு பூப்பூத்ததாம். இரண்டு குடம் தண்ணீர் ஊற்றி ரெண்டுப் பூப் பூத்ததாம்" என்று பத்துக் குடம் தண்ணீர் வரையும் பாடிக்கொண்டு கைகோத்து நிற்கும் இருவரையும் மாறி மாறிச் சுற்றிக் கொண்டே இருப்பர்.

"பத்துக்குடம் தண்ணீர் ஊத்தி" என்ற அடி முடிந்தவுடன் அல்லது அதற்கு சற்று முன்பே, கைகோத்து நிற்கும் இருவரும் கையைத் தாழ்த்தி இரண்டாவது அல்லது கடைசிப் பிள்ளையைப் பிடித்துக் கொள்வர் அல்லது சிறை செய்வர். அப்போது வரிசையின் முதல்விக்கும் கைகோத்து நிற்பவருக்கும் பின்வருமாறு உரையாடல் நிகழும்.

| | | |
|---|---|---|
| வ.மு. | : | விடடா துலுக்கா! |
| கைகோத்திருப்பவர் | : | விடமாட்டேன் மலுக்கா! |
| வ.மு. | : | (கணுக்காலில் கைவைத்து) இம்மாம் இம்மாம் பொன்னு தாரேன், விட்டாதுலுக்கா! |

| | | |
|---|---|---|
| கை. | : | விடமாட்டேன் மலுக்கா! |
| வ.மு. | : | (முழங்காலில் கைவைத்து) இம்மாம் இம்மாம் பொன்னு தாரேன் விடடா துலுக்கா! |
| கை. | : | விடமாட்டேன் மலுக்கா! |
| வ.மு. | : | (தோளில் கைவைத்து) இம்மாம் இம்மாம் பொன்னு தாரேன் விடடாதுலுக்கா! |
| கை. | : | விடமாட்டேன் மலுக்கா! |
| வ.மு. | : | (தலைக்கு மேல் கைவைத்து) இம்மாம் இம்மாம் பொன்னு தாரேன் விடடா துலுக்கா! |
| கை. | : | விடமாட்டேன் மலுக்கா! |
| வ.மு. | : | (தலை மேல் கைதூக்கிக் குதித்து) இம்மாம் இம்மாம் பொன்னு தாரேன் விடடா துலுக்கா! |
| கை. | : | விடமாட்டேன் மலுக்கா! |

இப்படி உறழ்ந்து உரையாடிய பின் "ஆட்டுக் கறியும் சோறும் தாரேன் விடடா துலுக்கா" என்று வரிசை முதல்வி கூறியவுடன் சிறை செய்யப்பட்ட பிள்ளை விடுதலை செய்யப்படும். அதோடு விளையாட்டு முடியும்.

**சிறுவர் மற்றும் சிறுமியர் விளையாட்டுக்கள் எடுத்துக்காட்டு**

**கல்லா? மண்ணா?**

இவ்விளையாட்டில் சிறுவர் சிறுமியர் கூட்டமாக ஓடுவர். இத்துணை பேர் என்ற எண்ணிக்கை இல்லை. ஒருவர் பிடிக்க வேண்டும். ஓடுபவர்கள் பிடிப்பவரிடம் கல்லா? மண்ணா? என்று கேட்க வேண்டும். கல் என்றால் மண்ணிலும், மண் என்றால் கல்லிலும் நிற்க வேண்டும். மண் என்று கூறும்போது மறந்துபோய் மண்ணில் நின்றால் பிடிப்பவர் அவரைத் தொட்டு விட்டால் அவர் ஆட்டத்தில் இருந்து விலக வேண்டும். மீண்டும் ஓடிப்பிடித்து அவ்வாறே விளையாடுவர். இருபொழுதிலும் விளையாடலாம். சிறுவர் சிறுமியர் கூடி விளையாடும் உணர்வைப் பெறுகின்றனர். ஆண், பெண் பேதைமை இல்லை.

**ஆண்கள் விளையாட்டு எடுத்துக்காட்டு**

**ஆடுபுலி ஆட்டம்**



படத்தில் காட்டியவாறு அமைந்துள்ள இக்கட்ட விளையாட்டினை பதினஞ்சாம்புலி அல்லது ஆடுபுலி ஆட்டம் என்றும் கூறுவர். இவ்விளையாட்டு இந்தியா, இந்தோனேசியா, சீலம், சுமத்திரா, இலங்கை ஆகிய நாடுகளில் வழக்கில் உள்ளது.

மூன்று புலிகளும் பதினைந்து ஆடுகளும் இவ்விளையாட்டில் இடம் பெறுகின்றன. புலியைக் கட்டுவதே இவ்விளையாட்டின் நோக்கம். புலிக்கு வெட்டு இருப்பின் வெட்ட வேண்டும் என்றும் புலி ஒரு வேளையில் ஒரு வெட்டே வெட்டலாம் என்றும் புலியும் ஆடும் நேராகவே நகரும் என்றும் சில ஆட்ட விதிகள் உள்ளன. புலியாகக் கற்களும் ஆடுகளாகப் புளியங்கொட்டை களும் பயன்படுத்தப்படுகின்றன.

ஊர்ப்பொதுச் சாவடிகளிலும், தோப்பிலும் பெரும்பாலும் இவ்விளையாட்டு நடைபெறும். மூன்று கோடுகளால் இரண்டு கட்ட வரிசைகள் அமையுமாறு கட்டங்கள் வரைந்தும் நான்கு கோடுகளின் உதவியால் மூன்று கட்ட வரிசைகள் அமையுமாறு வரைந்தும் ஆடுவர்.

போர்க்களத்தில் படைவீரர்கள் நகர்ந்து (இடம் பெயர்ந்து) செல்வது போல் காய்களை நகர்த்தி வெற்றி தோல்விகளை நிர்ணயிப்பர்.

ஆடுபுலி ஆட்டமானது குறிஞ்சி நிலத்திற்கும் முல்லை நிலத்திற்கும் இடைப்பட்ட இயற்கை வேட்டுவினைப் போராட்டம் விளையாட்டின் தோற்றத்திற்குக் காரணமாய்

இருக்கலாம் என்பார் இரா.பாலசுப்பிரமணியம்.[33] இதை மறுக்கிறார் அ.பிச்சை.[34] அவரோ மென்மைக்கும் வன்மைக்கும் நடக்கும் வர்க்கப்போராட்டம் என்று உய்த்துணரலாம் என்பார்.

**பெண்கள் விளையாட்டு எடுத்துக்காட்டு**

**புளியங்கொட்டைத் தாய விளையாட்டு**

கோடைக்காலத்தில் மட்டும் விளையாடும் விளையாட்டாகும். இக்காலத்தில் தான் புளியம்பழம் அதிகமாகக் கிடைப்பதால் இந்த விளையாட்டைக் கோடைக் காலத்தில், இன்றும் விளையாடுகின்றனர்.

இந்த விளையாட்டிற்கு நான்கு முழுப் புளியங்கொட்டைகள் தேவைப்படும். இந்த நான்கு புளியங்கொட்டையையும் தரையில் தேய்த்து கருப்பு - வெள்ளை என ஆக்கிக்கொள்ள வேண்டும். இப்போது நான்கு புளியங்கொட்டையில் நான்கு பக்கம் கருப்பும் நான்கு பக்கம் வெள்ளையும் என அமைந்திருக்கும்.

இந்த விளையாட்டிற்குக் குறைந்தது இரண்டு பேர் தேவைப்படுவர். அதற்குமேல் உட்காரும் இடத்தைப் பொறுத்து 3, 4, 5, 6, 7 என அமர்வர்.

இருவர் விளையாட்டாகவும், குழுவிளையாட்டாகவும் இந்த விளையாட்டை விளையாடுவர். இருவர் விளையாட்டில் ஒருவர் மாறி ஒருவர் விளையாடுவர். குழு விளையாட்டில் 1, 2, 3, 4, 5 என்ற முறையே விளையாட வேண்டும். இந்த விளையாட்டு குழு விளையாட்டாகத் திகழும்.

---

33 இரா.பாலசுப்பிரமணியம், தமிழர்நாட்டு விளையாட்டுக்கள், ப.165.

34 அ.பிச்சை, ஆடுபுலி ஆட்டத்தின் வாழ்வும் வரலாறும், நாட்டுப்புறவியல், தொகுதி 2, 1984, ப.33.

**பாடல் அடிப்படையில் நாட்டுப்புற விளையாட்டுக்கள்**




**எண்ணிக்கையைக் குறிக்கும் பாடல்**

ஒருகுடம் தண்ணி ஊத்தி
ஒருபூப் பூத்ததாம்
இரண்டு குடம் தண்ணி ஊத்தி
ரெண்டு பூப் பூத்ததாம்
மூனுகுடம் தண்ணி ஊத்தி
..................
.................
பத்துகுடம் தண்ணி ஊத்தி
பத்துப் பூப் பூத்ததாம்.

**மற்றைய பாடல்கள்**

**கபடி விளையாட்டு**

*கீத்து கீத்தடா*
*கீரைத் தண்டடா*
*நட்டுவச் சேண்டா*
*பட்டுப் போச்சடா*
*பட்டுப் போச்சடா*

*குலைக்குலைக் காய் முந்திரிக்காய்*
*குலைக்குலைக்காய் முந்திரிக்காய்*
*நரியே நரியே சுத்திவா*
*ஓட்டுமேல ஏறுவேன்*
*ஈட்டியால குத்துவேன்*
*கொள்ளையடிச்சவன்*
*எங்கிருக்கான்*
*கூட்டத்திலிருப்பான் கண்டுபிடி.*

**பாடல் இல்லாத விளையாட்டுக்கள்**

1. பல்லாங்குழி
2. தாயம்
3. ஏறுதழுவல்
4. நொண்டி
5. கல்லா ? மண்ணா ?

**தன்மை அடிப்படையில் நாட்டுப்புற விளையாட்டுக்கள்**




இவ்விளையாட்டுக்கள் இவ்வியலில் முன்னர் விளக்கப்பட்டுள்ளதால் இங்கு விளக்கப்படவில்லை. (வீரவிளையாட்டு ஏறுதழுவல் - வீரத்தின் விளைநிலமாய் விளங்கும் நாட்டுப்புற மக்களின் விளையாட்டுக்களுள் இது சிறந்தது.)

**போட்டி அடிப்படையில் நாட்டுப்புற விளையாட்டுக்கள்**



எ.கா. பளிங்கு, கபடி, வண்டிப்பந்தயம், ஏறுதழுவல், மற்போர்.

எ.கா. நொண்டியடித்துக் கொண்டே ஓடிப்பிடித்து விளையாடுதல்.

### மாட்டு வண்டிப் பந்தயம்

பல இடங்களில் வண்டிப் பந்தயம் நடக்கின்றது. கிராமத்தில் 'ரேக்கலா வண்டி' என்று கூறுவர். வண்டி, ஒருவர் அல்லது இருவர் அமரும்படி அமைந்திருக்கும். இரண்டு காளைகளைப் பூட்டி நாள்தோறும் விரைந்து செல்லப் பயிற்சி எடுப்பர். விரைந்து செல்லும் காளைகளை வண்டியில் பூட்டிப் பந்தயம் கட்டி போட்டி அடிப்படையில் நடக்கும். குறிப்பிட்ட தூரத்தைக் குறிப்பிட்ட நேரத்தில் அடைவதற்கான விதிமுறைகள் உண்டு. இதற்கு அரசிடம் அனுமதி பெற வேண்டும். வெற்றி பெற்றவருக்குப் பாராட்டு, சிறப்பு உண்டு. இன்றும் கிராமங்களில் பாரம்பரியமாக நடைபெற்று வருகிறது.

### நொண்டி

இவ்விளையாட்டில் வெற்றி, தோல்வி நிர்ணயிப்பதில்லை. ஒருவர் நொண்டியடித்துப் பலரைப் பிடிக்கலாம். இரு அணியினராகப் பிரிந்தும் விளையாடலாம். ஒருவர் நொண்டியடித்துக் கொண்டே ஓடுபவரைத் தொடுவர். ஒரே நேரத்தில் ஒருவர் அல்லது பலரையோ தொடலாம். தொடப்பட்டவர் நொண்டி அடித்து மற்றவர்களை ஓடிப்பிடித்து விளையாடலாம். களைப்பாய் இருந்தால் ஆட்டத்தை முடித்துக்கொண்டு பிறகு ஆடலாம்.

### செயல்கள் அடிப்படையில் நாட்டுப்புற விளையாட்டுக்கள்

ஓடுதல், பிடித்தல், தொடுதல், கண்டுபிடித்தல், தேடுதல் என்ற செயல்கள் பெரும்பான்மையும் சிறுவர், சிறுமியர் விளையாட்டில் இடம் பெறும்.

### எடுத்துக்காட்டுக்கள்

ஓடுதல் விளையாட்டு - கல்லா? மண்ணா? விளக்கப்பட்டுள்ளது. இவ்விளையாட்டில் ஓடுதல், தொடுதல் - இரு நிகழ்வுகளும் உண்டு.

**கபடி**

இந்த விளையாட்டில் ஒரு அணியில் இருப்பவர் அடுத்த அணியினர் இடத்திற்குச் செல்லும்போது அவர்கள் பிடித்து விடுவதும் உண்டு. சென்றவர் அவர்களைத் தொட்டு விடுவதும் உண்டு. இதில் பிடித்தல், தொடுதல் இரு செயல்களும் உள்ளன.

**கண் பொத்தி விளையாட்டு**

இது ஒளிந்து விளையாடும் விளையாட்டு - கண்டுபிடித்தல் செயல், திருடன் போலீஸ் விளையாட்டில் உண்டு. எங்கே ஒளிந்துள்ளார் எனத் தேடுதல் செயலும் உண்டு. கிச்சு கிச்சுத் தாம்பூலம் - இவ்விளையாட்டு 'கண்டுபிடித்தல்' செயல் விளையாட்டிற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

**நொண்டி**

இவ்விளையாட்டில் பலர் ஓடுவர். ஒருவர் மற்றவர்களைப் பிடித்தல், தொடுதல் உண்டு.

மேலும் செயல் அடிப்படை விளையாட்டை இருபெரும் பிரிவாகப் பிரிக்கலாம்.

1. உடல் உறுப்புத் தொடர்பானவை
2. உடல் செயல் தொடர்பானவை

உடல் உறுப்புத் தொடர்பானவை எடுத்துக்காட்டுக்களாக,

1. கண் பொத்துதல் (உடல் உறுப்பு - கண்)
2. கைவீசம்மா கைவீசு (உடல் உறுப்பு - கை)
3. நொண்டி (உடல் உறுப்பு - கால்)
4. சாய்ந்தாடம்மா, சாய்ந்தாடு (உடல் உறுப்பு முழுவதும் இயங்கும்)

போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

**2. உடல் செயல் தொடர்பானவை**

எடுத்துக்காட்டாகப் பின்வரும் செயல்களைக் கூறலாம். 1. ஓடுதல், 2. தேடுதல், 3. கண்டுபிடித்தல், 4. தொடுதல், 5. பிடித்தல் போன்றவை.

**வரைபடம் அடிப்படையில் நாட்டுப்புற விளையாட்டுக்கள்**

1. வரைபடம் உள்ள விளையாட்டு எ.கா. தாயம்
2. வரைபடம் இல்லா விளையாட்டு எ.கா. பூசணிக்காய் விளையாட்டு.

**தாயம்**

இது கட்ட விளையாட்டாகும். இதில் பல வகை உண்டு. எட்டுக் கட்டத் தாயக்கோடு - படத்தில் காட்டப்பட்டுள்ளது. வெளிப்புறம் நான்கு மலைக் கட்டங்கள், உள்புறம், நான்கு மலைக்கட்டங்கள் காய்களை இறுதியில் பழம் கட்டத்தில் வைக்க மையக்கட்டம் அமைத்துக் கொண்டு ஆடுவர். மரத்தால் தாயக் கட்டை (அ) பித்தளை (அ) சோளி கொண்டு ஆடுவர். வெளிப்புறம் ஆறு கட்டத்திற்கு ஒரு மலை. உள் கட்டத்திற்கு 4 கட்டத்திற்கு ஒருமலை - மலையில் இருக்கும் காயை வெட்ட முடியாது. மகளிர் ஓய்வு நேரங்களில் வீண் பேச்சிற்கு இடமின்றி அறிவுத் திறன் விளையாட்டாக மேற்கொள்வர்.



**பூசணிக்காய் விளையாட்டு**

இது சிறுமியர் விளையாட்டு, இதற்கு எண்ணிக்கை இல்லை. எத்தனை பேர் வேண்டுமானாலும் கலந்து கொள்ளலாம். வெற்றி, தோல்வி இல்லை. மனமகிழ்ச்சி விளையாட்டு குழு விளையாட்டு. தரையில் அமர்ந்து ஒருவர் இடுப்பை மற்றவர் பிடித்துக் கொண்டு இருப்பர். முதலில் இருக்கும் சிறுமி தோட்டக்காரர். கடைசியில் இருக்கும் சிறுமி பூசணிக்காய் ஒருவர் இராஜா, மற்றொருவர் சேவகன். இராஜா சேவகனிடம் கூறித் தோட்டக்காரரிடம் 'பூசணிக்காய்' வாங்கி வா என்பார். தோட்டக்காரர் பூசணிக்காய் வளர்ச்சி நிலையைக் கூறிக் கொடுக்க மறுப்பார். பின்னர்ப் பூசணிக்காயைப் பிடுங்கிச் செல்வாள். இவ்விளையாட்டிற்கு வரைபடம் இல்லை.

### 1.4. சங்க இலக்கிய - நாட்டுப்புற விளையாட்டுக்கள் ஒப்பீடு

#### 1.4.1. அறிஞர் கருத்துக்களில் ஒப்பீடு

வாழ்க்கை வழங்கும் சிறப்புகள் அனைத்திலும் திளைத்து இயற்கையான வாழ்வினில் சிறந்து விளங்க சங்ககால மக்கள் விரும்பிய காரணத்தினால், விளையாட்டு அவர்களுக்குத் தேவைப்பட்டது அவ்விளையாட்டுக் குறித்து சங்க இலக்கியங்கள் விரிவாக எடுத்துரைக்கின்றன.

விளையாட்டு குறித்து அறிஞர்கள் கூறுவதில் பொதுவாக அது ஒரு செயல், விரும்புகின்ற ஆட்டம், இன்பம் விளைவிக்கும் ஆட்டம், விதிகளை விளைவித்துக் கொண்டு ஆடும் ஆட்டம், நிலைக்களன், வாழ்க்கைத் தொழில், போர், அருஞ்செயல், சிறப்பு நிகழ்ச்சி முதலாகப் பல வகைப்படும்.

சங்க இலக்கியங்களிலும் நாட்டுப்புற விளையாட்டிலும் அகவிளையாட்டு - புறவிளையாட்டு உண்டு. ஆடும் முறைகள் - காலம் - வகை ஆகியவற்றில் வேறுபாடு உண்டு.

காதல் - வீரம் - இரண்டின் அடிப்படை என சங்க இலக்கியங்கள் கூற - நாட்டுப்புற விளையாட்டுக் குறித்து பாட்ரிக் (Patrich) விளையாட்டுக்கள் அசதியினின்றும் விடுதலை பெறத் தேவைப்படுகின்றன என்று கூறுகிறார். ஆப்பிள்டன் லேடி (Appleton Lady) நாட்டுப்புற விளையாட்டுக்கள் மூளையைப் பாதிக்காமல் ஒருவருடைய உள்ள உணர்ச்சிகளை, வெளிக்கொணர நல்லவழி என்று கூறுகிறார்.

வெற்றி, தோல்வி - தோற்றானைக் கேலி செய்தல் தோற்றவர்க்குத் தண்டனை, தோற்றவர் தன் ஆடு கருவியை இழத்தல் - நாட்டுப்புற விளையாட்டின் பொதுக்கூறுகளில் சங்க இலக்கிய விளையாட்டுக்கள் மாறுபட்டுள்ளன. பொதுவாக மனமகிழ்ச்சி - பொழுதுபோக்காகவே விளையாட்டுக்கள் உள்ளன என்பது வெளிப்படை.

### 1.4.2. வரையறைகளில் ஒப்பீடு

விளையாட்டு என்பதற்குத் தமிழ்ப் பேரகராதி (Taml Lexicon) குறிக்கும் ஐந்து பொருள்களின் அடிப்படையிலேயே அமைந்துள்ளன.

'விளையாட்டு வாழ்க்கைக்குப் பயிற்சி அளிக்கும் களம்' என்று நாட்டுப்புற விளையாட்டுக் குறித்து அறிஞர் கூறும் கருத்து சங்க இலக்கிய விளையாட்டு குறித்து அறிஞர்கூறும் கருத்தோடு ஒத்துள்ளன.

திட்டமிட்டும், திட்டமிடாமலும் விளையாட்டின் தன்மைக்கேற்ப, சூழலுக்கு ஏற்ப விளையாட்டுக்கள் விளையாடப்பட்டன.

கட்சிபிரித்தல், அடையாளம் கொண்டு வருதல். சாட்பூட்திரி, காயா? பழமா? இடையில் நிறுத்துதல் பாட்டம், உப்புவைத்தல் போன்ற நாட்டுப்புற விளையாட்டின் வரையறைகள் - சங்க இலக்கிய விளையாட்டில் இல்லை.

### 1.4.3. வகைப்பாடுகளில் ஒப்பீடு

சங்க இலக்கிய விளையாட்டுக்கள் உடல் உறுப்பு இயக்க விளையாட்டுக்கள், பொறிபுலன் இயக்க விளையாட்டுக்கள், அறிவு இயக்க விளையாட்டுக்கள், உடல் உறுப்பு, பொறிபுலன், அறிவு மூன்றும் சார்ந்த விளையாட்டுக்கள் என்று 4 வகையாகப் பிரிக்கப்படுகின்றன.

நாட்டுப்புற விளையாட்டுக்கள் தரவுகளின் அடிப்படையில் காலம், கருவி, வயது, ஆடுகளம், பங்கு பெறுவோர், பால், பாடல், தன்மை, போட்டி, செயல், வரைபடம் அடிப்படை என 11 வகையாகப் பிரிக்கப்பட்டு விளக்கப்படுகின்றன.

இதில் ஒருசில வகையில் வேறுபட்டுள்ளது. சங்க இலக்கிய விளையாடல்களில் சில வீட்டிற்குள் - வீட்டிற்கு வெளியே, வீட்டிற்குள்ளும் வெளியிலும் எனப் பிரித்தும் கூறப்பட்டுள்ளன.

வெயிற்காலம் - மழைக்காலம் என்று பகுத்துப் பார்க்கவில்லை. சங்க விளையாட்டுக்களில், செயல்கள் அடிப்படையில் ஓடுதல், பிடித்தல், தொடுதல், ஒளிதல், கண்டுபிடித்தல், தேடுதல் போன்றவற்றில் ஒன்றியும் மாறுபட்டும் உள்ளன.

உடல் உறுப்பு தொடர்பான விளையாட்டு - தனித்தனியாக கண், கை, கால், உடல் முழுவதும் என நாட்டுப்புற விளையாட்டைப் பகுத்துப் பார்ப்பது. சங்க இலக்கியத்தில் ஒன்றியும் மாறுபட்டும் உள்ளன.

## 1.5. தொகுப்புரை

சங்க இலக்கியங்களில் விளையாட்டுக்கள் பற்றிய செய்திகள் நிறையவுள்ளன. முப்பத்தேழு விளையாட்டுக்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. இவற்றில் ஆண்பாலார் விளையாட்டுக்கள் பத்து; பெண்பாலார் விளையாட்டுக்கள் பதினைந்து; இருபாலார் விளையாட்டுக்கள் பன்னிரண்டு.

சங்க விளையாட்டுக்களில், இயக்க அடிப்படையில் உடல்உறுப்பு இயக்க வகை விளையாட்டுக்களும், ஆர்வ அடிப்படையில், புதிய அனுபவம் காணும் ஆர்வ வகை விளையாட்டுக்களும், வடிவ அடிப்படையில் போட்டியில்லாத வடிவ வகை விளையாட்டுக்களும், வீட்டிலும் வெளியிலும் விளையாடும் விளையாட்டுக்களும் இடம்பெற்றுள்ளன.

விளையாட்டுக்கள் மக்கள் அனைவர்க்கும் பொதுவாக இருந்துள்ளன; இருபாலாரும், பலநிலையினரும், பல பிரிவு மக்களும், அனைத்து வயதினரும் விளையாடியுள்ளனர்.

விளையாடுவதற்குக் கருவிகள் இருந்துள்ளன. நல்ல சூழ்நிலைகளில் விளையாடியுள்ளனர். உலாவுவதற்கு மண்டபம் இருந்துள்ளது. விழாக்களைப் பலநாள் கொண்டாடியுள்ளனர். பகலிலும் ஆடியுள்ளனர்; இரவிலும் ஆடியுள்ளனர். உடல் ஓய்வு பெற உறக்கம் தேவை என்பதை உணர்ந்திருந்தனர்.

விளையாடுவதற்கு நெறிமுறைகள் இருந்துள்ளன. துன்பம் தீரவும், இன்பம் பெறவும் விளையாடியுள்ளனர். குறும்பு விளையாட்டுக்கள் ஆண்பாலருக்கு மட்டும் உரியனவாய் வந்துள்ளன. பெரும்பாலும் ஆண்பாலார் விளையாட்டுக்கள் கடின முயற்சியினவாயும், பெண்பாலார் விளையாட்டுக்கள் எளிய முயற்சியினவாயும் உள்ளன.

விளையாட்டுக்கள் அறிவுத்திறனையும் உடல்நலத்தையும் பேணுபவை. பல்வேறு அறிஞர்கள் கூறும் விளையாட்டுக்கள் பற்றிய கருத்துக்கள் யாவும் விளையாட்டுக்களைப் பல்வேறு கோணங்களில் எடுத்தியம்புகின்றன.

போட்டி விளையாட்டுக்களில் எதிர்த்து விளையாடுபவர்களை ஏளனம் செய்துள்ளனர். பாவைகளிடையே திருமணம் செய்து வைத்துப் பெண்கள் விளையாடியுள்ளனர். இது திருமணம் தொடர்பான வினைகள் புரிவது. சமுதாயத்தில் பெண்களுக்குரிய கடமையாய் இருந்ததைப் புலப்படுத்துகிறது.

வீட்டு வாழ்க்கையுடன் தொடர்புடைய சிறுசோறு ஆக்கல், சிற்றில் செய்தல் என்பவை பெண்களுக்கு மட்டும் உரிய விளையாட்டுக்களாகச் சங்க இலக்கியத்தில் வந்துள்ளன. 'இன்பம் பெறுவதற்காக விளையாட்டு' என்பதை சங்க விளையாட்டுக்களும் நாட்டுப்புற விளையாட்டுக்களும் விளக்கியுள்ளன.

இவ்வியல் பொதுவாக சங்க இலக்கிய, நாட்டுப்புற விளையாட்டுக்கள் குறித்து விளக்கங்கள், அறிஞர் கருத்துக்கள் பற்றியும் விளக்குகின்றன. பொதுவாக எல்லா மக்களாலும் விளையாட்டு விளையாடப்படுகிறது.

சங்க இலக்கிய, நாட்டுப்புற விளையாட்டுக்கள் பற்றிய வரையறைகள், வகைப்பாடுகள் குறித்து எடுத்துக்காட்டுக்களுடன் விளக்கப்பட்டுள்ளன.

விளையாட்டுக்களை எவ்வகையில் வகைப்படுத்தினாலும் அதன் தன்மை மாறாது. முக்கியக் கூறான உடற்பயிற்சியும், அறிவுத்திறனும் என்றும் சங்க மற்றும் நாட்டுப்புற விளையாட்டுக்களில் நிலைத்திருப்பதைக் காணலாம்.

# இயல் 2

# சிறுவர், சிறுமியர் விளையாட்டுக்கள்

*2.0.* *முன்னுரை*

*2.1.* *சிறுவர், சிறுமியர் சங்க இலக்கிய விளையாட்டுக்கள்*

*2.2.* *சிறுவர், சிறுமியர் நாட்டுப்புற விளையாட்டுக்கள்*

*2.3.* *சிறுவர், சிறுமியர் சங்க இலக்கியம் -*
*நாட்டுப்புற விளையாட்டுக்கள் - ஒப்பீடு*

*2.4.* தொகுப்புரை

# இயல் 2

# சிறுவர் – சிறுமியர் விளையாட்டுக்கள்

## 2.0. முன்னுரை

*சிறுவர் சிறுமியர் விளையாட்டுக்கள், விளையாட்டின் சில பொதுக் கூறுகள், விளையாட்டு வகைகள், சிறுமியர் விளையாட்டு, சிறுவர் விளையாட்டுப் போன்றவை இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளன. மேலும், சங்க இலக்கியம்-நாட்டுப்புற விளையாட்டுக்கள் விளக்கப்பட்டு ஒற்றுமை-வேற்றுமைகள் ஆராயப்பட்டுள்ளன. விளையாட்டில் அறியப்படும் கருத்துக்கள் போன்றவையும் விளக்கப்பட்டுள்ளன.*

*சிறுவர் விளையாட்டுக்கள் மூலம் ஓடுதல், தேடுதல், மறைந்திருக்கும் பொருளினைக் கண்டுபிடித்தல், குறிபார்த்து வீழ்த்துதல் உயரத்தாவுதல் போன்றவற்றிற்கான பயிற்சி கிடைக்கிறது. சிறுவர்தம் தொழிற்கல்விக்கான பயிற்சியினை விளையாட்டுக்கள் தருகின்றன. சிறுமியரின் வாழ்க்கைத் தொடர்பான போலச் செய்யும் விளையாட்டுக்கள் வாழ்க்கைக்குப் பயிற்சி தருவனவாக உள்ளன.*

*“விளையாட்டை இருவகையாகப் பகுத்துக் கொள்ளலாம். அவை ‘சொல்விளையாட்டு’ எனவும் ‘மெய் விளையாட்டு’ எனவும் பெயர் பெறும். சொல் விளையாட்டில் பால் வேறுபாடில்லாமல் இருபால் சிறுவர்களும் கலந்து கொள்ள இயலும். மெய் விளையாட்டைப் பெண்பாலார் விளையாட்டெனவும் ஆண்பாலார் விளையாட்டெனவும் இருவகையாகப் பிரிக்கலாம்” என்பார் மா.கோதண்டராமன்.*[1]

*சிறுவர் சிறுமியர் விளையாட்டு*



*இருபாலர் விளையாட்டு* *சிறுமியர் விளையாட்டு* *சிறுவர் விளையாட்டு*

[1] *மா.கோதண்டராமன், விளையாட்டுக்களில் பாடல்கள், ப.60.*

சின்னஞ்சிறு குழந்தைகள் தங்கள் நினைவாற்றலை வெளிக்காட்டவும், எண்ணுப் பெயர்களைக் கற்றுக் கொள்ளவும் சில பாடல்களைக் காலங்காலமாய்ப்பாடி வருகின்றனர். குழந்தைப் பாடல்களைப்பற்றிக் குழந்தைக் கவிஞர் அழ வள்ளியப்பா கூறும் கருத்துக்களை இங்கே நினைவு கூரலாம்.

> ஆறு வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்கு எட்டுவரி, பத்து வரிகளுக்கு மேற்படாமல் இருக்க வேண்டும். கூடுமானவரை ஒவ்வொரு வரியோடு ஒரு வாக்கியம் முடிந்து விடவேண்டும். பாட்டு வேடிக்கையாய் இருந்தால் நன்கு சுவைத்துப் பாடுகிறார்கள். ஒரு பொருளைப்பற்றி எளிய சொல்லிலே இனிய சந்தத்தில் பாடினால் மனத்திலே எளிதில் பதித்துக் கொண்டு விடுகிறார்கள்.[2]

## 2.1. சிறுவர் விளையாட்டுக்கள் (சங்க இலக்கியம்)

1. குறும்பு விளையாட்டுக்கள்
2. சாம விளையாட்டு
3. சிறுதேர்
4. சிறுபறை
5. வட்டு.

### 2.1.1. குறும்பு விளையாட்டுக்கள்

சிறுவர் விளையாட்டுக்களில் சில நிகழ்ச்சிகள், பிற மாந்தர்க்கு அல்லது அஃறிணை உயிர்களுக்கு, ஏதேனும் ஒரு வகையில் தொல்லை தந்தவையாக உள்ளன. ஒரு பொருளைக் கவர்தல், அறுத்தல், சிதைத்தல், உடைத்தல், அழித்தல் என்றவாறு பல வகைகளில் அவை நிகழ்ந்துள்ளன. ஆனால் இச்செயல்கள் யாவும் விளையாட்டு நிகழ்ச்சிகளே, ஏனெனில் அவ்வாறு செய்தவர்கள் அவற்றால் மகிழ்ந்துள்ளனர். தம் மகிழ்ச்சிக்காகவே அவற்றை அவர்கள் மேற்கொண்டுள்ளனர்.

இத்தகைய நிகழ்ச்சிகளைக் 'குறும்புகள்' என்று குறிப்பிடலாம். செங்குளவிகளின் கூட்டைக் கலைத்த இளஞ்சிறார்களின் குறும்பு செயலைப் பதிற்றுப்பத்தும், மணல்

---

2 மா.கோதண்டராமன், வடார்க்காடு மாவட்ட நாட்டுப்புறப் பாடல்கள், ப.61.

கூடி வரு வழக்கின் ஆடியற் பெயரும்

என்ற தொல்காப்பிய நூற்பா பகுதி (சொல்.பெயரியல் 11) எண்ணத்தக்கது. இதற்குச் சான்றாகச் சேனாவரையர் 'பட்டிபுத்திரர், கங்கை மாத்திரர்' என்ற பெயர்களை எடுத்துக்காட்டி இவை ஆடல் குறித்து இளையார் கூறுபவை என்று குறிப்பிட்டுள்ளார்.

இவ்விளையாட்டுக் குறித்துப் பெயர் கூறி விளையாடும் நிகழ்ச்சியைப் பரிபாடல் பின்வருமாறு குறித்துள்ளது. "பெயர்கூற பைய விளையாடுவாரும்" (பரி 10:104).

கற்பனையாகப் பெயர் வைத்துக் கொண்டு ஆடும் விளையாட்டுக் குறித்து ஞானவரோதயர் உபதேச காண்டத்தில் வந்துள்ளன. அப்பகுதியினை,

குழமகனாங் கவுசிகற்குத் த்ரியம்பக னென்றேபெயருங்
கூறி மற்றோர்க்கு
அழகுறுவெவ் வேறுபெயர் அறைந்தனனோர் சாமவிளை
யாட்டின் அம்மா. (54:24:11)

சாம விளையாட்டு ஆடும் பொழுது, சிவனுடைய பெயர்களுள் ஒன்றாகிய 'த்ரியம்பகன்' என்பதை வைத்திருந்ததாலேயே, அவன் பொல்லாதவனாயிருந்தும், கயிலை அடையும் வாய்ப்பைப் பெற்றான் என்ற செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது.

சிலப்பதிகாரத்தில், ஆய்ச்சியர் குரவையில் "இடைமுதுமகளிவர்க்குப் படைத்துக்கோட் பெயரிடுவாள் (17:13:6-7) என்பது ஒரு பகுதி. 'படைத்துக் கோட் பெயரிடுதல்' என்பதற்கு "ஒரு பொருளுக்கு ஒரு பெயர் இருப்பவும் ஒரு காரணத்தால் வேறொரு பெயரை இட்டு வழங்குதல்" என்று விளக்கம் தரப்பட்டுள்ளதால் இதுவும் சாம விளையாட்டாக இருக்கக் கூடும்.

### 2.1.3. சிறுதேர்

தேரினை உருட்டியும், இழுத்தும் சிறுவர்கள் விளையாடியுள்ளனர். உருள், சகடம், தேர் எனப்பெயரிட்டு அழைத்தனர். தேரினை உருவாக்க நெடிய நேரம் செலவழித்துள்ளனர். ஒரு குறிப்பிட்ட தூரம் வரை இழுத்துச் சென்று ஓர் எல்லையில்

தேரினை நிலைப்படுத்தி மகிழ்ந்துள்ளனர். விளையாட்டுத் தேரினை இலக்கியங்கள் ‘பொற்சிறுதேர்’, ‘சிறுமணித்தேர்’, ‘தமனியச் சிறுதேர்’ எனக் குறிப்பிட்டுள்ளன.

புதல்வர்கள் குதிரையின்றி மூன்று கால்களை உடைய சிறிய தேரினைக் கைகளால் இழுத்து விளையாடிய செய்திகளை,

பொற்காற் புதல்வர் புரவியின் றுருட்டு
முக்காற் சிறுதேர் முன்வழி விலக்கும். (பட்டினப்பாலை 24-25)

பூரா நற்றே ருருட்டிப் புதல்வர் (பெரும் -249)
முற்றத்துக்
கால்வல் தேர்கையின் இயக்கி (கலித். 81:7-8)

ஊர்ந்து இன்புறா அர்ஆயினும் கையின்
ஈர்த்துஇன் புறூஉம் இளையோர் போல (குறுந். 61:2-3)

என்ற சங்கப்பாடல் வரிகள் தெரிவிக்கின்றன.

சகடத்தைச் செலுத்தி விளையாடியதைப் “பல்கதிர் முத்தார் சகடம்மும் செம்பொற்றேரும் வேழமுமூர்ந்து” என்று சீவக சிந்தாமணியும் (58:363).

பொன்னாலாகிய சக்கரத்தைக் கொண்டு விளையாடியதை “பொன்னுருள் வாங்கித் தளர்கின்றான்” என்று சூளாமணியும் குறிப்பிட்டுள்ளன. (69: 1743).

சிறுதேரில் பொன்னாலாகிய யானையைப் பூட்டுவதும் (58:89), மான் குட்டிகளைப் பூட்டுவதும் (மகேந்திர : நகர் :53) உண்டு. இவ்வாறு பூட்டித் தெருவில் ஈர்த்தும், உருட்டியும் விளையாடியதை “விளையாடு சிறுதேர் ஈர்த்து மெய்வருந்தி அமளித்துஞ்சும். ... குறுநடைப் புதல்வர்க்கு” (துயில்:54-59), “செல்வச் சிறார்கடேருருட்டுவார்கள்” (மதுரை:89) என்ற செய்திகளைப் பெருங்கதைப் பகுதிகள் தெரிவிக்கின்றன.

ஆறுகளில் தண்ணீர் வருங்காலங்களில், ஆற்றோரமாகத் தேருருட்டி விளையாடும் பழக்கம் இன்றும் கிராமப் புறங்களில் இருந்து வருகின்றன. இவ்விளையாட்டு உடல் வளர்ச்சி உறுதிக்குப் பயன்பட்டது. அழகுணர்ச்சிப் பெருகவும், தொழில் துறை அறிவும் ஆற்றலும் பெருகும் வகையில் தேர் செய்தல், இழுத்தல் முதலிய செயல்களுக்குப் பயனள்ளதாகவும் இருந்துள்ளன.

### 2.1.4. சிறுபறை

சிறுவர்களுடைய விளையாட்டுக் கருவிகளுள் ஒன்று பறை. பறையை ஒலிக்க வைத்துத் தாளத்திற்கேற்பச் சிறுவர்கள் விளையாடுவர். மான் தோலைக் கொண்டு கட்டிய சிறுபறையை முழக்கிய செய்திகளை "மான்றோற் சிறுபறை கறங்கக் கல்லென்" (மலைபடு :321), "தொண்டகச் சிறுபறைப்பாணி" (நற் 104:5), "இரவு அரிவாரின் தொண்டகச் சிறுபறை" (குறுந். 375:4) எனச் சங்கப்பாடல் வரிகள் குறிப்பிட்டுள்ளன.

இவ்விளையாட்டுச் சிறுவர்களின் கலை உணர்வை வளர்த்தோடு புதியது காணும் வேட்கையினையும் வளர்த்துள்ளது. ஆளுமைத் தன்மையை உயர்த்திக் கொள்ள வகை செய்து, கூடி விளையாடும் தன்மைக்கும் வகை செய்துள்ளன.

காப்பியங்களிலும், பிற்காலத்து இலக்கியங்களிலும் பறையை ஒலிக்க வைத்துச் சிறுவர்கள் விளையாடியதைத் "தூய மணிமறுகு சிறுபறை சிறார்கள் தொனி" (42:12), "வேட்டுவச் சிறுவர் தொண்டகச் சிறுபறையொலி" (பூருவ:சம்பு:73) என்ற பெரியபுராண வரிகள் பகுதிகளால் அறியலாம்.

### 2.1.5. வட்டு

உருண்டு செல்லுவதற்கு வசதியாக வட்ட வடிவமாக அமைக்கப்பட்ட வட்டுக்களை - அதாவது காய்களை உருட்டி விளையாடுவது. இஃது ஒருவகை சிறுவர் விளையாட்டு. ஆடுவதற்கு வசதியாகச் சிறுவர்கள் தரையில் கோடு கிழித்துக் கொண்டு ஆடுவர் - பொறிபுலன், அறிவு இயக்கம் சார்ந்த விளையாட்டு. இலக்கை வகுத்துக்கொண்டு வெற்றிபெறுவதற்கு உதவும் விளையாட்டு.

இவ்விளையாட்டுக் குறித்த செய்திகளை "வண்ணநீர் கரந்த வட்டு விட்டு எறிவோரும்"(பரிபாடல் 11-55), "பூ எழில் வண்ணநீர் பூரித்த வட்டு எறிய" (மேற்படி 12:68), "வட்டு உருட்டு வல்லயாய்" (மேற்படி 18-42), "கையாடு வட்டின் தோன்றும்" (அகநா. 108:17), "கல்லாச் சிறாஅர் நெல்லி வட்டு ஆடும்" (நற் 3:4) என்ற சங்க இலக்கியப் பாடல் வரிகள் மூலம் அறியலாம்.

காப்பியங்கள், பிற்கால இலக்கியங்களில் இவ்விளையாட்டுப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. இதனைப் "பயங்கெழுகுமரர் வட்டுஆட்டு ஆடு இடம் பலவுங் கண்டார்" என்ற பகுதியும் (பால: மிதிலை:19), "குமார காலத்து. . . . . . . . . . . உருட்டி வட்டாட" என்ற பகுதியும் (69:303) தெரிவிக்கின்றன. இக்காலத்தில் ஆண் குழந்தைகள் விளையாடும் விளையாட்டுக்களில் ஒன்றாக வளர்ந்துள்ளது.

### 2.1.2. சிறுமியர் விளையாட்டுக்கள்

1. கண்புதைத்து ஒளிந்தாடல்
2. சிறுசோறு ஆக்கல்
3. சிற்றில் செய்தல்
4. பாவை விளையாட்டு
5. மணற்குவியலில் மறைத்தாடல்

#### 2.1.2.1. கண்புதைத்து ஒளிந்தாடல்

ஒருத்தியின் கண்களை மற்றொருத்தித் தன் கைகளால் மறைத்து நிற்க. அந்த நேரத்தில் பிற மகளிரெல்லாம் மறைவான இடங்களுக்குச் சென்று ஒளிந்து கொள்வார்கள். பின்னர், ஒளிந்தவர்களைக் கண்டு வருமாறு கண் பொத்தப்பட்டு நின்ற பெண் செலுத்தப்படுவாள். திட்டமிட்ட விளையாட்டு; பரபரப்பும், எதிர்பார்ப்பும் உடையது. கண்ணைப்பொத்துகின்றவள் விளையாட்டுத் தொடர்பாகச் சில பாடல்வரிகளைச் சொல்லி விளையாட்டை ஊக்குவிப்பாள். பலரும் சேர்ந்து விளையாடுவது சோலைகளிலும், ஒளிந்து கொள்ள வசதியான இடங்கள் உள்ள பகுதிகளிலுமாக விளையாடுவது. இவ்விளையாட்டைச் சங்கப் பாடல்வரிகள் சித்தரித்துள்ளன. அப்பகுதிகள்,

பேர்எழில்மலர் உண்கண்மூடி ஆடுங்கால் (கலித் 58:2)

நலம்பெறு கைஇன் என்கண் புதைத் தோய் (ஐங்குறு 293:2)

வழும்பு கண்புதைத்த நுண்நீர் பாசி. (மலைபடு 221)

*இவ்விளையாட்டு, தேடிக் கண்டுபிடித்து வெற்றிபெற வேண்டுமென்ற உறுதியையும், இயற்கைச் சூழலில் தயக்கமின்றி சுதந்திரமாக விளையாடும் உணர்வினையும், மறைவாக இருக்கும் பொருளை விழிப்புடன் தேடுவதற்காக பயிற்சியினையும் அளிக்கிறது.*

*இவ்விளையாட்டைக் கம்பராமாயணம் பின்வருமாறு சித்தரித்துள்ளது. அச்செய்யுள்*

பொன்னே தேனே பூமக ளேகாண் எனைஎன்னா
தன்நேர் இல்லாள் அங்குஒரு கொய்யல் தழைமூழ்கி
இன்னே என்னைக் காணுதி நீஎன்று இகலித்தன்
நல்நீலக்கண் கையில் மறைத்து நகுவாரும். (பால:பூக்கொய்:31)

*கண்டுபிடிக்க வருபவளுக்குக் கேட்கும்படி 'காண்எனை', 'இன்னே என்னைக் காணுதி' என்று பெண்கள் குரல் கொடுத்ததையும், இவ்வாறு குரல் தந்தும் ஒளிந்துள்ள இடத்தைக் காண இயலாமல் பிற பெண்கள் மறைந்து கொண்ட திறத்தையும் இச்செய்யுள் புலப்படுத்தியுள்ளது.*

*சூளாமணியும் இவ்விளையாட்டுக் குறித்து,*

கண்டுநீர் கொண்மி னென்றான், கயிலுடைப்பகழி வாட்கண்
அங்கையின் மறைத்து நிற்பார் (64:1642)

*என்கிறது.*

*தணிகைப்புராணத்தில் "ஒளித்தார் தமை நேடியு முப்புறனில் விளித்தார் தமை நேடியும்" என்ற பகுதியில் இவ்விளையாட்டு குறிப்பிடப்பட்டுள்ளது (களவு:51).*

### 2.1.2.2. சிறுசோறு ஆக்கல்

*பலவகைக் கற்பனைகளோடு பெண்கள் சோறு சமைத்து விளையாடுவது. சிற்றில் அமைத்து அதில் சிறுசோறு ஆக்கிட தானும் உண்டு மற்றவர்களுக்கும் பரிமாறி உண்ணச் செய்துள்ளனர். மரகதம், வைரம், வெள்ளி, அகில், பனிநீர், முத்து, செம்மணி, பொன் ஆகியவற்றால் முறையே அம்மி, உலக்கையும் உரலும், அடுப்பு, விறகு, உலைநீர், அரிசி, நெருப்பு, கலன்கள் என்பனவற்றை அமைத்துக் கொண்டு விளையாடியுள்ளனர்.*

*சிறுசோறு ஆக்கல் குறித்த செய்தியை "சிறுசோற்றானும் நனிபல" எனக் (புறம்:235-4) குறிக்கிறது. சிற்றில் செய்து அதில் சிறுசோறாக்கி ஆடுவதும் உண்டு. இதனைச் "சிற்றல் புனைந்து சிறுசோறட்டாடினளே" என்ற காப்பியப் பகுதி புலப்படுத்துகிறது. (தக்ஷ:வள்ளி:46)*

*இவ்விளையாட்டின் மூலம் பொருள் சேகரிப்பு, சேர்ந்துழைக்கும் பண்பு, சுவையான உணவு சமைக்கும் கலை ஆகிய பெண்களுக்குள்ள திறமைகளை அறிய முடிகிறது.*

### 2.1.2.3. சிற்றில் செய்தல்

*சிறுமியர் விளையாட்டுக்களில் இதுவும் ஒன்று. மணலில் சிறிய, சிறிய வீடுகளைக் கட்டி தங்கள் கற்பனைத் திறத்திற்கேற்ப விளையாடியுள்ளனர். வீட்டின் பின்புறத்தில் இயற்கைச் சூழலில் இவ்விளையாட்டு நிகழ்ந்துள்ளது. பெண்கள் தங்கள் அழகுணர்ச்சி, ஆக்குந்திறன் வெளிப்படுத்த வாய்ப்புப் பெற்றனர். இவ்விளையாட்டுக் குறித்த செய்திகளை "வரிபுனை சிற்றில் பரிசிறந்து ஓடி தெருவில் நாம் ஆடும்" (நற்.123:8), "மணற்சிற்றில் காலின் சிதையா" (கலித் 51:1-2), "புதுக்கலத் தன்ன செவ்வாய்ச் சிற்றில்" (அகம் 394:9), "சிற்றினற்றூண் பற்றி நின்மகன்" (புறம் 86:1) என்ற சங்கப்பாடல் வரிகள் குறிப்பிட்டுள்ளன.*

*இவ்விளையாட்டு பிற்காலத்தில் காப்பியங்கள், சிற்றிலக்கியங்களில் இடம் பெற்றுள்ளன. சிற்றில் இழைத்தல், சிற்றில் கோலுதல், சிற்றில் புனைதல் எனச் சூளாமணி*

குறிப்பிடுகின்றது. (69:1652) சிந்துரப் பிறைநன் னுதலியர் திளைத்த சிற்றிலும்" எனச் சீறாப்புராணம் (23:விலாதத்:கதீஜா:18) குறிப்பிடுகின்றது.

### 2.1.2.4. பாவை விளையாட்டு

'பாவை' என்றால் 'உருவம்' என்பது பொருள். பாவை புனைந்து பாவையர் விளையாடியுள்ளனர். பாவை என்ற சொல் ஆண் - பெண் என்ற இருபால் உருவங்களையும் குறிக்கும். இயற்கையில் கிடைத்த குரவமலர் கொண்டு பாவை செய்து விளையாடியதைக் 'குரவம் பாவை' என்ற தொடர் தெரிவித்துள்ளது. மணல், மலர், பவழம், முத்து, சிப்பி, பொன் முதலியன பாவை செய்வதற்குப் பயன்பட்டுள்ளன. ஆண், பெண் இருவகை உருவங்களும் செய்து சிற்றில் அமைத்து அதனுள் உருவங்களாக வைத்து மகிழ்ந்துள்ளனர். பாவையைக் குழந்தையாகக் கற்பித்துக் கொண்டுத் தாலாட்டி, கதைகள் கூறியுள்ளனர். நாள் முழுவதும் நேரம் போவது தெரியாமல் மிக மகிழ்ச்சியாகச் சிறுமியர் விளையாடியுள்ளனர். மனித உருவங்கள், பறவைகள், விலங்குகள் போல உருவங்கள் அமைத்து மகிழுதல் அறிவு வயப்பட்ட விளையாட்டாகும்.

பாவையைச் செய்வதும் விளையாட்டு நிகழ்ச்சியே. இதனைப் பொன்னால் செய்த பாவை, யவனர் இயற்றிய பாவை, தாதுக்களால் செய்த பாவை, ஓவியத்தால் எழுதியது போன்ற நல்ல மனையின் கண்ணே இருந்த சொல்லிப்பாவை போன்ற பெண் என்ற செய்திகளை "செந்நீர்ப் பசும்பொன் புனைந்த பாவை" (மதுரை-410), வல்லோன்றைகிய வரிப்புனை பாவை, (மேற்படி-723), "யவன ரியற்றிய வினை மாண்பாவை" (நெடுநல் வாடை-101), "தாதின் செய்த தண்பணிப்பாவை" (குறுந்.48:1), "பாவை அன்ன வினை புனை நல்லில் பாவை அன்ன நல்லோள் கணவன்" (பதிற்று 61:3-4) எனச் சங்கப்பாடல் வரிகள் தெரிவிக்கின்றன.

காப்பியங்களிலும், பிற்கால இலக்கியங்களிலும் இவ்விளையாட்டுக் குறித்த செய்திகள் இடம் பெற்றுள்ளன. "மணற்பாவை நின்கணவ னாமென்று" (21:மதுரை:வஞ்சின:7) என்பது சிலப்பதிகாரம் பிரச்சோதனன் என்ற மன்னன் தனது பகைவனாகிய யவன அரசன் செலுத்திய திறையை ஏற்றுக்கொள்ளாமல் அவனது மகளின்

*விளையாட்டுப் பாவையைக் கவர்ந்து தன் மகளுக்கு விளையாட வழங்கியதாகப் பெருங்கதை குறிப்பிட்டுள்ளது. அப்பகுதி:*

அடுதிரை முந்நீர் யவனத் தரசன்
........ ...... .......
......... ........ ......
கோடி வயிரமுங் கொடுப்பக் கொள்ளான்
சேடிள வனமுலைத் தன்மக ளாடும்
பாவை யணிதிறை தருகெனக் கொண்டு.

(39: வத்தவ: பிரச்: 59:94)

### 2.1.2.5. மணற்குவியலில் மறைத்தாடல்

*மணற்குவியலில் ஒரு பொருளை மறைத்து வைப்பதும், அதனைக் கண்டெடுக்குமாறு தன்னுடன் விளையாடுபவளைக் கேட்பதும் மிகப் பழைய விளையாட்டு நிகழ்ச்சிகளாகும். புன்னை விதையை மணலில் மறைத்து வைத்து விளையாடிய நிகழ்ச்சி சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளது. "விளையாடு ஆயமொடு வெண்மணல் அழுத்தி" (நற்றிணை 172:1)*

*வசு சரித்திரம் என்ற காப்பியத்தில், மணலில் மணியை மறைத்து விளையாடிய நிகழ்ச்சி வந்துள்ளது. அப்பகுதி:*

மணல்கு வித்தொரு மணியினை மங்கையர் மறைப்ப
இணையி லம்மணி யிலாவிடத் தினுமணி யெடுத்தாள்.

(67: கிரிகை: 12)

### 2.1.3. சிறுவர், சிறுமியர் விளையாட்டுக்கள்

1. *அம்புலி காட்டல்*
2. *எண்ணி விளையாடல்*
3. *பறவை விலங்குகளுடன் விளையாடல்.*

### 2.1.3.1. அம்புலி காட்டல்

*ஆண், பெண் என்ற இருபால் குழந்தைகளிடமும் பெரியவர்கள் அம்புலி காட்டி விளையாடச் செய்வர். வானத்திலுள்ள நிலவைச் சுட்டிக்காட்டி அதன் அழகைக் கூறுவர். குழந்தையோடு ஒப்பிட்டுப் பேசி, நிலவைப் பூமிக்கு இறங்கி வந்து குழந்தையுடன் விளையாட வேண்டுவர். இவ்விளையாட்டுக் குறித்த நிகழ்ச்சி சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளது. அப்பகுதி:*

ஐய! திங்கட்குழவி, வருக! என யான் நின்னை அம்புலி
காட்டல் இனிது. (கலித் 80:18-19)

*உயர்வுள்ளல் பற்றிய சிந்தனையைக் குழந்தை மனத்தில் வித்திட்டு, ஒப்பிட்டுப் பார்ப்பது, மகிழ்ச்சி கொள்வது, திருத்திக் கொள்வது போன்ற ஆளுமைப் பண்புகளை வளர்த்துக் கொள்ள இவ்விளையாட்டுப் பெரிதும் உதவியுள்ளது.*

*காப்பியங்கள், சிற்றிலக்கியங்களில் இவ்விளையாட்டுப் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. "அம்புலி வா வென்றழைத்தலும். . . . எம்பெருங்களிறே" என்ற கம்பராமாயணப் பகுதியில் அம்புலியை ஆண் குழந்தை அழைத்த செய்தி வந்துள்ளது. (31: யுத்த: இராவணன்: 50), "நறுங்கொடியே. . . . . வானம்புலி வாவென வோதுதியால்" என்ற வரதராஜ் ஐயங்காரின் பாகவதப் பகுதியில் அம்புலியைப் பெண் குழந்தை அழைத்த செய்தி வந்துள்ளது. (117:நாச்சியார்: 56)*

*இக்காலத்தில் அம்புலி காட்டல், அம்புலி அழைத்தல் என்பது சிறு குழந்தைகளுக்கு விளக்கப்பெறும் நிகழ்ச்சியாகப் பள்ளிகளிலும் வீடுகளிலும் உள்ளன.*

### 2.1.3.2. எண்ணி விளையாடல்

*ஓரிடத்தில் அதிக எண்ணிக்கையிலுள்ள பொருள்களைக் கண்டால் அவற்றை ஒன்று, இரண்டு, மூன்று . . . . . . . என்றவாறு எண்ணி வியந்து பொழுதுபோக்குவது மாந்தரிடம் இயல்பாய்க் காணப்படும் ஒரு பண்பாகும்.*

*உப்பு வண்டிகள், படகுகள், யானைகள், குதிரைகள் என்பனவற்றைப் பெண்கள் எண்ணி விளையாடிய செய்திகள் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன. அப்பகுதி:*

உவர்விளை உப்பின் அழாஅ உழவர்
ஓகை உமணர் வருபத நோக்கிக்
கான லிட்ட காவற் குப்பைப்
புலவுமீன் உணங்கல் படுபுள் ஒப்பி
மடநோக்கு ஆயமொடு உடனுப்பு ஏறி
எந்தை திமிலிது நுந்தை திமிலென
வளைநீர் வேட்டம் போகிய கிளைஞர்
தின்திமில் எண்ணும் தண்கடற் சேர்ப்ப! (நற் 331:1-8)

பீரை நாறிய சரையிவர் மருங்கின்
ஈத்திலைக் குப்பை யேறி யுமணர்
உப்பொ யொழுகை யெண்ணுப மாதோ (புறம் 116:6-8)

நெடுங்கான் மாடத் தொள்ளெரி நோக்கிக்
கொடுந்திமிர் பரதவர் குருஉச்சுட ரெண்ணவும்
(பட்டினப் 111-112)

*இவ்வாறான பொழுதுபோக்கு, காப்பியத்திலும் இடம் பெற்றுள்ளது. கிளிகளைத் தம் முன்கைகளின் மீது வைத்துக் கொண்டிருந்த பெண்கள், தாமரைத் தடாகத்திலிருந்த பறவைக் குஞ்சுகளை எண்ணி மகிழ்ந்ததாகச் சீவக சிந்தாமணி குறிப்பிட்டுள்ளது. அப்பகுதி:*

. . . . . . . . . . வேற்கண் மாதரார்
பைங்கிளி முன்கைமேற் கொண்டு பார்ப்பெனும்
கொங்கலர் தாமரைக் கிடங்கு கூறுவாம் (58:94)

*இக்காலத்தில் மழலைப் பள்ளிகளில் மழலைகளின் தொடக்கநிலை விளையாட்டே எண்ணி விளையாடல் தான் என்பது குறிப்பிடத்தக்கது.*

**2.1.3.3. பறவை, விலங்குகளுடன் விளையாடல்**

*ஆண்களும், பெண்களும் இருபால் சிறுவர்களும் தாங்கள் விரும்புகின்ற பறவை, விலங்குகளுடன் விளையாடி மகிழ்ந்துள்ளனர். புலிக்குட்டிகள், யானைக் கன்றுகளுடன் சிறுவர்களும், மான் குட்டிகளுடன் பெண்களும் விளையாடி பொழுது போக்கியுள்ளனர். மனிதர்களை நேசிப்பதை விடவும் அதிகமாக நேசித்துள்ளனர். விளையாடும் பொழுதே தங்களது உள்ளக்கிடக்கையைச் சொல்லுவது பழக்கமாயிற்று திட்டமிட்ட பொழுதுபோக்கு விளையாட்டு. பறவை, விலங்குகளை உயிரினும் இனிதாகக் கருதுவதால் மனிதநேயம் வளரத் துணையாயிற்று. சிறிய பறவைகளுடன் விளையாடியதையும் அவற்றின் இனிய குரலைக் கேட்டு மகிழ்ந்ததையும் நற்றிணை, கலித்தொகைப் பாடல் வரிகள் பின்வருமாறு விளக்குகின்றன.*

சிறுகுறும் பறவையுடன் ஓடி (நற் 277:9)

தாது தேர் பறவையின் இன்மொழி கேட்டு (கலித் 22:7)

*இருபாலாரும், அவரவர் விரும்பும் பறவை-விலங்குகளுடன் விளையாடி மகிழ்ந்துள்ளனர். வேந்தர்கள் களிற்றுடன் ஆடிப் பொழுதுபோக்கியதைச் சீவகசிந்தாமணி புலப்படுத்தியுள்ளது. "களிற்றோ டாடித் தொழுதகக் கழிப்பர் வேந்தே" என்ற செய்யுட் பகுதியும், கூத்தைக் கண்டும் செல்வத்துடனே ஒழிந்த விளையாட்டுக்களை விளையாடியும் அமையாராய் . . . களிற்றோடே விளையாடிப் பொழுது போக்குவர்" என்று இதற்கு நச்சினார்க்கினியர் தந்துள்ள விளக்கமும் கருதத்தக்கன (சீவகசிந்தா: 289).*

*புலிக்குட்டிகளுடனும், யானைக்கன்றுகளுடனும் சிறுவர்கள் விளையாடியுள்ளனர். மான்குட்டிகளுடன் பெண்கள் விளையாடியுள்ளனர். அப்பகுதிகள்:*

வன்புலிக் குருளையோடும் வயக்கரிக் கன்றி னோடும்

புன்றலைச் சிறு மகார்கள் புரிந்துட னாடலன்றி (கண்ணப்ப: 4)

மானின் குழவியொடு கெடவரல் வருத்தியும் (32:17)

*என்றும், மானின் குழவியோடு ஆடீ என வரும் கண்ணப்ப நாயனார் புராணத்தின் வரிகள் குறிப்பிடத்தக்கன. இக்காலத்தில் பறவை, விலங்குகளுடன் விளையாடும் இப்பழக்கம் தொடர்ந்து விளையாட்டாக உள்ளது.*

**2.2. நாட்டுப்புறச் சிறுவர், சிறுமியர் விளையாட்டுக்கள்**

ஒலிநயங்களின் மூலம் எண்ணுப்பெயர்களைக் குழந்தைகள் எளிதில் அறிகின்றனர். ஒலிநயம்தான் குழந்தைகளுக்கு விருப்பமான கூறாய்த்திகழ்கிறது. "எட்டு தட்டு நிறைய லட்டு" போன்று ஒலிநயம்மிக்க வார்த்தைகள் கொண்ட பாடல்களைச் சிறுவர்-சிறுமியரிடையே காணலாம்.

அறிவு வளர்ச்சி மேன்மையுற வினா-விடைப் பாடல்கள் பெரிதும் உதவுகின்றன. அக்கால மக்களின் நடைமுறை வாழ்வைப் படம்பிடித்துக் காட்டுவனவாக சிலபாடல்கள் அமைந்துள்ளன. குழந்தைகளை முன்னும் பின்னும் ஆடவைத்து விளையாட்டுக் காட்டுவது, குழந்தைகளுக்கு உடற்பயிற்சி செய்ய கற்றுக் கொடுப்பது போல அமைகிறது.

குடும்ப உறவுமுறைகள், தம் வீட்டில் உள்ள விலங்குகள் பெயர், உணவில் பருப்பு, நெய் சேர்த்து உண்ணுதல் போன்ற விவரங்களை அறிந்து கொள்ள பாடல்கள் வழி செய்கின்றன.

குழந்தைப்பாடல்கள் விளையாட்டு முறையில் விளையாட்டாக அமைந்து இன்பம் பயக்கின்றன. இவ்வாறாக விளையாட்டுக் குழந்தை நிலையிலிருந்து வளரத் தொடங்கிச் சிறுவர், சிறுமியரை வந்தடைகிறது. பன்னிரண்டு வயது வரை உள்ளவரை பால் அடிப்படையில் சிறுவர், சிறுமியர் என்று வரம்பு வகுத்து அச்சமயங்களில் விளையாடும் விளையாட்டுக்களைச் சிறுவர், சிறுமியர் விளையாட்டுக்கள் எனப் பகுத்துக் காணலாம்.

சிறுவர் தனித்தும், சிறுமியர் தனித்தும், சிறுவர் சிறுமியர் இணைந்தும் பல விளையாட்டுக்களை, நாட்டுப்புறங்களில் விளையாடுகின்றனர். ஒவ்வொரு பிரிவிலும் சில விளையாட்டுக்கள் மட்டுமே விளக்கப் பெற்றுள்ளன.

"விளையாட்டு என்பது வாழ்க்கைக்குப் பயிற்சி அளிக்கும் களம்" என்கிறார் இரா.பாலசுப்பிரமணியம்.[3] சிறுவர்கள் போட்டி விளையாட்டுக்களில் அதிகம் ஈடுபடுகின்றனர். சிக்கல் மிகுந்த சமூக வாழ்க்கையில் பின்னர் ஈடுபட வேண்டியிருப்பதற்கு இளம் வயதிலேயே அவற்றை எதிர் நோக்கும் பயிற்சியை விளையாட்டு அளிக்கிறது என்று சு.சக்திவேல் கூறுகிறார்.[4]

பொதுவாக விளையாட்டுக்களை அக விளையாட்டுக்கள் (Indoor Games), புறவிளையாட்டுக்கள் (Outfoor Games) என இருவகைப்படுத்தலாம்.[5] சிறுவர்கள் புறவிளையாட்டுக்களில் மிகுதியாக ஈடுபடுகின்றனர். மழைக் காலங்களில் வீட்டிற்கு வெளியே விளையாட முடியாததால் அகவிளையாட்டுக்களை வீட்டின் உள்ளே விளையாடுகின்றனர்.

### 2.2.1. சிறுவர் விளையாட்டுக்கள்

1. பந்து விளையாட்டு
2. ஒளிதல் விளையாட்டு
3. கண்கட்டு விளையாட்டு
4. சப்பர விளையாட்டு
5. நீர் விளையாட்டு
6. பளிங்கு

#### 2.2.1.1. பந்து விளையாட்டு

கயிறு, துணி, ரப்பர், போன்றவற்றால் செய்யப்பட்ட பந்துகளை எறிந்தும், உதைத்தும், போட்டுப்பிடித்தும் விளையாடுகின்றனர்.

3 இரா.பாலசுப்பிரமணியம், தமிழர் நாட்டு விளையாட்டுக்கள், ப.2.

4 சு.சக்திவேல், நாட்டுப்புறவியல் ஆய்வு, பக்.235-237.

5 கி.கருணாகரன், நாட்டுப்புறவியலாய்வு நெறிமுறைகள், ப.68.

பிள்ளையார் பந்து, பேய்ப்பந்து, கிட்டிப்பந்து, எறிபந்து போன்ற பந்து விளையாட்டுக்கள் கிராமப்புறங்களில் விளையாடப் பெறும்.

ஒரு கல்லினைப் பிள்ளையாராகப் பாவித்துக் கொள்வர். அதனைப் பந்தால் எறிந்து வீழ்த்துவது "பிள்ளையார் பந்து" ஆகும். இரண்டு கட்சிகளாகப் பிரித்து கொண்டு ஒரு கட்சியினர். எறிய மற்றவர்கள் பிடித்து விளையாடுவர். எறிந்த பந்து எழும்பி வரும்போது எதிர்கட்சியினர் பிடித்து விட்டால் எறிந்தவர் வெளியேறி விடவேண்டும்.

எறிபந்தும், பேய்ப்பந்தும் ஒன்றுதான் கொஞ்சம் முரட்டுத்தனமான விளையாட்டாகையால் 'பேய்ப்பந்து' என ஆயிற்று. பந்துள்ளவர், யாரையாவது குறிபார்த்து எறிய, அவர் பிடிக்க என ஒருவர் எறிந்து விளையாடும் ஆட்டமாகும்.

### 2.2.1.2. ஒளிந்து விளையாடல்

இரவுப் பொழுதில் ஒருவன் கண்ணைப் பொத்திக் கொண்டு வரலாமா? என்று கேட்பான் மற்றவர்கள் மறைவான இடத்தில் ஓடி ஒளிந்து கொள்வர். 'சூட்' வரலாம் என்று கூறியவுடன் கண்ணைத் திறந்து மற்றவர்களைப் பிடிப்பான். முதலில் ஒருவனைத் தொட்டுப் பெயர் கூறிவிட்டால், பிடிபட்டவன் கண் பொத்தி வர வேண்டும். ஒளிந்தவர்கள் வந்து விடலாம். ஒளிந்தவர்கள் கண்பொத்திய இடத்தை வந்து தொட்டு விட்டால், முதலில் கண்பொத்தி வந்து பிடித்தவன் மீண்டும் பிடிக்க வேண்டும். இவ்வாறு இவ்விளையாட்டுத் தொடரும். (நிலாக் கால விளையாட்டு)

### 2.2.1.3. கண்கட்டு விளையாட்டு

சிறுவர்கள் பலர் சேர்ந்து 'சாட்பூட்திரி' சொல்லிப் பிரிந்து செல்வர். இறுதியில் தங்கியவர் கண்ணைத் துணியால் இறுக்கமாகக் கட்டி மற்றவர்களைப் பிடிக்கச் செய்வர். சிறுவர்கள் கண்கட்டி இருப்பவரிடம் அகப்படாமல் ஓடி ஓடி இங்கு வா, அங்கு வா, இந்தா எனக் கூறி விளையாடுவர். கண்ணைக் கட்டியவன் அங்குமிங்கும் குரல்கேட்ட பக்கமெல்லாம் சுற்றிச் சுற்றி ஓடுபவர்களைத் தொடமுயல்வான். பிடித்துவிட்டால் அவன் கண்ணைக் கட்டி மற்றவர்களைப் பிடிக்க வேண்டும் பிடிக்க முடியாவிட்டால்

*மீண்டும் அவனே கண்ணைக் கட்டி வரல் வேண்டும். கண்ணைக் கட்டி விளையாடுவதால் 'கண்கட்டு விளையாட்டு' எனப் பெயர் பெற்றுள்ளது.*

**2.2.1.4. சப்பர விளையாட்டு அல்லது தேர் விளையாட்டு**

*இவ்விளையாட்டில் மொத்தம் நான்கு பேர் கலந்து கொள்வர். முதலில் ஒருவன் பின்னால் கைகோத்து நிற்க, இருவர் முன்னால் உள்ளவன் கையைக் கோத்து நிற்பான். பின்னால் நிற்கும் இருவர் கழுத்தில் கைபோட்டுப் கொள்வர். நான்காமவன் கையில் காலை ஊன்றிப் பின்னால் நிற்கும் சிறுவனின் தோளில் ஏறி அமர்ந்து கொள்வான். பார்ப்பதற்குத் தேர் போல் இருக்கும். இவ்விளையாட்டில் நால்வர் கலந்து கொள்வர்.*

*அட்டைகளைக் கொண்டு தேர் போல் செய்து இழுத்துச் செல்லச் சக்கரம் அமைத்து, காகிதப் பூக்களால் அலங்கரித்துத் தெருக்களில் இழுத்துக் கொண்டு சென்று விளையாடுவர். கோவில் திருவிழாக் காலங்களில் தேர் வருவதைப் பார்த்த சிறுவர்கள் அவ்வாறு செய்து பொழுது போக்காக விளையாடுவர்.*

*சிறுவர்கள் பலர் ஒன்று கூடித் தென்னந் தோப்பிலிருந்து சிறுகுரும்பைகளைச் சேகரித்து ஈர்க்குச்சிகளைக் கொண்டு தேர் போல் அமைத்து நூல்கொண்டு இழுத்து விளையாடுவர். சில இடங்களில் நுணாக்காய்களைக் கொண்டும் பூவரசு காய்களைக் கொண்டும் தேர் செய்து விளையாடுகின்றனர். இவ்விளையாட்டு இவர்களது படைப்பாற்றல் மற்றும் கற்பனைத் திறனை வளர்க்கிறது.*

**2.2.1.5. நீர் விளையாட்டு**

*காலையில் நீர்நிலைகளில் குளிக்கச் செல்லும் கிராமப்புறச் சிறுவர்கள் பலர் ஒன்றுகூடி மதகின்மேல் நின்றுகொண்டு வரிசையாக நீரில் 'துடும்' எனக் குதிப்பர். நீரிலிருந்து கொண்டே கண்டுபிடித்து விளையாடுவர். அப்பொழுது ஒருவன் யார் பிடிக்க வேண்டும் என்பதற்கு ஒரு கருத்தைக் கூறி பிடிக்க வேண்டியவனை அறிவிப்பான்.*

ஆத்துல ஒரு கெண்டை பிடிச்சேன் சுட்டேன், பொசுக்கினேன் எல்லாருக்கும்
கொடுத்தேன் ஒருத்தனுக்கு மட்டும் கொடுக்கவில்லை

அவன் இவன் எனச் சுட்டுவான். அவனே நீருக்குள் மூழ்கிச் செல்பவர்களைப் பிடிக்க வேண்டும். நீருக்குள் மூழ்கி மூழ்கி அகப்படாமல் செல்வர் தலையை மெதுவாக வெளியே நீட்டுவர். நீந்திச் செல்வர். ஒருவரைத் தொட்டுவிட்டால் அவர் மீண்டும் பிடிக்கத் தொடங்குவார்.

நீரிலிருந்து வெளியே வந்து மறுபடியும் மதகின் மேலிருந்து குதிப்பர். இவ்வாறாக நீரில் விளையாடி மகிழ்வர் கண்கள் சிவப்பேறி விடுவதுண்டு. நீரில் மூழ்கும்போது மூச்சை அடக்கிக் கொள்ளும் பயிற்சி பெறுகின்றனர். கை, கால்களை அசைத்து நீந்திச் செல்வதால் கை, கால்களுக்குப் பயிற்சி கிடைக்கிறது. கிராமப்புறச் சிறுவர்களுக்கே இயல்பாகவே இவ்வாய்ப்பு நிலை கிட்டுகிறது.

தொடித்தலை விழுத்தண்டு ஊன்றி (புறம்-243)

என்ற பாடலில் தான் வயது முதிர்ந்தபின் நீர்நிலையைக் காண்கிறார்-ஒரு புலவர்-புலவர் பெயர் தெரியவில்லை. இத்தொடரே அவர் பெயராயிற்று. அப்பொழுது சிறுவர்கள் 'நீருக்குள் துடும்' எனக் குதித்து நீந்தி நீர் நிலையில் விளையாடிய நிகழ்ச்சியை நினைவுகூர்ந்து பாடல் பாடியுள்ளார்.

### 2.2.1.6. பளிங்கு

கண்ணாடியால் செய்த சிறு குண்டினைப் 'பளிங்கு' என்பர். அதை வைத்து விளையாடுவதால் இவ்விளையாட்டுப் 'பளிங்கு விளையாட்டு' எனப் பெயர் பெற்றது. இருவரோ அதற்கு மேற்பட்டவரோ இவ்விளையாட்டை விளையாடலாம்.

ஒரு குறிப்பிட்ட இடத்திலிருந்து ஏறக் குறைய எட்டடி தொலைவில் சிறிய தேங்காய் மூடியளவிற்கு வட்டவடித்தில் இரண்டு அங்குலம் ஆழத்தில் குழி தோண்டியிருப்பர். குழியை நோக்கிப் பளிங்கியை வீசுவதற்கு நிற்குமிடத்தில் ஒரு கோடிட்டிருப்பர்.

விளையாடும் சிறுவர்களில் எவருக்கு வயது குறைவோ, அவர் முதலில் விளையாட அனுமதிக்கப்படுவார். அவர் கோடிட்ட இடத்தில் நின்று குழியை நோக்கிப் பளிங்கியைப் போட வேண்டும். அது குழியில் விழாமல் தள்ளி விழுந்தால் அடுத்தவர்

குழியில் பளிங்கியைப் போட்டு முதலாமவர் பளிங்கியை அடிக்கும் உரிமையைப் பெறுவார். இரண்டாமவர் போடுவதும் குழியில் விழாவிடின் முதலில் பளிங்கியை எடுத்து இருந்த இடத்திலிருந்து குழியிலிட்டு இரண்டாவது நபர் பளிங்கியைத் தன் பளிங்கியால் அடிப்பார். இவ்வாறு அடிக்கும் போது இரண்டு பளிங்குகளும் ஒன்றாகப் பக்கத்தில் அமைந்து விட்டால் அதைக் 'குழம்பி' என்று குறிப்பிடுவர். அச்சூழலில் குழம்பி நிலைமைக்குரிய பளிங்குகளுக்குச் சொந்தமான இருவரும் முதலிலிருந்து விளையாட்டைத் தொடங்குவர். இவ்வாறு தொடர்ந்து விளையாட்டு நடைபெறும். குனிதல், குறிவைத்தல், வீசுதல், நடத்தல், எறிதல் முதலான நிகழ்வுகளின் வழி கண்கள், கால்கள், கைகள் போன்ற உடல் உறுப்புகளுக்குப் பயிற்சியாகப் பளிங்கு விளையாட்டு அமைகிறது.

### 2.2.2. சிறுமியர் விளையாட்டுக்கள்

1. கைவைத்து விளையாடுதல் (கிச்சு கிச்சுத் தாம்பூலம்)
2. கண் பொத்திக் கைக்கிள்ளல்
3. மணல் விளையாட்டு
4. சோறு சமைத்து விளையாடுதல்
5. பொம்மை விளையாட்டு

மேற்குறிக்கப்பெற்ற சிறுமியர், விளையாட்டுக்கள் ஐந்தும் பின்வருமாறு விளக்கப்பெற்றுள்ளன.

#### 2.2.2.1. கைவைத்து விளையாடுதல்

இவ்விளையாட்டைக் கிச்சு கிச்சுத் தாம்பூலம் என்றும் அழைப்பதுண்டு. மண்ணை நீளவாக்கில் சிறுகோபுரம் போலச் சேர்த்துக் கொண்டு அம்மண்ணில் சிறுகுச்சியை மறைத்து வைத்துவிட்டு அடுத்தவரைக் கண்டுபிடிக்கச் சொல்லும் விளையாட்டாகும். இதில் மறைத்து வைப்பவர் பாடிக் கொண்டே குச்சியை மறைத்து வைப்பர்.

கிச்சு கிச்சுத் தாம்பூலம்
கிய்யா கிய்யா தாம்பூலம்
நட்டு வச்சா பட்டுப்பூ பட்டுப்பூ

எனக் கூறித் தன் கையால் குச்சி வைத்த இடத்தை மூடிக்கொள்ள வேண்டும். எதிரில் இருப்பவர் குச்சியைக் கண்டுபிடிக்க வேண்டும். அவர் கையில் குச்சி கிடைத்தால் அவர் ஆட்டத்தைத் தொடங்குவார். ஆடியவர் கண்டுபிடித்தால் அவர் வென்றவர். அதிகப் புள்ளிகள் பெறுபவர், குறைந்த புள்ளிகள் பெற்றுத் தோல்வி அடைந்தவர் கையைப் பின்னால் கோத்து வைத்து அதில் மணலைக் குச்சியுடன் சேர்த்து வைத்துக் கண்ணைப் பொத்திக் கொண்டு "வண்ணான் வீடு எங்கிருக்கு" என்று வினவக் கண் பொத்தப்பட்டவள் "ஆத்துக்கு அந்தாண்ட" என்று கூறிக் கொண்டே சென்று தொலைவான தூரத்தில் கையில் உள்ள மண்ணைக் கீழே வைக்கச் சொல்லி மீண்டும் விளையாடிய இடத்திற்கே அழைத்து வந்து தலையை இரண்டு, மூன்று முறை சுற்றி விட்டு கண்ணைத் திறந்து விடுவாள். மணல் வைத்த இடத்தை அவள் கண்டுபிடிக்க வேண்டும். கண்டு பிடித்தால் அவள் வெற்றி பெறுவாள். இல்லையேல் தோல்வி அடைவாள்.

### 2.2.2.2. கண் பொத்திக் கைக்கிள்ளல்

ஒரு குழுவினர் ஒவ்வொருவரும் தனித்தனியே ஒரு பூவின் பெயரைச் சூட்டிக் கொள்வர். மற்றொரு குழுவினர் காயின் பெயரைச் சூட்டிக் கொள்வர். அதன் பிறகு எதிர்க்குழுவில் ஒருவரின் கண்ணைப் பொத்திவிட்டுக் குறிப்பிட்ட பூவின் பெயரினைக் குறிப்பிட்டு அவரை வந்து கிள்ளி விட்டுப் போகச் சொல்வர். கண்மூடப்பட்டவர் கிள்ளியவரின் பெயரினைச் சரியாகச் சொல்ல வேண்டும் . இந்நேரத்தில் கண்ணைப் பொத்துபவர்,

ரோசாப்பூவே ரோசாப்பூவே
மெல்ல வந்து கிள்ளிப்போ
ஆடாம அசையாம குனிஞ்சு
ஜோரா ஒருமுறை கைத்தட்டுங்க
கையாட்டுப் படல காலாட்டுப் படல
கிள்ளினது யாரு

என்ற பாடலினைப் பாடுகின்றனர்.

**2.2.2.3. மணல் விளையாட்டு**

*இது இருவர் விளையாடும் விளையாட்டாகும்.*



*மணலை முட்டாகக் குவித்துப் படத்தில் உள்ளவாறு எதிர் எதிராக அமர்ந்து கொள்ள வேண்டும். ஒரு பக்கம் மணலில் முதல் வரிசையில் மூன்று குழிகளும் இரண்டாவது வரிசையில் இரண்டு குழிகளும் அமைத்துக் கொள்ள வேண்டும்.*

மாது மாது மணவரஞ்சிதம்
கோது கோது கொழுந்து வெத்தலை
வெள்ளிக்கு ரெண்டாம் சொல்லிக் கொடுத்தா
டாயக்கோ டப்பக்கோ
டில்லாங்கு கோடியே கோடியே

*என்று பாடிக் கொண்டே சிறிய கல்லொன்றை (இரு விரலுக்குள் அடங்குமாறு உள்ளகல்) எடுத்து இருவரிசை பத்துக் குழிக்குள்ளும் எதில் வேண்டுமானாலும் எதிர் இருப்பவர் அறியா வண்ணம் கல்லை மறைத்து வைத்துவிட வேண்டும். எதிரில் இருப்பவர்க்குத் தெரியாமல் ஒருகையால் மற்றொரு கையை மறைத்துக் கொண்டும் வைக்கலாம். மூன்று வாய்ப்புகள் உண்டு. எதிரில் இருப்பவர் சரியாகக் கண்டுபிடித்து விட்டால் புள்ளியும் பெற்று ஆட்டத்தையும் தொடரலாம். சரியாகக் கூறாவிட்டால் ஆடியவரே ஆட வேண்டும். ஒவ்வொரு முறையும் பாடிக் கொண்டே ஆடுவர். அதிகப் புள்ளிகள் பெற்றவர் வென்றவர் ஆவார்.*

**2.2.2.4. சோறு சமைத்து விளையாடுதல்**

*மூன்று கற்களை அடுப்பாக்கி, கொட்டாங்குச்சியைப் பாத்திரமாக்கி, இலை தழைகளைக் காய்கறிகளாகவும், மண்ணை அரிசியாகவும் வைத்துச் சமையல் செய்து வரிசையாக மற்றவர்களை அமரச் செய்து உணவு படைத்தல்.*

இதில் பலர் விளையாடுவர். ஒருவர் காய்கறி அரிசி வாங்கி வருவார்; மற்றவர் அடுப்பை மூட்டுவார்; அடுத்தவர் தண்ணீர் கொண்டு வருவார். காய்கறி நறுக்குவார், சமைப்பார். இவ்வாறாக இவ்விளையாட்டு நடைபெறும்.

அம்மா, அப்பா, தம்பி, தங்கை குடும்ப உறவு முறை உணவு சமைக்கும் பெரியவர் பழக்கம் போலச் செய்தல். கூடி வேலை செய்தல், பகிர்ந்து அளித்தல் போன்ற பண்புகள் வளர இவ்விளையாட்டுத்துணை புரிகிறது.

### 2.2.2.5. பொம்மை விளையாட்டு

பெண் குழந்தைகளைப் பெரிதும் கவர்ந்து ஆடச் சொல்பவை பொம்மைகளேயாகும். மரத்தால் செய்த பொம்மைகளே நாட்டுப்புறங்களில் பெரிதும் விளையாடுவதற்குப் பயன்பட்டன. இரு பொம்மைகள் இருந்தால் அவற்றிற்குக் கல்யாணம் செய்து வைத்து விளையாடி மகிழ்வர். அப்போது பாடல்பாடுவர் "பொம்மைக்கும் பொம்மைக்கும் கல்யாணமாம் பூலோகம் எங்கும் வைபோகமாம்" என்று அமையும். இவ்விளையாட்டுப் போலச் செய்தல் முறையில் அமையும். வீடுகளில் நடைபெறும் திருமண விழாப் போன்று திருமண நிகழ்வுகள், விருந்து-உபசரிப்பு முதலிய நிகழ்வுகளும் இருக்கும். மரப்பாச்சிகளை வைத்து விளையாடுவது இயல்பாக உள்ளது.

பொம்மைகளுக்குச் சட்டை அணிவித்து, சடைபின்னி அலங்காரம் செய்வர். பொம்மையைக் குழந்தையாகப் பாவனை செய்தும் விளையாடுவர். மருத்துவப் பயன்கள் அடங்கிய மரங்களிலிருந்து செய்யப்பட்டதால் மருந்தாகவும் இவை பயன்பட்டன.

அவர்கள் முகத்தில் உடல் கோளாறுகளால் பரு முதலிய தோன்றும்போது செஞ்சந்தன மரத்தால் செய்யப்பெற்றிருந்த பொம்மைகளையே இழைத்துப் பருமீது பூசுவர், பருவும் மறையும்.

மரத்தால் பானை, சட்டி, ஆட்டுக்கல், அடுப்பு என்று பொருள்களைச் செய்து திருவிழாக் காலங்களில் விற்பர். குழந்தைகள் குறும்பு குறையப் பெற்றோர் வாங்கி அளிப்பர். அதை வைத்துக்கொண்டு தனித்தும் கூடியும் விளையாடுவர்.

### 2.2.3. சிறுவர், சிறுமியர் விளையாட்டுக்கள்

1. *கண்ணா மூச்சி*
2. *கல்லா? மண்ணா?*
3. *ஒரு தலையில ஆடுமாடு மேயுதாம்*
4. *குலை குலைக்கா முந்திரிக்கா*
5. *சங்கிலி-புங்கிலி*

*மேலே குறிக்கப்பெற்றுள்ள விளையாட்டுக்கள் ஐந்தும் பின்வருமாறு விளக்கப்பட்டுள்ளன.*

### 2.2.3.1. கண்ணாமூச்சி

*முதியவள் ஒரு சிறுமியின் கண்ணைப் பொத்திக் கொள்வாள். மற்றவர்கள் ஓடி ஒளிந்து கொள்வர். முதியவள் பொத்தியிருந்த கண்ணைத் திறந்து,*

கண்ணா மூச்சி ரேரே
காதடைப்பான் ரேரே
பீ முட்டையைத் தின்னுபுட்டு
நல்ல முட்டை கொண்டு வா

*எனக் கூறுவாள். ஒளிந்து கொண்டிருப்பவர்களைக் கண்டுபிடித்துத் தொடவேண்டும். இதற்கிடையில் ஒளிந்து கொண்டிருப்பவர்கள் முதியவளை வந்து தொட்டுவிட்டால் அவர்கள் 'அவுட்' ஆவதில்லை. கண்பொத்தி வந்தவள் பிடித்துவிட்டால் பிடிபட்டவள் கண்பொத்தி வர வேண்டும். யாரையும் தொடாவிட்டால் அவளே மீண்டும் கண்ணைப் பொத்தி வரவேண்டும். இவ்வாறாக ஆட்டம் தொடரும்.*

### 2.2.3.2. கல்லா? மண்ணா?

*இவ்விளையாட்டில் சிறுவர் சிறுமியர் கூட்டமாக ஓடுவர். இத்துணை பேர் என்ற எண்ணிக்கை இல்லை. ஒருவர் பிடிக்க வேண்டும். ஓடுபவர்கள் பிடிப்பவரிடம் கல்லா? மண்ணா? என்று கேட்க வேண்டும். கல் என்றால் மண்ணிலும் மண் என்றால் கல்லிலும் நிற்க வேண்டும். மண் என்று கூறும்போது மறந்துபோய் மண்ணில் நின்றால் பிடிப்பவர் அவரைத் தொட்டு விட்டால் அவர் ஆட்டத்தில் இருந்து விலக வேண்டும். மீண்டும் ஓடிப்பிடித்து அவ்வாறே விளையாடுவர் இருபொழுதிலும் விளையாடலாம். சிறுவர்,*

சிறுமியர் கூடி விளையாடும் உணர்வைப் பெறுகின்றனர். ஆண், பெண் வேறுபாடு இல்லை.

### 2.2.3.3. ஒரு தலையில ஆடுமாடு மேயுதாம்

யார் தலையிலேனும் சிறு துரும்பை யாரும் அறியா வண்ணம் போட்டு விட்டு "யாரோ ஒரு தலையில ஆடு மாடு மேயுதாம்" எனக் கூறுவர். துரும்பு கீழே விழும் வரை இப்படி கூறிக் கொண்டே இருப்பர். குறும்புக்காகத் துரும்பு போட்டு ஆடும் விளையாட்டு.

### 2.2.3.4. குலை குலைக்கா முந்திரிக்கா

குழுவாக நபர்கள் அமர்ந்து கொள்வர். அதில் ஒருவன் ஒரு துணிப்பந்தினைத் தூக்கிக் கொண்டு பாடிக் கொண்டே சுற்றி வருவான். அந்தப் பந்தினை உட்கார்ந்திருக்கும் யார் பின் புறமாவது போட்டு விட்டு ஓடுவான். அவன் கண்டு கொண்டால் அதை வைத்தவர் மீண்டும் ஓடி வந்து பந்தை வைக்க வேண்டும். இல்லையென்றால் ஓடுபவன் சுற்றி வந்து அப்பந்தால் அவரை அடித்து எழுப்பி விட்டுத் தான் அமர்ந்து கொள்வான். இவ்விளையாட்டில் அப்போது பாடப்பெறும் பாடல் பின்வருமாறு கொடுக்கப்பட்டுள்ளது.

குலை குலைக்காய் முந்திரிக்காய்
நரியே நரியே சுத்திவா
கொள்ளையடிச்சவன் எங்கிருக்கான்
கூட்டத்தில் இருப்பான்
கண்டுபிடி கண்டுபிடி
ஓட்டுமேல ஏறுவேன்
ஈட்டியால குத்துவேன்
பச்சரிசி தின்பேன்
பல்ல உடைப்பேன்

என பாடல் அமைகின்றது.

### 2.2.3.5. சங்கிலி-புங்கிலி

*சிறுமியர் சிலர் கைகோத்துக் கொண்டு வட்டமாக நின்று கொள்வார்கள். புலியாக வேடமிடுபவன் ஒரு பையனாக இருப்பான். வட்டத்திற்குள் ஒரு சிறுமி நின்று கொள்ள புலியாக வட்டத்திற்கு வெளியே சுற்றி வருவான். "சங்கிலி-புங்கிலி" கதவைத்திற எனப்பாடுவான். வட்டமாக நின்று கொண்டு இருப்போர் "நான்மாட்டேன் வேங்கைப்புலி" என்று பாடுவார்கள். சுற்றி வருவோன் மீண்டும் "ஆட்டுக் குட்டியைக் கண்டீங்களா? என்று வினவ, வட்டமாக நிற்போர் "கண்டோம்" என்பார். புலியாகச் சுற்றி வருவோன் "வரலாமா? வரக்கூடாதா?" என்பான். வரக்கூடாது என வட்டத்தார் வழிவிட மறுத்து விடுவார்கள். புலியாகச் சுற்றி வருவோன் வட்டத்திற்குள் பாய்ந்து ஆட்டுக்குட்டியாக நடிக்கும் சிறுமியைத் தொட்டு விட்டால் அந்தச் சிறுமி விளையாட்டில் இருந்து விலகிக் கொள்வாள். ஓட்டப் பயிற்சிக்கு இவ்விளையாட்டுச் சிறுமியரிடையே விளையாடப்படுகிறது.*

## 2.3. சிறுவர்-சிறுமியர் விளையாட்டுக்கள் - சங்கஇலக்கிய நாட்டுப்புற விளையாட்டுக்கள் ஒப்பீடு

*அம்புலி காட்டல் சங்க இலக்கியம் நாட்டுப்புற விளையாட்டுக்கள் இரண்டிலுமே ஆண், பெண் குழந்தைகளுக்கு நிலவைக்காட்டி உணவு ஊட்டுதல், அழுகையை நிறுத்திச் சிரிக்கச் செய்தல் என்ற பொதுவான கூறுகள் ஒன்றியுள்ளன.*

*எண்ணி விளையாடல் என்ற சங்க இலக்கிய விளையாட்டு உப்பு வண்டிகள், குதிரைகள், படகுகள், தீப்பந்தங்கள் இவற்றை எண்ணி விளையாடியதாகக் கூறுகிறது.*

*நாட்டுப்புற விளையாட்டு எண்ணுப் பயிற்சிப் பாடல் விளையாட்டுக்கள் என்ற வகையில் சிறு குழந்தைகளுக்கு ஒன்று முதல் பத்துவரை உள்ள எண்களைக் கற்றுத்தரும் பொருட்டுப் பாடப்படுவன இப்பாடல்கள்,*

ஒன்று யாவர்க்கும் தலை ஒன்று
இரண்டு முகத்தின் கண் இரண்டு
........................................................
........................................................

..................................................

பத்து இருகை விரல் பத்து

ஒருகுடம் தண்ணி ஊத்தி
ஒரேபூப் பூத்ததாம்
ரெண்டு குடம் தண்ணீ ஊத்தி
ரெண்டே பூப் பூத்ததாம்
..................................................
..................................................

*போன்ற பாடல்களை எடுத்துக்காட்டுக்களாகக் கூறலாம்.*

*எண்களைத் தெரிந்துகொள்ள நாட்டுப்புற விளையாட்டுக்கள் பாடல்களை ஒலிநயம் பட எடுத்துக் கூறுவதுடன் எண்ணுதல் நிலையில் ஒன்றுபட்டுள்ளது.*

*சங்க இலக்கிய விளையாட்டுக்கள் நாட்டுப்புற விளையாட்டுக்களை அடியொற்றியே அமைந்துள்ளன. சூழலுக்கும் பண்பாட்டிற்கும் ஏற்ப சில வளர்ச்சிகளும்- மாற்றங்களும் பெற்று நிகழ்கால வாழ்வின் நிகழ்வுகளை எடுத்துச் செல்லும் என்பதில் ஐயமில்லை.*

**பறவை, விலங்குகளுடன் விளையாடல்**

*சங்க இலக்கியக் கருத்துகள் வீரஞ்செறிந்தவை. அக்காலச் சிறுவர்கள் புலிக்குட்டி, யானைக் கன்றுகளுடனும் சிறுமியர் மான் குட்டிகளுடனும் விளையாடினர் என்றும் பறவைகளின் இனிய ஓசையைக் கேட்டனர் என்றும் இலக்கியங்கள் சான்று பகிர்கின்றன.*

*பரதன் (துஷ்யந்தன்-சகுந்தலை மைந்தன்) சிங்கக் குருளையுடன் விளையாடினான் என்பது வரலாறு. மனிதர்களை நேசிப்பதைவிட அதிகமாகப் பறவை, விலங்களை நேசித்தனர்.*

*நாட்டுப்புறச் சிறுவர், சிறுமியர்களுக்குப் பறவை, விலங்குகளின் பெயர்களை விளையாட்டாக அறியச் செய்தனர். அவை பாடலாக அமைந்து அவர்களுக்கு, மகிழ்ச்சியை ஏற்படுத்தின. இதனை,*

கிளியே கிளியே
கிண்ணத்தில் பால் கொண்டுவா
காக்கா காக்கா
கண்ணுக்கு மைக்கொண்டுவா
குருவி குருவி
கொண்டைக்குப் பூக் கொண்டுவா
அணிலே அணிலே
குழந்தைக்குப் பழங்கொண்டு வா

என்பது எடுத்துக்காட்டாகும்.

இவ்வாறு இருபாலர் விளையாட்டுக்கள் பெரும்பான்மையும் நாட்டுப்புற விளையாட்டுக்களின் வழியே அவர்களின் உள்ளுணர்வுகளை வெளிப்படுத்துகின்றன.

குறும்பு விளையாட்டு மகிழ்ச்சிக்காகச் செய்வது. ஒரு பொருளைக் கவர்தல், அறுத்தல், சிதைத்தல், உடைத்தல், அழித்தல் என்றவாறு நிகழுவது.

சிறுமியர் கட்டும் மணல் வீட்டைச் சிதைத்தல், முன்கை பற்றுதல் இவ்வாறாகக் கலித்தொகை, நற்றிணை கூறுகின்றன.

**சிறுதேர் சிறுபறை-சிற்றில், சிறுசோறு ஆக்கல்**

விளையாட்டுக்கள் போலச் செய்தல் அடிப்படையில் தங்கள் திறமையை வெளிப்படுத்துவனவாக உள்ளன. இவ்விளையாட்டுக்கள் நாட்டுப்புறச்-சங்க இலக்கிய விளையாட்டுக்களின் ஒப்புமையைத் தெளிவாகக் காட்டுகின்றன.

அமைப்புமுறை-குழு-தனிநபர் வீட்டில், வெளியில், வீட்டிலும் வெளியிலுமாக-பகல் பொழுது மற்றும் முன்னிரவு-நிலாக் காலங்களில் விளையாடப் பட்டிருக்கின்றன.

சிறுசோறு ஆக்கல் பல நல்ல பயிற்சி-பழக்க வழக்கங்கள்-பண்பினைப் பெற உதவியுள்ளன. பொருள் சேகரிப்பு நல்ல ஊக்கத்தையும், விடாமுயற்சியையும் தந்தது. சேர்ந்துழைக்கும் கோட்பாடு வளர்ந்தது; சுவையாக உணவு சமைக்கும் கலை வெளிப்பட

*ஏதுவாயிற்று; சோறு சமைக்கும் கலையில் பெண்களுக்குள்ள வல்லமை வெளிப்பட்டது. சிறு சோறு ஆக்கி விளையாடப் பயன்படுத்தப்பட்ட உண்கலங்களும் இவ்விளையாட்டு வளர்ச்சி பெற்றமையைக் காட்டுகிறது.*

*சிறுவர்கள் விளையாடும் சாம விளையாட்டு கற்பனை பெயர்களிட்டு ஆடும் விளையாட்டு. சங்க காலத்தில் இவ்விளையாட்டுக் குறித்த செய்திகள் நேரிடையாக இல்லையெனினும் சமமான கற்பனைப் பெயர்களை இட்டு விளையாடும் வழக்கம் இருந்துள்ளது.*

*"கூடி வரு வழக்கின் ஆடியற்பெயரும்" என்ற தொல்காப்பிய நூற்பா பகுதி (சொல்-பெயரியல் 11) எண்ணத்தக்கது. இதற்குச் சான்றாகச் சேனாவரையர் "பட்டிபுத்திரர், கங்கை மாத்திரர்" என்ற பெயர்களை எடுத்துக்காட்டி, இவை ஆடல் குறித்து இளையார் கூறுபவை என்று குறிப்பிட்டுள்ளார்.*

*'பெயர் கூறி பைய விளையாடுவாரும்' என்று பரிபாடல் (10:104) கூறுகிறது. இது அறிவு இயக்கம் சார்ந்த விளையாட்டாகும்.*

*நாட்டுப்புற சிறுமியர் விளையாட்டில் கண்பொத்திக் கைக்கிள்ளல் என்ற விளையாட்டில் ஒவ்வொரு குழுவினரும் ஒவ்வொருவருக்கும் தனித்தனியே பூவின் பெயரையும், காயின் பெயரையும் சூட்டிக் கொண்டு-ஒருவர் கண்பொத்தப்பட்டு ஒரு பூவின் பெயரைக் கூறி அவர் வந்து கையைக் கிள்ளிச் செல்வார். கிள்ளியவரின் பெயரினைச் சரியாகச் சொல்ல வேண்டும். அப்போது கீழ்வரும் பாடலினைப் பாடுகின்றனர்.*

ரோசாப்பூவே ரோசாப்பூவே
மெல்ல வந்து கிள்ளிப்போ
ஆடாமா அசையாம குணிஞ்சு
ஜோரா ஒருமுறை கைத்தட்டுங்க
கையாட்டுப் படல காலாட்டுப் படல
கிள்ளினது யாரு

*இவ்வாறு எவ்வகையாலும்-ஒருவகையில் ஒத்துக் காணப்படும் தன்மையில் சங்க-நாட்டுப்புற விளையாட்டுக்கள் அமைந்துள்ளன.*

*சிறுபறை கொட்டும் விளையாட்டுப் பறையை ஒலிக்க வைத்துத் தாளத்திற்கேற்பச் சிறுவர்கள் விளையாடுவர். இன்றும் சிறுவர்களிடையே இவ்வழக்கம் உள்ளது. இவ்விளையாட்டுச் சிறுவர்களின் கலை உணர்வை வளர்த்ததோடு புதியது காணும் வேட்கையினையும் வளர்த்துள்ளது. ஆளுமை தன்மையை உயர்த்திக் கொள்ள வகை செய்து கூடி விளையாடும் தன்மைக்கும் வகை செய்துள்ளது.*

**மணற் குவியலில் மறைத்தாடல்-மணல் விளையாட்டு**

*ஒரு பொருளை மண்ணிற்குள் மறைத்து வைத்து விளையாடுவது. கண்டெடுக்குமாறு தன்னுடன் விளையாடுபவர்களைக் கேட்பது. பொழுதுபோக்கு விளையாட்டு, ஆர்வத்தைத் தூண்டுவது. எப்படியும் கண்டுபிடித்து விடவேண்டும் என்ற உறுதியை வளர்ப்பது. உடல் உறுப்பு இயக்க விளையாட்டு.*

*சங்க-நாட்டுப்புற விளையாட்டுக்களில் ஒத்த கருத்தாக இவ்விளையாட்டு அமைந்துள்ளது.*

*மனஉறுதியை வலுப்படுத்தி வளப்படுத்துவது. மறைத்தல்-கண்டுபிடித்தல் இரு நிகழ்வுகளாகவும் பகல் பொழுது விளையாட்டாகவும் அமைந்துள்ளது.*

**பாவை விளையாட்டு-பொம்மை விளையாட்டு**

*ஆண், பெண் உருவங்களைச் செய்து சிற்றில் அமைத்து அதனுள் உருவங்களாக வைத்து மகிழ்ந்துள்ளனர். பாவையைக் குழந்தையாகக் கற்பித்துக் கொண்டுத் தாலாட்டி, கதைகள் கூறியுள்ளனர். அறிவு வயப்பட்ட விளையாட்டு.*

*நாட்டுப்புற சிறுமியர் விளையாடும் பொம்மைகள் மரத்தால் செய்யப்பட்டவை. அவற்றை அலங்கரித்துப் பூச்சூடி ஆண், பெண் பொம்மைகளுக்குத் திருமணம் செய்து*

வைப்பர். சிறுபொம்மைகளைக் குழந்தைகளாகப் பாவித்துத் தாலாட்டி உறங்க வைப்பர். பாவை-பொம்மை ஒத்த விளையாட்டாக அமைந்துள்ளது.

கற்பனை வளத்தைப் பெருக்கும் பொழுதுபோக்கு விளையாட்டு. இயற்கைச் சூழலிலும், வீட்டின் வெளிப்புறத்திலும் அமைத்துக் கொண்டதால் தன்னிச்சையாகச் செயல்படும் போக்கு மிகுந்து காணப்பட்டது.

வீடுகளில் நடைபெறும் திருமணவிழாப் போன்றே திருமண நிகழ்வுகள், விருந்து-உபசரிப்பு முதலிய நிகழ்வுகளும் இருக்கும். அப்போது பாடல் பாடுவர். "பொம்மைக்கும் பொம்மைக்கும் கல்யாணமாம் பூலோகம் எங்கும் வைபோகமாம்" என்று அமையும். இவ்விளையாட்டுப் போலச்செய்தல் முறையில் அமையும். பொம்மையைக் குழந்தையாகப் பாவனை செய்து விளையாடுவர். மருத்துவப் பயன்கள் அடங்கிய மரங்களிலிருந்து செய்யப்பட்டதால் மருந்தாகவும் இவை பயன்பட்டன. மரத்தால் பானை, சட்டி, ஆட்டுக்கல், அடுப்பு என்று பொருள்கள் செய்து திருவிழாக்காலங்களில் விற்பர். தனித்தும் கூடியும் நாட்டுப்புறச் சிறுமியர் விளையாடுவர்.

சங்க இலக்கிய பாவை விளையாட்டில் பாவை என்ற சொல் ஆண்-பெண் என்று இருபால் உருவங்களையும் குறிக்கும். குரவமலர் கொண்டு பாவை செய்து விளையாடியதை 'குரவம் பாவை' என்ற தொடர் தெரிவித்துள்ளது. மணல், மலர், பவழம், முத்து, சிப்பி, பொன் முதலியன பாவை செய்வதற்குப் பயன்பட்டுள்ளன.

பாவை செய்யப்பட்ட பொருள்களும்-பொம்மை செய்யப் பயன்பட்ட பொருள்களும் வேறுபடுகின்றன. இருப்பினும் சிறுமியர் நிகழ்வுகள்-விளையாடும் தன்மை, பொழுது போக்கு-மகிழ்வு ஒத்த தன்மை உடையனவாக உள்ளன.

சிறுவர், சிறுமியர்-இருபாலர் விளையாட்டுக்களில் அதிலும் சிறுமியர் விளையாட்டுக்களில், குழு விளையாட்டுக்களில் பாடல்கள் அதிகம் என்பதை நாட்டுப்புற விளையாட்டுக்கள் மூலம் அறிய முடிகிறது.

## 2.4. தொகுப்புரை

*மண்ணின் மணத்தைக் காட்டும் வகையில் பல விளையாட்டுக்கள் இன்றும் அமைப்பியலில் முழு மாற்றம் கொள்ளாமல் சில மாற்றங்களைக் கொண்டு விளங்கக் காணலாம். இவ்விளையாட்டுக்கள் சிறுவர்களின் கற்பனையாற்றலையும், நடிப்புத் திறனையும், சிந்தனை வளத்தையும் வளர்க்க வல்லன. மரபு வழியாகத் தொடர்ந்து வரும் விளையாட்டுக்கள் தாம் சார்ந்துள்ள மக்களின் பண்பாட்டினைப் புலப்படுத்தும்.*

*இவ்வியலில் விளக்கப்பட்டுள்ள விளையாட்டுக்கள் பொதுவாகச் சிறுவர் சிறுமியர் பொழுது போக்கிற்காக ஆடும் ஆட்டங்களே. ஒரு சில ஆட்டங்களில் போட்டி (வெற்றி, தோல்வி) மனப்பான்மை காணப்படுகிறது. மற்ற ஆட்டங்களில் எல்லோருக்கும் ஆட்டத்திற்கு வாய்ப்புக் கிடைக்கிறது.*

*விளையாட்டு என்பது குழந்தையின் முதல் ஆசிரியர் என்றும், விளையாட்டின் மூலம் சிந்தனை வளர்ச்சியைக் குழந்தைகள் பெறுகின்றன என்றும் கூறுவர்.*[6] *இலக்கியங்களிலுள்ள குழந்தை விளையாட்டு நிகழ்ச்சிகளான அம்புலி அழைத்தல் போன்றவை இக்கருத்தை மெய்ப்பிக்கின்றன எனக் கொள்ளலாம். மேலும் சிறுவர், சிறுமியர் விளையாட்டுக்கள், அவர்களுடைய வாழ்க்கைக்குப் பயன்பட்டுள்ளன என்பது தெளிவு. எவ்வாறெனில் சிறுவர்களின் சிறுதேர், சிறுபறை என்பவை அவர்களின் எதிர்காலப் போர் வாழ்க்கைக்குப் பயன்பட்டவையாகும். சிறுமியர்களின் சிற்றில் செய்தல், சிறுசோறு ஆக்கல், பாவை விளையாட்டு என்பவை அவர்களின் வீட்டு வாழ்க்கைக்கு உதவியவை. எண்ணி விளையாடல், கண்புதைத்து ஒளிந்தாடல் அறிவும், ஆற்றலும் உடையவர்களாய் விளங்க உதவியவை எனக் கொள்ளலாம்.*

*கற்பனை வளத்தைப் பெருக்கும் பொழுதுபோக்கு விளையாட்டுக்கள்; உயர் உள்ளல் பற்றிய சிந்தனையைக் குழந்தை மனத்தில் வித்திட்டு வளர்க்கிறது. ஒப்பிட்டுப் பார்ப்பது-மகிழ்ச்சி கொள்ளுவது; திருத்திக் கொள்ளுவது போன்ற ஆளுமைப் பண்புகளை வளர்த்துக் கொள்ள உதவியது; பொறுமைக் குணம், நம்பிக்கை, தேடிக்கண்டு பிடித்து*

---

6 Mitchell, Elmer, D. and Mason, Bemard, B., **The Theory of Play,** p.267.

வெற்றிபெற வேண்டுமென்ற உறுதியை வளர்ப்பது-மறைவாக உள்ள பொருளை விழிப்புடன் தேடுவதற்கான பயிற்சி கிடைக்கிறது.

ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுக்கும் தன்மையும் தவறு செய்தவரை மன்னிக்கும் தன்மையும் உருவாகிறது. சிறுதேர் விளையாட்டு மூலம் அழகுணர்ச்சி தொழில் துறை அறிவும் ஆற்றலும் பெருகுகிறது. சிறுபறை விளையாட்டு மூலம் கலை உணர்வு, ஆளுமைத் தன்மை, கூடி விளையாடும் தன்மைக்கும் வகை செய்துள்ளது. சிறுவர் சிறுமியர் விளையாட்டுக்கள்-சங்க இலக்கிய-நாட்டுப்புற விளையாட்டுக்களாக வகைப்படுத்தி ஒப்பிட்டும் பார்க்கப்பட்டுள்ளன.

# இயல் 3

# ஆண்கள் விளையாட்டுக்கள்

*3.0.* *முன்னுரை*

*3.1.* *ஆண்கள் விளையாட்டு வகைகள்*

*3.2.* *ஆண்கள் - சங்க இலக்கிய விளையாட்டுக்கள்*

*3.3.* *ஆண்கள் - நாட்டுப்புற விளையாட்டுக்கள்*

*3.4.* *ஆண்கள் சங்க இலக்கிய-நாட்டுப்புற விளையாட்டுக்கள் - ஒப்பீடு*

*3.5.* *தொகுப்புரை*

## இயல் 3

# ஆடவர் விளையாட்டுக்கள்

### 3.0. முன்னுரை

ஆண்கள் விளையாட்டுக்கள் பொதுவாகப் புறவிளையாட்டுக்களாக அமைந்துள்ளன. விளையாட்டுக்களை அதன் தன்மைகளைக் கொண்டு வீர விளையாடல்கள், பொழுதுபோக்கு விளையாடல்கள் என்றும் பகுக்கலாம். ஆண்கள் விளையாட்டு பெரும்பான்மை வீர விளையாட்டுக்களே ஆகும்.

ஆண்கள் விளையாட்டுக்கள் புறவிளையாட்டுக்களாக அமைய அவர்களது உடல் அமைப்பு ஒரு காரணமாக அமைகிறது. வீர விளையாடல்களில் உடலுக்கு வேலை. பொழுதுபோக்கு விளையாடல்களில் அறிவுக்கு வேலை. எனவே இவற்றை இயக்க வகை விளையாடல் என்றும், அறிவு வகை விளையாடல் என்றும் அழைக்கலாம். சில விளையாடல்கள் விழாச் சடங்குகளில் நடைபெறும்.

ஒருவன் தன் இன்பத்திற்காக அவனே விரும்பி மேற்கொள்வது விளையாட்டு. போட்டி என்ற வகையில் விளையாடினால் வெற்றி அல்லது தோல்வி என்பது முடிவாக வரும். தோல்வி என்றால் துன்பம். தோல்விக்குத் துன்புறுவது விளையாட்டில் முறையாகாதெனினும், தோற்றவர் துன்புற்றுள்ளனர். மற்போர் போட்டியின் முடிவில் எதிரியின் உயிரே சென்றுள்ளது. சூது விளையாட்டில் பொருள் இழப்பு, நாடு இழப்பு போன்ற பலவகைத் துன்பங்கள் ஏற்பட்டுள்ளன. இச்செய்திகள் போட்டி விளையாட்டுக்களில் துன்பம் ஏற்பட்டதை உறுதி செய்கின்றன.

### 3.1. ஆண்கள் விளையாட்டு வகைகள்

#### 3.1.1. சங்க இலக்கியம்

1. உடல் உறுப்பு இயக்க விளையாட்டுக்கள்.
2. பொறிபுலன் இயக்க விளையாட்டுக்கள்.
3. அறிவு இயக்க விளையாட்டுக்கள்.

*4. உடல் உறுப்பு, பொறிபுலன், அறிவு மூன்றும் சார்ந்த விளையாட்டுக்கள்.*

*எனச் சங்க இலக்கிய விளையாட்டுக்களை நான்கு வகையாகப் பகுக்கலாம். மேற்குறிப்பிட்ட நான்கு வகைகளிலும் காணப்படும் ஆண்கள் விளையாட்டுக்கள் பின்வருமாறு வகைப்படுத்தப்பட்டுள்ளன.*

**உடல் உறுப்பு இயக்க விளையாட்டுக்கள்**

1. *ஏறுகோள்*
2. *குதிரை ஏற்றமும் - யானை ஏற்றமும்*
3. *மல்*
4. *நீர் விளையாட்டு (இருபாலர்).*

**பொறிபுலன் இயக்கம்**

1. *அம்புலி அழைத்தல் (இருபாலர்)*

**அறிவு இயக்க விளையாட்டுக்கள்**

1. *அசதியாடல் (இருபாலர்)*
2. *சூது (இருபாலர்)*
3. *சாமவிளையாட்டு (சிறுவர்)*

**உடல் உறுப்பு, அறிவு இயக்கம், பொறிபுலன் மூன்றும் சார்ந்த விளையாட்டு**

1. *அம்பு - வில் விளையாட்டு*
2. *வேட்டை*

*இவ்வாறு வகைப்படுத்திச் சங்க இலக்கிய ஆண்கள் விளையாட்டுக்கள் ஆறு வகையில் விரிவாகப் பின்வருமாறு விளக்கப்பட்டுள்ளன.*

## 3.2. ஆண்கள் - சங்க இலக்கிய விளையாட்டுக்கள்

1. *ஏறுகோள்*
2. *குதிரை ஏற்றமும், யானை ஏற்றமும்*
3. *பறவைப்போர், விலங்குப்போர்*

4. மல்
5. வில்
6. வேட்டை

### 3.2.1. ஏறுகோள்

ஏறுகோள் என்பது இளைஞர்கள் ஆர்வமுடன் கலந்து கொண்ட ஒரு வீர விளையாட்டு. இவர்கள் இதில் கூரிய கொம்புகளை உடைய எருதுகளை ஆயுதம் ஏதும் இன்றித் தம் உடல் வலிமையால் அடக்குவர்.



ஆயர்குடிப் பெண்கள், தம் திருமணம் கருதி எருதுகளை வளர்ப்பர் என்றும், இளைஞர்கள் அவற்றை இவ்வீர விளையாட்டில் தம் உயிரையும் பொருட்படுத்தாமல்

*அடர்த்தும், ஊர்ந்தும், அடக்கிப் பெண்களை மணப்பர் என்றும், அவர்களுக்கு இது மகிழ்ச்சி நிறைந்த செயல் என்றும் கலித்தொகையிலுள்ள முல்லைக்கலியில் விரிவாகக் விளக்கப்பட்டுள்ளன. அப்பகுதிகள்,*

கொல்லேறு சாடஇருந்தார்க்கெம் பல்லிருங்
கூந்த லனை கொடுப்பேம் யாம். (கலித் 101: 41-42)

ஓஒ இவள், பொருபுகல் நல்லேறு கொள்பவ ரல்லால்
திருமாமெய் தீண்டல ரென்று கருமமா
எல்லாருங் கேட்ப அறைந்தறைந் தெப்பொழுதுஞ்
சொல்லாற் றரம் பட்டவள். (மேற்படி 102: 9-12)

எழுந்தது துகள்
ஏற்றனர் மார்பு
கவிழ்ந்தன மருப்புக்
கலங்கின பலர்
அவருள், மலர்மலி புகலெழ அலர்மரிர் மணிபுரை நிமிர்தோள்
பிணைகி
யெருத்தோ டிமிலிடைத் தோன்றினன். (மேற்படி 102: 21-26)

*ஏற்றினைத் தழுவ அஞ்சும் ஆடவனை ஆயர்குலப் பெண் இப்பிறப்பில் மட்டும் அல்லாது மறுபிறப்பிலும் மணந்துகொள்ள மாட்டாள் என்பதையும் சங்க இலக்கியக் கலித்தொகைப் பாடல் எடுத்துரைக்கிறது.*

கொல்லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும்
புல்லாளே ஆய மகள். (கலித் 103: 63-64)

*உடல் உறுப்பு இயக்கத்தோடு அறிவு இயக்கமும் சார்ந்த விளையாட்டு. இதன் பயனாக ஆடவனின் வீரம், மனஉறுதி தெரிய வருகிறது. சூளுரைத்து வெற்றி பெறுவதுடன் மனம்போல வாழ்க்கையை அமைத்துக் கொண்டு, பலரும் பாராட்டத் திறமையை வெளிப்படுத்துவதும் விளையாட்டாகும். அரங்கு அமைத்துக் கொண்டு விளையாடும் திட்டமிட்ட விளையாட்டாகும்.*

*தொடர்ந்து காப்பியங்களில் குறிப்பாகச் சிலப்பதிகாரத்தில் இவ்விளையாட்டு குறிக்கப்பட்டுள்ளது.*

தூநிற வெள்ளை அடர்த்தாற் குரியளிப்

பூவைப் புதுமல ராள்,

ஆங்கு,

தொழுவிடை ஏறு குறித்து வளர்த்தார்

எழுவரிளங் கோதை யார் (சிலம்பு - ஆய்ச்சியர் குரவை)

*இக்காலத்தில் சல்லிக்கட்டு, மஞ்சுவிரட்டு, எருத்துக்கட்டு, மாட்டு வேடிக்கை என்ற பெயர்களில் சிற்சில வேறுபாடுகளுடன் நிகழ்ந்து வருகின்றன.*

### 3.2.2. குதிரை ஏற்றமும் யானை ஏற்றமும்

*அரசர், வீரர் முதலியோர் குதிரை, தேர், யானை போன்றவற்றைச் செலுத்துவதும், அவற்றில் ஊர்ந்து போர்ப் பயிற்சி செய்வதும் உண்டு. இவை அவர்களுக்குரிய தொழில்கள், விளையாட்டுக்கள் அல்ல. ஆனால், இவற்றில் அவர்கள் பொழுதுபோக்காக ஊர்ந்து செல்வதும் உண்டு; விளையாடுவதும் உண்டு. திட்டமிட்டும், திட்டமிடாமலும், தனியாகவும், கூட்டமாகவும் நிகழ்ந்த உடல் உறுப்பு இயக்க விளையாட்டாகும். இவை குறித்த செய்திகளைச் சங்க இலக்கியங்கள் குறிப்பிட்டுள்ளன. அப்பகுதி:*

மாஅல் யானையொடு மறவர் ஆடி (கவித் 5:2)

ஏற்றுக்கோட்டு எழில்யானை ஏறி (மேற்படி 7:10)

குதிரை மழவ ரோட்டிய (அகம்.1:2)

விடுவிசைக் குதிரை விலங்குபரி முடுக (மேற்படி. 14:18)

செருஉறு குதிரையின் பொங்கி (குறுந்.385:3)

*யானை, குதிரை, இரதம் என்பனவற்றில் சிலர் ஏறி அயோத்தியில் பொழுது போக்கிய செய்தியைக் கம்பராமாயணத்திலுள்ள பகுதி குறிப்பிடுகிறது. அப்பகுதி:*

முழங்குதிண் கடகரி மொய்ம்பின் ஊரவும்

எழும்குரத்து இவுளியொடு இரதம் ஏறவும்

. . . பொழுதுபோம் சிலர்க்குஅம் மாநகர் (பால: நகர: 66)

மதங்கொண்ட யானையை அடக்கியும் ஊர்ந்துள்ளனர். "மையல்வேழ மடக்கிய" இந்த நிகழ்ச்சியைப் பெருங்கதை 'ஆனைஏற்றம்' என்று குறிப்பிட்டுள்ளது (39: இலாவண: யூகி 69-76).

விளையாட்டுப் போட்டிகளில் ஒன்றாகக் கருதி உலக அளவில் குதிரை ஏற்றம் இக்காலத்தில் ஊக்கப்படுத்தப்பட்டு வருகிறது.

### 3.2.3. பறவைப்போர் - விலங்குப்போர் காணல்

குறும்பூழ், கோழி போன்ற பறவைகளை அவ்வப்பறவைகளிடையேயும், தகர், யானை போன்ற விலங்குகளை அவ்வவ் விலங்குகளிடையேயும் சண்டையிட வைத்துப் பார்த்து மக்கள் மகிழ்ந்துள்ளனர். அவற்றின் சண்டையை விலக்கியும் ஆரவாரித்துள்ளனர். இவற்றைப் பகலில் மேற்கொண்டுள்ளனர்.

குறும்பூழ்ப் பறவைகள் ஒன்றுடன் மற்றொன்று காரணமின்றியும் பார்த்துச் சீறிக் கொள்பவை. இவற்றிடையே நடைபெறும் போரை மாந்தர் கண்டு மிகப்பெரிய ஆரவாரம் செய்துள்ளனர்.

கோழிகள் தம் உயிர் போகுமளவும் சண்டை செய்யக் கூடியவை. இவற்றின் கால்களின் முள் 'வைரமுள்' எனப்படும் ஒரு குறிப்பிட்ட பிரிவைச் சேர்ந்த கோழியை அதே பிரிவைச் சேர்ந்த கோழியுடன் சண்டை செய்ய பொருத்தியுள்ளனர். இது 'மரபிற்பொருத்தல்' எனப்படும். இதனைப் பெருங்கதை 'மறப்போர்க் கோழி மரபிற்பொருத்தும்' என்று தெரிவித்துள்ளது (மகத:புறத்:19). பறவைப் போரைப் பார்த்துச் சீழ்க்கை அடித்து ஆரவாரித்துள்ளனர்.

தீயெழும்படித் தலைகளால் தகர்கள் ஒன்றுடன் ஒன்று முட்டித் தாக்கிக் கொள்ளும். பொழுதுபோக்காக இவ்விளையாட்டு அமைந்துள்ளது. இதில் வரும் ஆரவாரம் தவிர மக்களிடையே ஆரவாரம் - சண்டை இல்லை.

இந்திரசித்து, தன் சிறுவயதிலேயே இரு சிங்கங்களைப் பிடித்துக் கொண்டு வந்து, அவற்றிடையே கோபமூட்டிச் சண்டையிட வைத்து விளையாடியதாகக் கம்பராமாயணம் கூறியுள்ளது (யுத்த: இராவணன், 49).

### 3.2.4. மல்

கருவிகளின் துணையில்லாமல் தமது உடல் வலிமையால் இருவர் தமக்குள் சண்டையிடும் ஒருவகை வீர விளையாட்டு. போர் முறை என்றும் கூறலாம். பலர் முன்னிலையில் நிகழுவது திட்டமிட்டது. சிறப்பாக ஆடுவோருக்குப் பரிசில், பட்டங்கள் வழங்கப்பட்டுள்ளது. ஆட்டத்தில் தவறு நேராமல் பார்த்துக் கொள்ள நடுவர் நியமிக்கப்பட்டிருந்தனர். வெற்றி பெற வேண்டுமென்று குறிக்கோள் இருந்ததே தவிர போட்டி, பொறாமை, உணர்ச்சிக்கு இடந்தராமல் பார்த்துக் கொள்ளப்பட்டது. பொழுது போக்காகவும், மகிழ்ச்சியை வெளிப்படுத்துவதாகவும் அமைந்தது. இவ்விளையாட்டில் போட்டியிட்டு வெற்றி பெறவேண்டும் என்பதற்காக நல்ல ஊட்ட உணவு உட்கொண்டிருப்பது தெரியவருகிறது. விளையாடுவதற்கேற்ற அரங்கு அமைக்கப்பட்டு விளையாடப்பட்டது. இது உடல், உறுப்பு இயக்க விளையாட்டாகும். இச்செய்திகளை, "மல்ஆர் அகலம் வடு அஞ்சி" எனப் பரிபாடலும் (12:72), "மல்லடு மார்பின் வலியுற வருந்தி" என அகநானூறும் (386-4) எடுத்துரைக்கின்றன.

தொடர்ந்து மற்போரின் தொடக்கத்தை மற்பறை ஒலித்து அறிவிக்க - அரசர், வீரர், பெண்டிர் அனைவரும் காண - மகிழ்ந்து குழுமிய செய்தியை,

அஞ்சாயலாரும், மற்பக மலர்ந்த திண்டோள்
மைந்தரு மகிழ்ச்சி கூர்ந்து
அற்பகந் தழைய நோக்கி ஆடமரரங்கு மொய்த்தார்

என்ற பெருங்கதைப் (3115-3117) பகுதியால் அறியலாம்.

இரு யானைகள் கலந்து பொருவது போல் மல் நிகழ்ந்துள்ளது. இதனை, 'அளையும் யானைபோற் பாய்ந்து மல்லொற்றியும்' என்ற சிலம்பு வரி (மதுரை: 16:73) புலப்படுத்துகிறது. இக்காலத்தில் இவ்விளையாட்டு உலக அளவில் பெயர் பெற்று விளங்குகிறது. இவ்விளையாட்டை உடல் உறுப்பு விளையாட்டு எனக் கூறலாம்.

### 3.2.1.5. வில் விளையாட்டு

வில்லில் அம்பை வைத்துக் குறி பார்த்து எய்துவிளையாடல். கற்றுத்தரக் கைதேர்ந்த ஆசிரியர்கள் இருந்துள்ளனர். விளையாட்டுத் தொடக்கத்தில் விழா நடத்துவது. ஆசிரியருக்கு மரியாதை செய்வது. சிலவகை அடையாளங்களை உருவாக்கி அவற்றின் மீது அம்பெய்தல், போட்டிப் போட்டு விளையாடுதல். பரிசு பெறுதல், இலட்சியத்தில் வெற்றி பெறுதல், பொழுதுபோக்குதல் வீரத்தை நிலைநாட்டிக் கொள்ளவுமாக இவ்விளையாட்டு திட்டமிட்டு பயன்படுத்தப்பட்டது. உடல் உறுப்பு, பொறிபுலன், அறிவு இயக்கம் என மூன்றும் சேர்ந்த விளையாட்டு. இவ்விளையாட்டுக் குறித்த செய்திகளைச் சங்க இலக்கியப் பாடல் வரிகள் விளக்குகின்றன. அப்பகுதிகள்:

1.தடக் கையின்
வண்ண வரிவில் லேந்தி யம்புதெரிந்து.
(குறிஞ்சி 123-124)

2.வில்விசை உமிழ்ந்த வைம்முள் அம்பின்
செவ்வாய் எ॰.கம் வளைஇய. (பதிற்று 33:8-9)

3.புற்று அடங்கு அரவின் ஒடுங்கிய அம்பின்
ஒசிபுடை வில்லின் ஆடி. (மேற்படி 45: 2-3)

4.வில்லுச் சொரி பகழி ஆடி (பரி 18:40)

5.அரம்போழ் நுதிய வாளி அம்பின்
நிரம்ப செறித்து நோக்கி எறிய. (அகம் 67:5-6)

6.அம்புடைக் கையர் (மேற்படி 69:16)
7.உருவ வல்வில் பற்றி அம்பு தெரிந்து (மேற்படி 82:11)

8.வன்க ணாடவர்
அம்புவிட வீழ்ந்தோர். (புறம் 3: 20-21)

9.கூர்நல் லம்பிற் கொடுவிற் கூளியர் (மேற்படி 23:5)

10. ஊக நுண்கோற் செறித்த வம்பின்

வலாஅர் வலவிற் தொடுத்து. (மேற்படி 260:24-25)

*காப்பியங்கள், புராணங்களில் விரிவாக இடம்பெற்றுள்ளது. நகர இளைஞர் சிலருக்குப் பொழுதுபோக்கு விளையாட்டாக அம்பு - வில் விளையாட்டு இருந்ததை 'வரி சிலை முதலிய வழங்கி பொழுதுபோம் சிலர்க்கு அச்சேண் நகர்' என்பது கம்ப ராமாயணம் (பாலகாண்டம் நகர:67) அம்பு எறிய இலக்காகப் பயன்படுத்திய அடையாளத்திற்குச் 'சித்திர இலக்கம்' எனக் கம்பர் சுந்தரக் காண்டத்தில் குறிப்பிடுவார். (கம்பராமாயணம் - சுந்தர காண்டம் - நிந்தனைப்படலம் : 448) வில் பழக விழா எடுத்த செய்தி பெரியபுராணத்தில் சுட்டப்படுகிறது. உலக அளவிலான போட்டி விளையாட்டாக இக்காலத்தில் வளர்ந்துள்ளது (கண்ணப்ப: 31 & 36).*

## 3.2.1.6. வேட்டை

*'வேட்டை' என்ற சொல் விலங்குகளை வீழ்த்துவதைப் பொதுவாகக் குறிக்கும். தவிர, காட்டு விலங்குகளை அடக்கிப் பிடிக்கும் செயலைக் குறிப்பிடவும் இச்சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. திட்டமிட்ட விளையாட்டு; வெற்றி விளையாட்டு; வீரத்தை வெளிப்படுத்தும் விளையாட்டு; மகிழ்வான விளையாட்டு. இதனை ஒரு தொழிலாகவும், பொழுதுபோக்காகவும் கருதியுள்ளனர். மன்னர்களும், வீரர்களும் மேற்கொண்டனர். கூட்டமாகச் செல்வதை விரும்பினர். வேட்டைக்குச் செல்லுமுன் அதற்குரிய வகையில் பல ஏற்பாடுகளைச் செய்ய வேண்டியிருந்தது. வில், அம்பு இவற்றோடு நாய்களையும் வேட்டைக்குப் பயன்படுத்தினர். பகல்பொழுது - குறிப்பாகக் காட்டுப்பகுதியில் இடம்பெறும் விளையாட்டு. இச்செய்திகளைச் சங்க இலக்கியங்கள் புலப்படுத்தும் பகுதிகள்.*

1.வல்வில் வேட்டம் வலம்படுத் திருந்தோன்

(புறம் 152-6)

2.அரியல்அம் புகவின் அம்தோட்டு வேட்டை

(குறுந் 258-5)

3.வேட்டச் செந்நாய் கிளைத்தூண் மிச்சில்

(மேற்படி 56-1)

4.வயமான்

வேட்டம் பொறித்து வியன்கட் கானத்து. (நெடுநல் 128-129)

5.வேட்டுவரில்லை நின்னொப் போரெ்ன (புறம் 152-24)

6.எல்லு முயல் எறிந்த வேட்டுவன் (நற் 59-3)

7.கொலைவல் வேட்டுவன் வலை பரிந்து போகிய

(மேற்படி 189-7)

*உடல் உறுப்பு, பொறிபுலன், அறிவு ஆக மூவகை இயக்கங்களும் சார்ந்தது. குறிக்கோளில் வெற்றி பெறுவது - கூட்டமாகச் செயல்படுவது மனித ஆற்றலை வெளிப்படுத்துவது என்ற பயன்களை உடைய இவ்விளையாட்டுத் தொடர்ந்து காப்பியங்களிலும், சிற்றிலக்கியங்களிலும் காண முடிகிறது. வேட்டைக்குச் சென்ற திண்ணன் கண்ணப்பனாக மாறிய வரலாறு பற்றிப் பெரியபுராணம் குறிப்பிடுகிறது. கம்பராமாயணத்தில் குகனின் வேட்டை விளையாட்டு இடம் பெற்றுள்ளது. யானையை அடக்கிப் பிடித்ததைக் 'குஞ்சரவேட்டம்' எனப் பெருங்கதை குறிப்பிட்டுள்ளது (இலாவண: யூகிசாக்காடு: 37). வேட்டையாடுதல் இக்காலத்தில் பொழுதுபோக்காகவும் மகிழ்ச்சிக் குரியதாகவும் அமைந்துள்ளது.*

### 3.3. ஆண்கள் - நாட்டுப்புற விளையாட்டுக்கள்

**உடல் திறன் விளையாட்டுக்கள்**

*மற்போர், ஏறுதழுவல், நீர் விளையாட்டு, கழுமரம் ஏறல், கவைக்குச்சி போன்ற விளையாட்டுக்கள் அடங்கும்.*

**அறிவுத்திறன் விளையாட்டுக்கள்**

*விற்போர், சிலம்பாட்டம், ஆடுபுலி ஆட்டம், சொக்கட்டான் இவற்றைக் குறிக்கலாம்.*

**உடல்திறன், அறிவுத்திறன் இணைந்த விளையாட்டுக்கள்**

*சிலம்பாட்டம், சடுகுடு, உறியடி, கழுவாய் ஆட்டம் இவை அடங்கும்.*

*வகைப்படுத்திக் கூறிய விளையாட்டுக்கள் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன.*

1. விற்போர்
2. மற்போர்
3. சேவல் போர்
4. ஆட்டுக்கிடாய் சண்டை
5. ஏறுதழுவல்
6. சொக்கட்டான் (அ) சூது
7. நீர் விளையாட்டு

### 3.3.1. விற்போர்

மனிதர்கள் தங்கள் தேவைக்கேற்ற பொருட்களைப் பெற காடு மற்றும் மலைப்பகுதிகளுக்குச் செல்ல வேண்டிய கட்டாயம் இருந்தது. காட்டுப் பகுதிகளுக்குச் செல்லும்போது அங்குள்ள விலங்குகளிடமிருந்து தற்காத்துக் கொள்ள வில் முதலிய ஆயுதங்களைப் பயன்படுத்தினர். அதுவே பின்னாளில் போட்டியாக வளர்ந்து விளையாட்டாக மலர்ந்தது. இவ்விளையாட்டால் கூர்ந்து நோக்கும் திறன், குறிபார்த்து அடிக்கும் ஆற்றல், நுட்ப அறிவு ஆகியன வளர்கின்றன.

தானியங்களைத் தின்னும் பறவைகளை விரட்டக் 'கவண்கல் வீசல்' என்ற ஒரு செயலும் உண்டு. இன்றும் சிறுவர்கள் கிராமங்களில் இதைக் 'கில்டாபில்ட்' என்று கூறுவர். கவட்டை போன்ற குச்சியில் ரப்பர் துண்டைக் கட்டி அதில் சிறுகல் ஒன்றை வைத்து இழுத்து அடித்து விளையாடுகின்றனர். அரச குடும்பத்தினர் பின்பற்றிய விற்போர் முதலியன அருகி 'கில்டாபில்ட்' என்ற விளையாட்டினைத் தற்போது மேற்கொள்கின்றனர்.

### 3.3.2. மற்போர்

இது ஒரு தொன்மையான விளையாட்டு. உண்மையாகவே உள்ளத்தில் சினமோ, பகையோ இல்லாமல் வெற்றி தோல்விக்காக ஆடும் விளையாட்டு. இதற்குப் பயிற்சி தேவை.

‘மல்’ என்றால் வலிமை என்று பொருள். தம் வலிமையை வெளிப்படுத்தப் போரிடுவதே இவ்விளையாட்டு. இதற்கென்று பழகியவர்களே இவ்விளையாட்டில் ஈடுபடுவர்.

‘ஒத்தைக்கு ஒத்தை’, ‘ஒண்டிக்கு ஒண்டி வா’ என்றும், ‘மல்லுக்குக் கூப்பிடுகிறான்’, ‘மல்லுக்கட்றான்’, ‘வந்த வம்பை விடமாட்டேன் வலுவிக்குப் போகமாட்டேன்’ என்றெல்லாம் கொச்சையான சொற்கள் மூலம் இவ்விளையாட்டு, கிராமப்புறங்களில் இன்றும் நடைமுறையில் உள்ளது என அறியலாம்.

### 3.3.3. சேவல் போர்

மனிதனின் வெறி கொண்ட ஆவலினால் சில இடங்களில் சேவல் போர் நடத்தப்படுகிறது. போர்க் கோழிகளைத் தனியாகத் தேர்ந்தெடுத்து குறிப்பிட்ட இரை கொடுத்துக் கட்டுப்பாட்டுடன் வளர்க்கின்றனர். கோழியின் நிறத்தையும், போர் நடக்கும் நேரத்தையும் குறிப்பாகக் கொண்டு நாளும், கோளும் பார்த்துச் சேவலைச் சண்டையிடுவதற்காக வெளியேற்றிக் களத்தில் விடுகின்றனர். சேவலின் கால்களில் கூர்மையான கத்தியைக் கட்டியிருப்பார்கள். இரண்டு சேவல்களும் வெறிகொண்டு கழுத்திலுள்ள முடிகளைச் சிலிர்த்தவாறு ஒன்றை ஒன்று எதிர்த்து வேகமாகத் தாக்கும். காலிலுள்ள கத்தி ஏதாவதொரு பாகத்தைக் கீறியதும் அது பின் வலித்து ஓடும். உடனே அதன் காலை முறித்து வெற்றி பெற்ற கோழியின் உரிமையாளரிடம் கொடுத்து விடுவர்.

இத்தகைய சேவல் போரை மக்கள் சூழ்ந்து நின்று வேடிக்கைப் பார்ப்பர். சில சமயம் வெற்றி தோல்வி இன்றி வெகுநேரம் இரண்டு சேவல்களும் சண்டையிடும்.

இதைப் பார்க்க மக்கள் சலித்து விடுவர். உடனே சமாதானம் என்று கூறி உரியவர்களிடம் கொடுத்து விடுவர். அடுத்து இரண்டு சேவல்கள் களத்தில் ஏவப்படும். பல சமயம் சேவல் போர் மனிதர்களிடம் சண்டையில் போய் முடிந்து விடுவதும் உண்டு. பந்தயம் கட்டிக் கொண்டு சேவல்களைக் களத்தில் இறக்கி விடுவர். சண்டையில் முடிவதால் இவ்விளையாட்டு சில இடங்களில் மட்டுமே நடைபெற்று வருகிறது. குறிப்பாகத் தஞ்சை மாவட்டத்தில் பொங்கல் விழாக் காலத்தில் இன்றும் நடைபெற்று

வருகிறது. ரெட்டிப்பாளையத்தில் ஒருவார காலம் நடக்கும் தமிழர் திருநாளாம் பொங்கல் முடிந்த பின் மனமகிழ்வுக்கு இவ்வீரவிளையாட்டு ஒரு விருந்து எனக் குறிக்கலாம்.

### 3.3.4. ஆட்டுக் கடாயப் சண்டை

*கிராமப்புறங்களில் ஆட்டுக்கடாவைச் சண்டையிடச் செய்து கைகொட்டி ஆர்ப்பரிப்போடு கண்டுகளித்து வருகின்றனர். போர்க் கடாக்களைக் கவனித்து வளர்ப்பர்.*

*ஆட்டுக்கடாய்ச் சண்டைக்குரிய ஆட்டைத் தேர்ந்தெடுத்து உரிய இரை, மற்றும் பயிற்சியோடு வளர்த்து வருவார்கள் சண்டைக்குரிய ஆட்டின் தலைப்பகுதியில் அமைந்துள்ள இரண்டு கொம்புகளையும் சண்டைக்கு ஏற்றவாறு சுருட்டி விடுவார்கள். குளிப்பாட்டிப் பொட்டு வைத்து நல்ல பயிற்சி அளித்து வருவார்கள். சண்டைக்கு என வளர்க்கப்படும் ஆட்டுக் கடாவை முட்டுவதற்கு ஏற்றவகையில் தன்கையால் இரண்டு கொம்புகளையும் பிடித்துப் பின்நோக்கி தள்ளிவிட்டால், அது முன் நோக்கி வந்து பாயும். மீண்டும் பின்நோக்கிச் சென்று பாய்ந்து வந்து வேகமாக மோதும். அவற்றின் கொம்புகள் பயங்கரமான ஒலியுடன் மோதும்.*

*மோதுவதற்கு (முட்டுவதற்கு) ஏதுவாக மண்வெட்டியினை எதிரே பிடிப்பார்கள் மோதி, மோதிப் பயிற்சி பெறும் ஆடு போட்டியில் வெற்றி பெறும். இயல்பாகவே ஆட்டினைப் பின்நோக்கித் தள்ளினால் முன்னோக்கிப் பாயும். கிராமப்புறத்தில் "வளர்த்தகடா மார்பில் பாய்வது போல்" என்ற பழமொழியை இன்றும் கேட்க முடிகிறது.*

*சங்க இலக்கியங்களிலும் மக்கள் பொழுதுபோக்கிற்குத் "தகர்ப்போர்" என்று ஆட்டுக்கடாவை மோதவிட்டு மகிழ்வர் என்ற செய்தி உள்ளது. மக்களின் போட்டி உணர்வோடு கூடிய பொழுதுபோக்கு உணர்வே இத்தகைய களிப்பு ஆடல்களுக்குக் காரணம் என்று கூறலாம்.*

### 3.3.5. ஏறுதழுவல் அல்லது மஞ்சுவிரட்டு (அ) சல்லிக்கட்டு

சங்க இலக்கியம் 'ஏறுதழுவல்' என்று கூறப்படும் வீரவிளையாட்டை முல்லைத் திணைக்குரியது என்று கூறுகிறது. இருப்பினும் அனைத்து நில மக்களும் தங்கள் வாழ்க்கைக்கேற்ப, பருவநிலைக் கேற்ப ஏறுதழுவலை நடைமுறைப்படுத்தியுள்ளனர்.

ஒரு குடும்பத்தில் பெண் மகவு பிறந்தால், ஆண்கன்று ஒன்றினைத் தம் மூட்டாய் பால் குடிக்கச் செய்து வளர்த்து, அது வளர்ந்து காளையாக மாறிவிட்டதும், அதை அடக்குபவருக்கு இப்பெண்ணை மணம் முடித்துத் தருவோம் என்று கூறுவர்.

ஆண்மகன் தான் விரும்பிய பெண்ணை அடைய துணிவோடு அக்காளையை அடக்கி அப்பெண்ணை அடைவான். இது சங்க இலக்கிய விளையாட்டு என்று கூறப்பட்டாலும், மக்கள் வாழ்வியல் உண்மைகளின் உரசலே இலக்கியங்கள் என்பதை யாரும் மறுப்பதற்கில்லை.

இன்றும் மேற்குறித்த விளையாட்டு, பொங்கல் திருநாள் முடிந்த மூன்றாம் நாள் 'மஞ்சுவிரட்டு' அல்லது 'சல்லிக்கட்டு' என்ற பெயர்களோடு விழாபோல் சிறப்பாக நடத்தப்பெறுகிறது. குறிப்பாக நாட்டுப்புற மக்கள் இவ்விளையாட்டை வீரவிளையாட்டாக மேற்கொள்வர். காளையின் கொம்பில் தங்கச்சங்கிலி அல்லது பணமுடிப்பு வைத்துப் போட்டி விளையாட்டாக, இவ்விளையாட்டை மேற்கொள்வது நடைமுறையில் உள்ளது. இவ்விளையாட்டின் அடித்தளம் "காதலோடு கூடிய வீரம்" என்று கூறலாம்.

நாட்டுப்புற மக்களின் வாழ்வோடு இவ்விளையாட்டு நீக்கமற இணைந்துள்ளது என்பது மிகையன்று. ஆர்வம், ஆளுமை, முயற்சி, துணிவு எதையும் அடைந்தே தீர்வது என்ற தன்னம்பிக்கை, அனைத்துக் குணங்களின் தோற்றமாகவும் மக்கள் வாழ்வோடு ஒன்றி நாட்டுப்புற மக்களை மகிழ்வித்துக் கொண்டிருக்கிறது.

'சல்லிக்கட்டு' என்ற வார்த்தையில் 'சல்லி' நாணயம் என்ற பொருளில் வழங்கப்படுகிறது. நாணயங்களை முடிப்பாகக் கொம்பில் கட்டி வெற்றி அடைந்தவர். அதற்குரியவர் என்பதால் இவ்விளையாட்டு 'சல்லிக்கட்டு' என்று அழைக்கப்படுகிறது.

காளையின் திமிலை அழுத்திக் கைகளால் கொம்பை வளைத்து அடக்குவர். காளை அடங்காமல் வீரர்களைக் குத்தித் தூக்கியெறிவதும் உண்டு. அடக்குபவரைவிட வேடிக்கைப் பார்ப்பவர்கள் காயம்படுவது அதிகம். இருப்பினும் இவ்விளையாட்டு, சிறப்பாக நடைபெற்று வருகிறது.

### 3.3.6. சொக்கட்டான் ஆடல் (அ) சூது

இதுவும் மிகப்பழமையான விளையாட்டாகும். சகுனியும், தருமனும், விதுரன் சொல்லை மீறிச் சூதாடும் நிகழ்ச்சியை மகாபாரதம் காட்டுகிறது. கிராமப்புறங்களில் முதியவர்கள் ஓய்வுநேரங்களில் தாயம் விளையாடுகின்றனர். சொக்கட்டான், பகடை, தாயம் அனைத்தும் ஒரே விளையாட்டையே குறிக்கின்றது. 'தாயம்' என்ற சொல் அது விளையாடும் ஆட்டக்காயைக் குறிப்பிடுகின்றது.

ஆண்கள் விளையாடும் ஆட்டம் வட்டு என்றும் சூது என்றும் அழைக்கப் பெறுகிறது. பெரும்பாலும் ஓய்வுநேரத்தில் பொழுதுபோக்கிற்காக இருபாலரும் விரும்பி ஆடும் விளையாட்டு தாயம் எனப்படும்.

'சூது' என்ற சொல் 'உபாயம்' என்று குறிக்கப்படுகின்றது. "களவுக்கடனாகச் சூழ்ந்திடுதல்" (சீவக. 2870) தந்திரம் என்றும் குறிக்கப்படுகின்றது.

வள்ளுவர் 'சூது' என்ற அதிகாரத்தை வகுத்துள்ளார். சூதாடுபவர்கள் பண்பில்லாதவர்களாகவும், பொய் சொல்பவர்களாகவும் என்றென்றும் வறுமையாளராகவும் காணப்படுவர் என்கிறார். வெற்றி தருவதாக இருந்தால் கூடச் சூதினை விரும்பாதே என்று சூதின் தன்மையைப் பற்றிப் பத்துப் பாடல்களில் விளக்கம் காணப்படுகின்றது.

*சீட்டாட்டத்தைச் 'சூதாட்டம்' என்றும் இக்காலத்தில் அழைப்பது வழக்கம்.*

**3.3.7. நீர் விளையாட்டு**

*கோவில் திருவிழாச் சமயங்களில் முறைப்பெண் ஆண்மீதும் ஆண்கள் பெண்கள் மீதும் மஞ்சள் நீர் தெளித்து விளையாடுவது வழக்கம்.*

*அடுத்துக் கிராமத்தில் வயல் வெளியில் செல்லும் ஆண்கள் மதகுகளில் ஏறிக் குதித்து நீந்தி விளையாடுவதும் உண்டு. ஆற்றில் நீந்தி விளையாடுவது நீருக்குள் மூழ்கித் தலை தெரியாமல் நீண்ட தூரம் சென்று பின் தலையை வெளியே நீட்டல், பலர் சேர்ந்து நீருள் மூழ்கி விளையாடல் போன்றவைகளில் நீர் விளையாட்டும் ஒன்று.*

*நீந்துதலால் கை, கால், பயிற்சி பெறுகிறது. மூச்சு அடக்கும் பயிற்சி கிடைக்கிறது.*

*பல வண்ணக்கலவை கலந்த நீரை ஊற்றிக் கொண்டாடும் 'ஹோலிப் பண்டிகை' தற்பொழுது வடஇந்தியாவில் வழக்கில் உள்ளது.*

மேற்குறித்த நாட்டுப்புற விளையாட்டுக்கள் சங்க இலக்கிய விளையாட்டுகளோடு ஏழு விளையாட்டுக்கள் ஒத்து விளங்குகின்றன. இலக்கியங்களில் குறிக்கப் பெறாத ஆண்களின் நாட்டுப்புற விளையாட்டுக்கள் *சிலவற்றையும் சான்றாகக் காணலாம். அவையாவன,*

*1. சிலம்பாட்டம், 2. வண்டிப்பந்தயம், 3. சடுகுடு (அல்லது) கபடி, 4. உறியடி விளையாட்டு, 5. கவைக்குச்சி விளையாட்டு, 6. ஆடுபுலி ஆட்டம், 7. புலி ஆட்டம், 8. கடுவன் ஆட்டம், 9. கழுமரம் ஏறல்.*

**சிலம்பாட்டம்**

*ஆயுதங்களைக் கொண்டும் பலவிதமான வீரப்போட்டிகள் நடந்துள்ளன. கம்பு, வாள், ஈட்டி, கத்தி, கதை ஆகியவற்றைக் கொண்டு வீரவிளையாட்டுக்கள் நடத்துவதை இன்றும் பல இடங்களில் காணலாம். வீர முறுக்குடையவர்களே இத்தகைய வீர விளையாடல்களை விரும்பிக் காண்பர். தமிழர்களுடைய நாட்டுப்புறக் கலைகளுள் மிகச் சிறப்பாக விளங்கும் 'சிலம்பம்' ஒரு முக்கிய வீரவிளையாட்டாகக் காணப்படுகிறது. சிலம்பக்கலை தமிழ் மக்களின் வீரமுனைப்பைச் செவ்வனே விளக்கிக் காட்டுகிறது.*

போராடும் உணர்ச்சியில் தோன்றி போராடும் முறையில் வளர்த்து ஒழுங்கு முறைகளால் சீர்ப்பட்டுக் கலைத் தன்மைகளில் வளம்பெற்று வளர்ந்த கலையாகச் சிலம்பாட்டம் விளங்குகிறது. இது தற்காப்பு விளையாட்டாகவும், தாக்குதல் போராகவும் உள்ளது. இன்றைய நிலையில் சிலம்பாட்டம் உடற்பயிற்சி, தற்காப்பு, போராட்டம் ஆகிய முக்கிய நோக்கங்களைக் கொண்டு விளங்குகிறது.

**சடுகுடு அல்லது கபடி**

பழந்தமிழரிடையே நிரை கவர்வதும், கவர்ந்த நிரைகளை மீட்பதும் ஆகிய செயல்கள் இருந்தன. இதன் அடிப்படையில் போரும் எழுந்தது. போரில் தங்கள் பக்கம் வெற்றி கிட்டவேண்டுமென்று இருதரப்பினருமே காளியை வணங்கினர். இச்சமயம் சடுகுடுப்பை அல்லது குடுகுடுப்பை என்ற பறையால் ஒலி எழுப்பிப் பலி கொடுத்து வழிபட்டிருந்திருப்பர். போரின் செயல்பாடு விளையாட்டிலும் இருப்பதால் பலிஞ்சடுகுடு என மாறி மருவி வந்திருக்கலாம் என்பார் எஸ். நவராஜ் செல்லையா.[1]

கிராமப்புற மந்தையிலும், ஆற்றுமணலிலும், பகலிலும், இரவிலும் இவ்விளையாட்டை விளையாடுவர். நடுக்கோடு போட்டு இரண்டு பக்கத்திலும் பிரிந்து நிற்பர். ஒருவர் பாடிக்கொண்டே மற்றொருவர் பிரிவிற்குச் சென்று மற்றவர்களைத் தொட்டுவிட்டு மீண்டும் நடுக்கோட்டை அடைந்துவிட்டால் தொட்டவர்கள் ஆட்டத்திலிருந்து வெளியேறி விடுவர். விளையாட்டின் போது பாடிக்கொண்டே மூச்சுவிடாமல் சென்று திரும்ப வேண்டும். இவ்விளையாட்டில் மூச்சினை அடக்குவதற்கான பயிற்சி கிடைக்கிறது. தமிழக நாட்டுப்புறங்களில் இவ்விளையாட்டுத் தேசிய விளையாட்டு போன்று கருதி ஆடப்பட்டு வருகின்றது. உற்சாகத்தோடு விளையாடும் விளையாட்டு, முரட்டு விளையாட்டு என்று இவ்விளையாட்டின் தன்மையை விளக்கலாம்.

**எ.கா.**

பலிஞ்சடுகுடு அடிப்பானேன்
பல்லுரெண்டும் போவானேன்

---

1 எஸ்.நவராஜ் செல்லையா, விளையாட்டுக்களுக்குப் பெயர் வந்தது எப்படி?, 1978, ப.60.

உங்கப்பனுக்கும் உங்காயிக்கும்

ரெண்டு பணம் தண்டம்

தண்டம் தண்டம்.

**உறியடி விளையாட்டு**

இரண்டு மூங்கில் கம்புகள் நட்டு நடுவில் கயிற்றில் ஒரு பானையைக் கட்டி தொங்க விட்டிருப்பர். கண்ணைக் கட்டிக் கொண்டு கம்பால் பானையை உடைக்க வேண்டும். இது ஒரு பொழுதுபோக்கு விளையாட்டு. திருவிழாக் காலங்களில் கிராமங்களில் நடத்தப்பெறும் இவ்விளையாட்டைக் கிருஷ்ணனுடன் இணைத்துப் பேசுவதுண்டு.



**கவைக்குச்சி விளையாட்டு**

இவ்விளையாட்டுப் பொதுவாக மாலை நேரங்களில்தான் அதிகமாக விளையாடப்படுகிறது. ஒரு குழு விளையாட்டாய் அமைவதால் பகைமை உணர்வு மறைகிறது.

விளையாட்டு முழுவதும் ஓட்டமே முக்கியமானதாக அமைவதால் மிகச் சிறந்த உடற்பயிற்சியாகவும் அமைகிறது. விளையாட்டில் இறுதி மூச்சடக்கிப் பாடி வருதல் என்பதால் உடல் ஆரோக்கியம் வலுவடைகிறது. இவ்வகையான விளையாட்டினால் உடல் உறுதியும், உள்ள உறுதியும் இயல்பாக வந்தடைகின்றன.

**ஆடு புலி ஆட்டம் அல்லது பதினஞ்சாம்புலி**

மூன்று புலிகளும் பதினைந்து ஆடுகளும் இவ்விளையாட்டில் இடம் பெறுகின்றன. புலியைக் கட்டுப்படுத்துவதே இவ்விளையாட்டின் நோக்கம். ஆட்ட விதிகள் உண்டு. புலியாகக் கற்களும், ஆடுகளாகப் புளியங்கொட்டைகளும் பயன்படுத்தப்படுகின்றன. ஊர்ப்பொதுச் சாவடிகளிலும், தோப்பிலும் பெரும்பாலும் இவ்விளையாட்டு நடைபெறும்.

இது முற்றுகை நாட்களில் வீரர்களால் விளையாடப்பட்டதாக இருக்கலாம் என்று கருத இடமுண்டு. நட்சத்திர கோடுகள் வரைந்து ஆடுவது நட்சத்திர விளையாட்டு 10புள்ளிகள் 9 காய்கள் இருக்கும்.

ஆடுபுலி ஆட்டமானது குறிஞ்சி நிலத்திற்கும், முல்லை நிலத்திற்கும் இடைப்பட்ட இயற்கை வேட்டு வினைப்போராட்டம் விளையாட்டின் தோற்றத்திற்குக் காரணமாய் இருக்கலாம் என்பார் இரா.பாலசுப்பிரமணியம்.[2] இதை மறுக்கிறார் அ.பிச்சை. அவரோ மென்மைக்கும் வன்மைக்கும் நடக்கும் வர்க்கப் போராட்டம்[3] என்று உய்த்துணரலாம் என்பார்.

---

[2] இரா.பாலசுப்பிரமணியம், தமிழ்நாட்டு விளையாட்டுக்கள், ப.165.

[3] அ.பிச்சை, ஆடுபுலி ஆட்டத்தின் வாழ்வும் வரலாறும், ப.33.

**புலியாட்டம்**

ஆடுபுலி ஆட்டம் போன்றே புலியோடு தொடர்புடைய மற்றொரு பொழுதுபோக்கு விளையாட்டு புலியாட்டம். புலிமுகம் அணிந்து உடம்பு முழுவதும் புள்ளிகளைப் பொறித்துக் கொண்டு புலிவாலும் அணிந்து கொண்டு ஒரு மனிதன் ஆடுவான். தப்பு மேளம் கொட்டப்படும் அதன் தாளத்திற்குத் தக அவன் உறுமிக்கொண்டும் அங்கும் இங்கும் பாய்வதுமாகவும் சாடுவதுமாகவும் இருப்பான். மக்கள் அருகிலிருந்து கண்டுகளிப்பர். புலியைப் பற்றி அச்சவுணர்வு கொண்ட மக்கள் புலிக்கு அஞ்சாமல் இருப்பதாகவும், புலி தாம் நினைக்கிற அளவுக்கு அடங்கி ஆடுவது போலவும் கற்பனை செய்து கொள்வதாய் ஒருவித நிறைவை எய்துகின்றனர். புலியைக் கண்டு அஞ்சும் மக்களுக்குப் புலி தம்மைக் கண்டு அஞ்சுகிறது என்ற எதிர் நடத்தை மகிழ்வை ஊட்டும்.

**கடுவாய் ஆட்டம்**

புலி ஆட்டம் போன்ற ஆட்டமே கடுவாய் ஆட்டம். உடம்பு முழுவதும் வண்ணக் கலவையால் வரிகளை வரைந்து கொண்டு கடுவாயின் முகம் அணிந்து தப்புக் கொட்டும் மேளம் ஒலிக்க ஆடுவர்.

இடையிடையே அலறியும், உறுமியும் விறுவிறுப்பாகவும் ஆடுவர். கடுமையான ஆட்டம் இது. ஆடும் வேகத்தில் உயிருள்ள ஆட்டைக் கடித்து அதனைத் தூக்கி முறித்து வீசுவதும் உண்டு. அந்தக் கடுவாயைச் சுடுவதுபோல் மற்றொருவர் நடிப்பார். வெடியிலிருந்து தப்பி, சுடுபவரைத் தாக்க முயல்வதாகவும் இந்த ஆட்டம் நடக்கும். கொடிய விலங்குகளிடமிருந்து எப்படிக் காத்துக் கொள்ள வேண்டும் என்ற பயிற்சியை விளையாட்டாக இந்த ஆட்டம் சொல்லித் தருவதாகக் கருதலாம். அச்சத்தைப் போக்கி வீரத்தைக் கொடுக்கும் கலையாகவும், இந்த ஆட்டம் விளங்குகிறது. பின்னாளில் சமயம் சார்ந்த ஆட்டமாக இது மாறியிருக்கிறது.

**கழுமரம் ஏறல்**

இது விழாக் காலங்களில் ஆடப்பெறும் ஆட்டம். தவறு செய்தவர்களுக்குத் தண்டனை கொடுக்கும் போது கூடக் 'கழுவில்' ஏற்றல் என்பார்கள். வழுவழுப்பாக

உள்ள மரத்தில் எண்ணெய் பூசப்பட்டு உயரத்தில் கூண்டுபோல் கட்டப்பட்டு அமரும் படியாக அமைத்திருப்பார்கள்.

உடுக்கு அடிக்கப்பட்டு யார் கழுமரம் ஏறவேண்டும் என்று அருள்வாக்குக் கூறுகிறதோ அவரே கழுவேற வேண்டும். கழுமரம் ஏறவேண்டும் என்று நினைப்பவர், சுத்தமாக விரதம் பிடிக்க வேண்டும். 'காத்தான் கழுவேற்றம்' என்று இன்றும் சில மாரியம்மன் கோவில் திருவிழாக் காலங்களில் சிறப்பாக நடைமுறையில் உள்ளதைக் காணமுடிகிறது.

வழுக்குந் தன்மையுடைய மரத்தில் ஏறுவது கடினமான செயல். அச்செயலைச் சிறப்பாக ஆடவர்கள் செய்து வருவது குறிப்பிடத்தக்கது. பலரும் கண்டுகளிக்க இரவில் நடக்கும் நிகழ்ச்சி இது.

இவ்வாறு, சங்க இலக்கியங்களில் குறிக்கப்பெறாத நாட்டுப்புற விளையாட்டுக்கள் ஒன்பதும் விளக்கப்பட்டுள்ளன.

## 3.4. ஆண்கள் சங்க இலக்கிய - நாட்டுப்புற விளையாட்டுக்கள் - ஒப்பீடு

### 3.4.1. ஏறுகோள் விளையாட்டு

நாட்டுப்புற வாழ்க்கையில் ஏறுதழுவல் நிகழ்ச்சி மிகுதியாக இடம்பெற்றுள்ளன. சங்க இலக்கியம் கூறும் ஏறுகோள் விளையாட்டு - முல்லைநில ஆயர் மகளிர் திருமணம் குறித்த போட்டி விளையாட்டு எனக் குறிக்கிறது. நாட்டுப்புறத்தில் அவ்வாறு இல்லை. ஆனால் வீரவிளையாட்டு, போட்டி விளையாட்டு என்று கூறுவதில் ஒற்றுமை நிலவுகிறது. பார்வையாளர் - அரங்கு முதலியன ஒப்புமை - காணப்படுகிறது. வெற்றி, தோல்வி குறித்து கவலை இல்லை. முல்லைத் திணைக்குரியது என்றாலும் அனைத்து நிலமக்களும் தங்கள் வாழ்க்கைக்கேற்ப, பருவநிலைக் கேற்ப ஏறுதழுவலை நடைமுறைப்படுத்தியுள்ளனர்.

பொங்கல் திருநாள் முடிந்த மூன்றாம் நாள் மஞ்சுவிரட்டு, சல்லிக்கட்டு என்ற பெயர்களோடு விழாபோல் சிறப்பாக இக்காலத்தில் காளையின் கொம்பில்

தங்கச்சங்கிலி அல்லது பணமுடிப்பு வைத்துப் போட்டி விளையாட்டாக, இவ்விளையாட்டை மேற்கொள்வது நடைமுறையில் உள்ளது.

ஆர்வம், ஆளுமை, முயற்சி, துணிவு, எதையும் அடைந்தே தீர்வது என்ற தன்னம்பிக்கை அனைத்துக் குணங்களின் தோற்றமாகவும் மக்கள் வாழ்வோடு ஒன்றி நாட்டுப்புற மக்களை மகிழ்வித்துக் கொண்டிருக்கிறது.

### 3.4.2. குதிரையேற்றமும், யானை ஏற்றமும்

அரசர், வீரர் முதலியோர் யானை, குதிரை, தேர் போன்றவற்றைச் செலுத்துவது - திட்டமிட்டும், திட்டமிடாமலும் நடந்தது. தனியாகவும், கூட்டமாகவும் பலர் காண நடந்தது.

சங்க இலக்கியம் கூறும் இவ்விளையாட்டு நாட்டுப்புற விளையாட்டில் இல்லை. இக்காலத்தில் விளையாட்டுப் போட்டிகளில் ஒன்றாகக் கருதி உலக அளவில் குதிரை ஏற்றம் ஊக்கப் படுத்தப்பட்டு வருகிறது.

### 3.4.3. பறவைப்போர், விலங்குப்போர்

சங்க இலக்கியம் குறும்பூழ் - சேவல் பறவைகள் அவ்வப் பறவைகளிடையேயும் தகர், யானை போன்ற விலங்குகளை அவ்வவ் விலங்குகளிடையேயும் சண்டையிட வைத்துப்பார்த்து மக்கள் மகிழ்ந்துள்ளனர்.

பகல்பொழுதில் - பார்வையாளர்கள் காண நிலத்திடை நடைபெறும் விளையாட்டு, பொழுதுபோக்கு விளையாட்டு.

சேவல்களின் கால்களில் கூரிய கத்திகளைக் கட்டி மோதவிடுவர் போட்டிக்காக சேவல் - ஆட்டுக்கிடாய் வளர்க்கப்படும் - சங்க இலக்கியம் கூறும் இவ்விளையாட்டு நாட்டுப்புற மக்களின் மனமகிழ்வுக்கு ஒருவிருந்து எனக் குறிக்கலாம்.

### 3.4.4. விற்போர்

விளையாட்டுத் தொடக்கத்தில் விழா நடத்துவது. ஆசிரியருக்கு மரியாதை செய்வது போட்டி விளையாட்டு - பரிசு பெறுதல் - இலட்சியத்தில் வெற்றி பெறுவது. பொழுதுபோக்கு - வீரத்தை நிலை நாட்டவும் பயன்படுத்தப்பட்டது. திட்டமிட்ட விளையாட்டு பகல்பொழுதில் - நிலத்தில் ஆடவர்கள் விளையாடுவது - உடல்உறுப்பு இயக்கம், பொறிபுலன் இயக்கம், அறிவு இயக்கம் என மூன்றும் சார்ந்தது.

நாட்டுப்புற வில் விளையாட்டோடு வேறுபட்டுள்ளது. தேவைக்கேற்ற பொருளைப் பெறக் காடு மற்றும் மலைப்பகுதிகளுக்குச் செல்லும்போது விலங்குகளிடம் இருந்து தற்காத்துக் கொள்ள வில் முதலிய ஆயுதங்களைப் பயன்படுத்தினர். பின்னர் போட்டியாக வளர்ந்து விளையாட்டாக மலர்ந்தது கூர்ந்து நோக்கும் திறன் குறிப்பார்த்து அடிக்கும் ஆற்றல் நுட்ப அறிவு ஆகியன வளர்கின்றன.

தானியங்களைத் தின்னும் பறவைகளை விரட்ட 'கவண்கல் வீசல்' என்ற பெண்கள் விளையாட்டு - சிறுவர்கள் கிராமங்களில் இதைக் கில்டாபில்ட் என்ற விளையாட்டாக மேற்கொள்கின்றனர். அரச குடும்பத்தினர் பின்பற்றியது விற்போர்.

இக்காலத்தில் உலக அளவிலானப் போட்டி விளையாட்டாக வளர்ந்துள்ளது.

### 3.4.5. மற்போர்

விளையாடுவதற்கேற்ற அரங்கு அமைக்கப்பட்டு விளையாடப்பட்டது. கருவிகளின் துணையில்லாமல் உடல் வலிமையால் இருவர் தமக்குள் சண்டையிடும் ஒருவகை வீரவிளையாட்டு. இதனைப் போர் முறை என்றும் கூறலாம்.

பலர் முன்னிலையில் நிகழுவது, திட்டமிட்டது. சிறப்பாக ஆடுவோருக்குப் பரிசில், பட்டங்கள் வழங்கப்பட்டுள்ளது. ஆட்டத்தில் தவறு நேராமல் பார்த்துக்கொள்ள நடுவர் நியமிக்கப்பட்டிருந்தார். வெற்றி பெறவேண்டும் என்ற குறிக்கோள் தவிர போட்டி, பொறாமை, உணர்ச்சிக்கு இடம் தராமல் பார்த்துக் கொள்ளப்பட்டது. இவ்விளையாட்டில் போட்டியிட்டு வெற்றி பெறவேண்டுமென்பதற்காக நல்ல ஊட்ட உணவு உட்கொண்டிருப்பது தெரியவருகிறது.

நாட்டுப்புற விளையாட்டுக்களுள் மற்போரும் இடம் பெறுகிறது. சங்க இலக்கியம் கூறும் மற்போரோடு ஒத்து விளங்குகிறது. சினம், பகையின்றி வெற்றி - தோல்விக்காக ஆடும் விளையாட்டு இதற்குப் பயிற்சி தேவை. மல் என்றால் வலிமை - வலிமையை வெளிப்படுத்தப் போரிடுவதே இதன் நோக்கம். 'ஒத்தைக்கு ஒத்தை' 'மல்லுக்கட்றான்' போன்ற கொச்சையான சொற்கள் மூலம் இவ்விளையாட்டு கிராமப்புறங்களில் இன்றும் நடைமுறையில் உள்ளது. கருவி இல்லை பலர்காண போட்டியிடுவது போன்ற தன்மைகளிலும் ஒன்றுபடுகிறது.

உலக அளவில் இக்காலத்தில் இவ்விளையாட்டுப் பெயர் பெற்று விளங்குகிறது.

### 3.4.6. வேட்டை

சங்க இலக்கியம் கூறும் வேட்டை விளையாட்டு. நாட்டுப்புற ஆண்கள் விளையாட்டில் இடம்பெறவில்லை.

நாட்டுப்புற ஆண்கள் விளையாட்டுக்கள் - சிலம்பாட்டம் - ஆடுபுலியாட்டம் - சடுகுடு - உறியடி கடுவாய் ஆட்டம் - கவைக்குச்சி - கழுமரம் ஏறல் போன்ற விளையாட்டுக்கள் சங்க இலக்கியத்தில் இடம்பெறவில்லை.

சொக்கட்டான் அல்லது சூது என்ற விளையாட்டு சங்க இலக்கியத்தில் ஆண் - பெண் இருபாலர் விளையாட்டாக அமைந்துள்ளது.

கிராமப்புறங்களில் சொக்கட்டான், பகடை, தாயம் அனைத்தும் ஒரே விளையாட்டையே குறிக்கின்றது. தாயம் என்ற சொல் அது விளையாடும் ஆட்டக்காயைக் குறிப்பிடுகின்றது. ஆண்கள் விளையாடும் ஆட்டம் வட்டு என்றும் சூது என்றும் அழைக்கப்பெறுகிறது. பெரும்பாலும் ஓய்வு நேரத்தில் பொழுது போக்கிற்காக இருபாலரும் விரும்பி ஆடும் விளையாட்டு தாயம் எனப்படும். சூது என்ற சொல் 'உபாயம்' என்று குறிக்கப்படுகின்றது. வள்ளுவர் 'சூது' என்ற அதிகாரம் அமைத்து சூதை விரும்பாதே என்று அதன் தீமைகளைப் பற்றிப் பத்துப்பாடல்களில் விளக்குகின்றார்.

சீட்டாட்டத்தைச் 'சூதாட்டம்' என்று இக்காலத்தில் அழைப்பது வழக்கம்.

### 3.5. தொகுப்புரை

உடல் திறனை அடிப்படையாகக் கொண்ட ஆண்கள் விளையாட்டுக்கள் அவர்தம் வீரத்தைப் பகர்வனவாய் உள்ளன. இவ்வீரம் தற்காப்பிற்காகவும், பிறர்கண்டு பாராட்டுவதற்காகவும், மகிழ்வதற்காகவும் பயன்படுத்தப்படுகின்றது. மேலும் ஆடவரின் அறிவுத்திறன் விளையாட்டுக்கள் சிந்திக்கும் திறனை வளர்ப்பதாயுள்ளன.

'வினையே ஆடவர்க்கு உயிர்' (குறுந்.135:1) என்ற இலக்கிய வரிக்கு எடுத்துக்காட்டாக ஆண்கள் விளையாடும் விளையாட்டின் செயல்பாடு நல்ல ஆரோக்கியமும் தூய்மையான உள்ளமும், சகோதர மனநிலையும் அமைந்திட வழிகோலும்.

"நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்" என்ற பழமொழிக்கேற்ப விளையாட்டு நல்ல உடற்பயிற்சியை அளிப்பதோடு சிந்தனையை ஒரு முகப்படுத்தவும், அறிவு விரிவாகவும், விரைவான செயல்பாடு, கூர்மையான நோக்கு, உடல் வலிமை முதலியவற்றைப் பெறவும் பயனுள்ளதாய் அமைகிறது.

விளையாட்டுக்களில் பங்கேற்போர் பின்பற்ற வேண்டிய நெறிமுறைகள் உண்டு. நேர்மையாக விளையாடல், எதிர்த்தாடுபவர், நடுவர், பார்வையாளர் ஆகியோரை மதித்தல், ஆட்டவிதிகளுக்கும், பிறநிகழ்வு முறைகளுக்கும் மரியாதை தருதல் முதலியவை அவை.

தற்காலத்தில் போட்டிகளில் பங்கேற்போர் போட்டி தொடங்குவதற்கு முன்பும், போட்டி முடிந்த பின்பும் தம் அன்பையும் மரியாதையையும் புலப்படுத்தக் கைகுலுக்கிக் கொள்கின்றனர். விளையாட்டைத் தொடங்குகையில் அன்பைத் தெரிவிக்க 'லவ் ஆல்' என்றும் (love all) கூறிக் கொள்கின்றனர். நெறிமுறைகளுக்கும், ஆட்டத்தகுதிக்கும் மாறாக நடப்பவரை உரியவர்கள் கண்டித்தும், தண்டித்தும் வருகின்றனர். ஆட்டத்தில் எதிர்த்தாடுபவரை ஏளனம் செய்வது முறையில்லை. கா.மீனாட்சிசுந்தரம் போட்டியிடுபவரை ஏளனமாய்ப் பேசினால் தான் அவ்வாறு பேசியவனை வெல்ல வேண்டும் என்று ஏளனப்படுத்தப்பட்டவன். தன் ஆற்றல் முழுவதையும் பயன்படுத்திப்

*போட்டியில் கலந்து கொள்வான். அவ்வாறு கலந்து கொள்பவனை வெற்றி கொள்வதே மிகச் சிறந்த வெற்றியாகும். ஆகவே எதிரி ஏளனம் செய்யப்படுகிறான் என்கிறார்.*[4]

*ஆறு வகையான விளையாட்டுக்கள் எடுத்துக்கொண்டு அவற்றை உடல் உறுப்பு இயக்கம், பொறிபுலன் இயக்கம், அறிவு இயக்கம், உடல் உறுப்பு, பொறிபுலன், அறிவு மூன்றும் சார்ந்த விளையாட்டுக்கள் எனப் பகுத்துப் பார்க்கப்பட்டுள்ளன.*

*அவ்வாறே நாட்டுப்புற விளையாட்டுக்களை உடல் திறன் விளையாட்டுக்கள், அறிவுத்திறன் விளையாட்டுக்கள் உடல் திறன், அறிவுத் திறன் இணைந்த விளையாட்டுக்கள் என பகுத்துப் பார்க்கப்பட்டுள்ளன.*

*சங்க இலக்கிய - நாட்டுப்புற - விளையாட்டுக்கள் விரிவாக விளக்கப்பட்டுள்ளன. இலக்கியங்களில் குறிக்கப்பெற்ற இணையான நாட்டுப்புற விளையாட்டுக்கள் ஏழும் எடுத்துக்காட்டி விளக்கப்பட்டுள்ளன. மேலும் இலக்கியங்களில் குறிக்கப் பெறாத விளையாட்டுக்கள் ஒன்பதும் விளக்கப்பட்டுள்ளன.*

*ஆண்கள் விளையாட்டுக்கள் யாவும் புறவிளையாட்டுக்களாகவும், வீரவிளையாட்டுக்களாகவும் அமைந்துள்ளதைக் காணமுடிகிறது. இவ்விளையாட்டுக்களின் மூலம் விளையாடுபவர்களின் ஆட்டத் திறனும், அறிவுக்கூர்மையும் வெளிப்படுகிறது. ஆண்கள் விளையாட்டுக்களில் உடல் உழைப்பிற்கு முக்கியத்துவம் இருப்பதால் உடலுக்குப் பயிற்சியும் ஏற்படுகிறது. ஆண்கள் விளையாட்டுக்களில் சில பகையை வளர்க்கும். அதே நேரத்தில் ஒருவருக்கொருவர் மனித நேயத்துடன் பழகவும், நட்பு ஏற்படவும் உதவுகின்றன.*

*மேலைநாட்டு விளையாட்டுக்கள் அறிவிற்கும், உடலுக்கும் வேலை தருகிறது. ஆனால் நம் நாட்டு விளையாட்டுக்களிலோ ஐம்புலனுக்கும் வேலை கிடைக்கிறது. அத்துடன் சிந்தனை செய்யவும் வழி வகுக்கின்றது. அதற்கு மேலும் ஒழுக்கத்தினையும், பண்பாட்டினையும் போதிக்கின்றது.*

---

4 *டாக்டர் கா.மீனாட்சி சுந்தரம், பன்மையில் ஒருமை, 1978.*

# இயல் 4

# பெண்கள் விளையாட்டுக்கள்

4.0. முன்னுரை

4.1. பெண்கள்-சங்க இலக்கிய விளையாட்டு வகைகள்

4.2. பெண்கள்-சங்க இலக்கிய விளையாட்டுக்கள்

4.3. பெண்கள்-நாட்டுப்புற விளையாட்டு வகைகள்

4.4. பெண்கள்-நாட்டுப்புற விளையாட்டுக்கள்

4.5. பெண்கள்-சங்க இலக்கிய-நாட்டுப்புற விளையாட்டுக்கள் - ஒப்பீடு

4.6. விளையாட்டுக்களும், பெண்களும்

4.7. சங்க இலக்கிய இருபாலர் விளையாட்டுக்கள்

4.8. தொகுப்புரை

# இயல் 4

# பெண்கள் விளையாட்டுக்கள்

## 4.0. முன்னுரை

விளையாட்டு என்பது வெளித்தூண்டல்களின்றி மன இயல்பூக்கத்தின் அடிப்படையில் மகிழ்ச்சியூட்டும் நிலையில் அமைவதாகும். விளையாட்டு பொழுதுபோக்கிற்காக மட்டுமின்றி உடல்நலம், மனநலம் பேணுவதாகவும் உள்ளது. விளையாட்டை மனமகிழ்ச்சியூட்டும் செயல் என்றே கூறலாம்.

பெண்கள் விளையாட்டுக்கள் பொதுவாக அக விளையாட்டுக்களாகவே உள்ளன. சிறுபான்மை புற விளையாட்டுக்களும் உண்டு. உடல்திறன் விளையாட்டுக்களை விட அறிவுத்திறன் சார்ந்த வாய்ப்பு நிலை விளையாட்டுக்கள் பெண்களிடம் உள்ளன. சமுதாயச் சூழலுக்கேற்ப விளையாட்டுக்கள் அமைந்துள்ளன. பெண்கள் விளையாட்டில் போட்டி மனப்பான்மையோடு விளையாடும் விளையாட்டு என்பதைவிடப் பொழுது போக்கிற்காகவே அதிகம் விளையாடியுள்ளனர்.

பெண்கள் இயற்கையிலேயே செலவினங்கள் இன்றிச் சிக்கனமாக வாழ எண்ணுபவர்கள். பெண்கள் விளையாட்டைப் பார்க்கும் போது எந்த பொருட்செலவும் இல்லாமல் தாங்கள் இருக்கும் இடத்திலேயே இருக்கும் நபர்களுக்கு ஏற்றவாறு விளையாட்டில் ஈடுபட்டுள்ளனர் என அறியமுடிகிறது. பெண்கள் ஈடுபட்ட எந்த விளையாட்டுக்களும் எப்போது வேண்டுமானாலும் விளையாடக்கூடிய தாங்கள் விரும்பிய விளையாட்டு என்பதை விடப் பொழுதுபோக்கிற்காக மனமகிழ்ச்சிக்காகவும் விளையாடியுள்ளனர்.

## 4.1. பெண்கள் விளையாட்டு வகைகள்

சங்ககால இலக்கிய விளையாட்டுக்களைப் பின்வருமாறு வகைப்படுத்தியும் பகுத்தும் பார்க்கலாம்.

1. உடல்உறுப்பு இயக்க விளையாட்டுக்கள்

    1. கவண்
    2. கழங்கு

3. குரவை
4. செடி-கொடி வளர்ப்பு
5. பந்து
6. பறவை வளர்ப்பும் விலங்கு வளர்ப்பும்
7. புள் ஓட்டல்
8. மலர்க்கொய்தலும் மாலை தொடுத்தலும்
9. வள்ளை

2. பொறிபுலன் இயக்க விளையாட்டுக்கள்

1. எதிரொலி கேட்டல்
2. பறவைகளைக் காணலும் அவற்றின் செயல்கள் போல் செய்தலும்

3. அறிவு இயக்க விளையாட்டுக்கள்

1. பாவை விளையாட்டு
2. பிசி-நொடி விளையாட்டு

4. உடல் உறுப்பு இயக்கமும், பொறிபுலன் இயக்கமும் சார்ந்த விளையாட்டுக்கள்

1. கழங்கு
2. குரவை

5. உடல் உறுப்பு இயக்கமும், அறிவு இயக்கமும் சார்ந்த விளையாட்டுக்கள்

1. புள் ஓட்டல்
2. பந்து

வீட்டிலிருந்தவாறே விளையாடும் விளையாட்டுக்கள்

1. பறவை வளர்ப்பும் விலங்கு வளர்ப்பும்
2. பிசி-நொடி
3. வள்ளை

வெளியிடங்களில் விளையாடும் விளையாட்டுக்கள்

1. எதிரொலி கேட்டல்
2. கவண்
3. செடி, கொடி வளர்ப்பு
4. பந்து

வீட்டிலும் வெளியிலுமாக விளையாடும் விளையாட்டுக்கள்

1. கழங்கு
2. குரவை
3. செடி, கொடி வளர்ப்பு
4. புள் ஓட்டல்
5. மலர் கொய்தலும் மாலை தொடுத்தலும்

வகைப்படுத்தியும் பகுத்தும் பார்க்கப்பட்ட இவ்விளையாட்டுக்கள் அனைத்தும் பெண்கள் விளையாட்டுக்களில் விளக்கமாக ஆராயப்பட்டுள்ளன.

## 4.2. பெண்கள் - சங்க இலக்கிய விளையாட்டுக்கள்

1. ஊசல்
2. எதிரொலி கேட்டல்
3. கவண்
4. கழங்கு
5. குரவை
6. செடி - கொடி வளர்ப்பு
7. பந்து
8. பறவை வளர்ப்பும் விலங்கு வளர்ப்பும்
9. பிசி-நொடி விளையாட்டு
10. புள் ஓட்டல்
11. மலர் கொய்தலும் மாலை தொடுத்தலும்
12. வள்ளை

**ஊசல்**

பெரிய மரக்கிளைகளில் நீண்ட கயிற்றைக் கட்டிவிட்டு அதில் அமர்ந்து விளையாடுவது. திட்டமிட்டது, பயத்தைப் போக்குகிறது. ஊசலில் அமர்ந்து கயிறுகளை இரு கைகளாலும் பிடித்துக் கொண்டு கால்களினால் மண்ணை உதைத்து வேக,

வேகமாக ஆடுவது. மேலுக்கும், கீழுக்குமாக எதிர் எதிர் திசைகளில் காற்றில் மிதப்பது போல ஆடுவதில் மகளிர் அதிகமாக ஆர்வம் காட்டினர்.

கயிறுகளை மறைக்க மலர்க் கொத்துக்கள், கிளைகளால் சுற்றிவிட்டும் அமர்ந்து விளையாடுவதற்குப் பலகைகளையும், துணை இருக்கைகளையும் அமைத்திருந்தனர். வீட்டுக்கு வெளியே சோலைகளில் இவ்விளையாட்டு நடைபெற்றது. சில இடங்களில் சிற்றூசல் அமைத்து இல்லத்தினுள்ளும் வீட்டு விளையாட்டாக (Indoor game)வும் ஆடியுள்ளனர்.

வீட்டினுள் அமைக்கப்பட்டிருந்த ஊசல் பலவகை வேலைப்பாடுகளை உடையதாக இருந்தது. சங்கிலியால் பிணைக்கப்பட்டப் பலகைகளும் ஊசல் விளையாட்டுக்குப் பயன்படுத்தப்பட்டது. பெண்கள் மட்டுமே விளையாடிக் கொண்டிருந்த இவ்விளையாட்டுக் காலப்போக்கில் ஆண்களும் ஆடுவதாக அமைந்தது. உடல் இயக்கமும் பொறிபுலன் இயக்கமும் சார்ந்த விளையாட்டு. ஊசல் குறித்த செய்திகளைச் சங்க இலக்கியங்கள் பின்வருமாறு எடுத்து இயம்புகின்றன.

1. பூங்குழை யூசல் பொறைசால் காதி

(பொருநர்:30)

2. ஊசல் ஊர்ந்து ஆட, ஒரு ஞான்று வந்தானை

(கலித் 37-14)

3. தண்தாழை
வீழ் ஊசல் (கலித் 131-11)

4. சில்வளைக் குறுமகள்
ஊசல் ஊறுதொழிற் பூசல் (நற் 90: 10-11)

5. வழிநாள் ஊசலின் கோடை தூக்குதொறும்

(மேற்படி 162-9)

6. தாழை வீழ்கயிற் றூச தூங்கிக் (அகம் 20:6)

7. தாழ்வி லோங்குசினைத் தொகுத்த வீழ்கயிற்
றூசன் மாறிய மருங்கும் பாய்புட (மேற்படி 38:7-8)

8. ஓங்கு சினைத் தொகுத்த ஊசல் பாம்பென

(மேற்படி 68:6)

*உடலினை உறுதி செய்வது, திட்டமிட்டது, மகிழ்ச்சிப் பொழுது போக்கு, விட்டுக் கொடுக்கும் மனப்போக்கை வளர்ப்பது, உடன் இருப்பவர்க்கு உதவுவது. இயற்கைச் சூழலில் விளையாடுவது போன்ற பயன்களை இவ்விளையாட்டு அளிக்கிறது.*

*சங்க இலக்கியங்களுக்குப் பிறகு தொடர்ந்து இவ்விளையாட்டு வளர்ந்து வந்துள்ளதை மணிமேகலையும் சிலம்பும் பின்வருமாறு புலப்படுத்தும்.*

மடவோர்க் கியற்றிய மாமணியூசல் (மணி 45:75)

மகளிராடும் ஊசல் (சீவக 58:2268)

*என்பதும் சிலப்பதிகாரத்து 'ஊசல் வரியும்' குறிப்பிடத்தக்கது.*

*"வார் கயிற்றூசல்", "விட்டத்துப் பொன்னூசல்", "வீட்டின் ஊசல்" என்பவை காப்பியங்கள் காட்டும் ஆதாரங்கள். இக்காலத்தில் இவ்விளையாட்டு உள்ளது. மழலைப் பள்ளிகளிலேயே குழந்தைகட்கு இவ்விளையாட்டில் பயிற்சி தரப்படுகிறது.*

**எதிரொலி கேட்டல்**

*யாரும் இல்லாத இடங்கள் - குறிப்பாக மலைப்பகுதி. குடியிருப்பு இல்லாத பகுதி. குகைப் பகுதிகட்குச் சென்று, கூவி, ஒலி எழுப்பி அந்த ஒலியே எதிரொலித்து வருவதைக் கேட்டுப் பெண்கள் வியந்து, மகிழ்ந்து பொழுது போக்கியுள்ளனர். தன் மனத்தில் தேங்கிக் கிடந்த சில கருத்துக்களை யாரிடமும் கூற முடியாத காலத்தில் தன் தோழிகளுடன் சென்று கருத்துக்களை வெளிப்படுத்தியதாகச் செய்திகள் கிடைக்கின்றன. திட்டமிட்ட விளையாட்டு. மலைச்சிகரத்தில் எதிரொலி கேட்டு மகிழ்வதை "இலங்குதாழ் அருவியோடு அணிகொண்ட நின்மலைச் சில சிலம்புபோல் கூறுவ கூறும்" (கலித்.46: 25-26), "ஒடியா உள்ளமொடு உருத்து, ஒருங்கு உடன்இயைந்து இடிஎதிர் கழறும்" (பரிபாடல் 2:36-37) என்ற பகுதிகள் விளக்குகின்றன.*

*கூடிவிளையாடுவது, மனதில் உள்ளதை வெளியிலே சொல்லுவதால் மனச்சுமை குறைந்து மகிழ்ச்சி கிடைக்கிறது. மலைச்சிகரத்திற்குச் சென்று கூவி, எதிரொலி கேட்டு, மகிழ்ந்து பெண்கள் பொழுதுபோக்கிய செய்திகளைக் "குன்றமேறிச் சிலம்பெதிர் சென்று கூயும்" என்ற சீவகசிந்தாமணிச் செய்யுட் பகுதியும் (2714), "வெற்பெதிர் கூஉய்க்*

களித்தார்” என்று தணிகைப் புராணச் செய்யுட் பகுதியும் (களவு:52) இவ்விளையாட்டை விவரித்துள்ளன.

வாய்ப்புக் கிடைக்கும் பொழுது அனைவருமே இவ்விளையாட்டில் ஈடுபட்டு மகிழ்ந்து வருகின்றனர்.

**கவண்**

புள் ஓட்டவும், போர் புரியவும், தற்காப்புக்காகவும் மாந்தர்க்குப் பயன்படும் ஒரு கருவி. ‘கைக்கவண்’ எனவும் இது குறிக்கப்படும். இவ்விளையாட்டில் பெண்கள் மிகவும் ஈடுபாடு கொண்டிருந்தனர். மிக உயரமான இடத்தில் காணப்பட்டத் தேனடையின் மீது கவணில் மணி வைத்து எறிந்து பெண்கள் விளையாடிய நிகழ்ச்சி இதில் சுட்டப்பட்டுள்ளது. வெற்றி கொள்ளுவது விளையாட்டின் நோக்கம். குறி பார்த்து எறிகின்ற பெண்களின் ஆற்றல் வெளிப்பட்டுள்ளது. திட்டமிட்ட விளையூாட்டு. இதனை ஒரு தொழிலாகவும் மேற்கொண்டிருந்தனர். கிளிக்கூட்டத்தை ஓட்டுவது அதற்காகக் கையில் பூங்கொத்தை ஏந்துவது. ‘ஆயோ’ என்ற ஒலிக்குறிப்பை எழுப்புவது. கைகளைத் தட்டி ஓசை எழுப்பி விரட்டுவது போன்றவையெல்லாம் நிகழ்ந்துள்ளது. கூட்டமாக விளையாடுவது. உடல் உறுப்பு இயக்கமும் பொறிபுலன் இயக்கமும் சார்ந்த விளையாட்டு. சிறுகல் கொண்டு ஒலிஎழுப்பி கவண்கல் வீசிய செய்திகளைச் சங்கப் பாடல் வரிகள் பின்வருமாறு புலப்படுத்துகின்றன.

1. மொய்ம்பினோர்
   கல்லெறியுங் கவண் வெரீஇப் (பட்டினப் 72-73)
2. ஏனல் காவலர் கவண் ஒலி வெரீஇக் (குறுந் 54-2)
3. கடுவிசைக் கவணில் எறிந்த சிறுகல் (அகம் 292-11)
4. வனைகழை யுடைந்த கவண்விசை (மேற்படி 309-13)
5. வல்லுவாய்க் கவணின் கடுவெடி ஒலிலெனா (மேற்படி392-15

உடலினை உறுதி செய்வது. கண்களுக்கும், கைகளுக்கும் பயிற்சியாவது, மகிழ்ச்சி விளையாட்டு. வெளிப்புறத்தில் நிகழுவதால் அதற்குத் தகத் தன்னைத் தயாரித்துக் கொள்ளுவது. விளைவுகளைச் சந்திக்க உறுதி கொள்ளுவது போன்ற பயன்களை இவ்விளையாட்டுத் தருகிறது.

*சங்க இலக்கியங்களுக்குப் பிறகு "கல்லுமிழ் கவண்" (சிலம்பு.15:208), "கவண்விடு புடையூக் காவல் கைவிட" (மேற்படி. 27:218) என்ற சிலப்பதிகாரப் பாடல் வரிகள் கவண் விளையாட்டுக் குறித்த செய்திகளைத் தெரிவிக்கின்றன.*

*இன்றும் வயற்புறங்களில் பெண்களும், சிறுவர்களும் இவ்விளையாட்டில் ஈடுபட்டுள்ளனர்.*

**கழங்கு**

*இயற்கையில் கிடைத்த காய்களைக் கொண்டு எறிந்தும், எடுத்தும் உயரத் தூக்கிப் போட்டும், கீழே கொட்டியுள்ளதைப் பொறுக்கியுமாக ஆடியுள்ளனர். பெண்கள் தங்களது இல்லங்களின் பின்புறத்திலும், மர நிழலிலும், மேன்மாடங்களிலும் அமர்ந்து ஆடுவர். இருவர் விளையாடுவது பந்தயம் கூறி ஆடுவது. பாட்டுப்பாடிக் கொண்டே ஆடியுள்ளனர். நாளடைவில் பொன், மணி, முத்து, பூக்களால் ஆன கழங்கு கொண்டு ஆடிய விவரம் தெரிகிறது. கைக்குள் அடக்கக் கூடிய கழங்குக் காய்கள் விளையாட்டில் பயன்படுத்தப்பட்டுள்ளது. இது ஓர் உடல் உறுப்பு இயக்க விளையாட்டாகும். மகளிர் ஆடிய கழங்காட்டம் குறித்த செய்திகளைச் சங்க இலக்கியப் பாடல் வரிகள் பின்வருமாறு எடுத்துக்காட்டுகின்றன.*

முத்து வார்மணற் பொற்கழங் காடும் (பெரும்பாண் 335)
அணங்கு அறி கழங்கின் கோட்டம் (நற் 47:8)
கூரை நல்மனைக் குறுந்தொடி மகளிர்
மணல் ஆடு கழங்கின் (மேற்படி 79:2-3)
பரந்து ஆடு கழங்கு (பதிற்று 15:3)
சிறுகு இடையார்
பந்தும் கழங்கும்.......... (பரி 8:106:107)
இளந்துணை யாயமொடு கழங்குடனாடிதும்
(அகம் 17:2)
கிளியும் பந்துங் கழங்கும் வெய்யோள் (மேற்படி. 49:1)
கழங்கா டாயத் தன்று நம் அருளிய (மேற்படி. 66:24)
பொலஞ்செய் கழங்கிற் றெற்றி யாடும் (புறம் 36:4)

ஓய்வு நேரத்தைப் பெண்கள் நன்கு பயன்படுத்தி உள்ளனர், வீட்டிலிருந்த படியே விளையாடி மகிழ்ந்ததாகத் தெரிவதால் சுறுசுறுப்பாக இருக்க முடிந்துள்ளது. காய்களைத் தூக்கிப் போட்டு விளையாடியதால் கைகள், கண்களுக்கு நல்ல பயிற்சி இருந்துள்ளது.

'கருமணிக் கழங்கு'[1], 'பைங்கழங்கு'[2], 'மென்கழங்கு'[3], 'வெண்கழங்கு'[4] போன்ற தொடர்கள் காப்பியங்களில் வருகின்றன.

'பந்துங்கழங்குந் தந்தனர் பரசி' என்றும் (சிலம்பு.12:35) 'கழங்காடு மகளி ரோதை யாயத்து' என்றும் சிலப்பதிகாரம் (27-245). மகளிர் விளையாடும் கழங்காட்டம் பற்றிக் குறிப்பிடுகிறது. காய்களை உயரத் தூக்கிப் போட்டு ஆடும் பழக்கம் பெண்களிடையே இன்றும் உள்ளது.

## குரவை

இது ஒருவகை நாட்டியம். இதனை விளையாட்டாகவும் மேற்கொண்டுள்ளனர். அம்மானை, ஊசல், கழங்கு, பந்து என்ற விளையாட்டுக்களின் வரிசையில் குரவையும் இடம்பெற்றுள்ளது. திட்டமிட்ட விளையாட்டு. பெண்கள் பலர் மகிழ்ந்து கூடித் தழுவியும், கைகளைக் கோத்தும், கைகொட்டியும், சத்தமிட்டுஒலி எழுப்பியும், பாடியும் ஆடியுள்ளனர். பெண்களுக்குரிய இவ்விளையாட்டில் சில நேரங்களில் ஆண்களும் கலந்துகொண்டு ஆடியிருக்கலாமெனக் கூற இடமுண்டு. உடல் உறுப்பு இயக்கமும் பொறிபுலன் இயக்கமும் சார்ந்த விளையாட்டாகும். குரவை குறித்த செய்திகளைச் சங்கப் பாடல் வரிகள் பின்வருமாறு தெரிவிக்கின்றன.

| | |
|---|---|
| தொண்டகச் சிறுபறைக் குரவை யயர | (திருமுரு 197) |
| பரதவ மகளிர் குரவையொ டொலிப்ப | (மதுரை 97) |
| மன்றுதொறு நின்ற குரவை | (மதுரை 615) |
| வான்றோய் மீமிசை யயருங் குரவை | (மலைபடு 322) |
| வேங்கை முன்றில் குரவையும் கண்டே | (நற் 276-10) |
| குறும் பல் யாணர்க் குரவை அயரும் | (பதிற்று 73-11) |

1 சீறாப்புராணம் - விலாதத்து. கரம்:32.

2 சீவகசிந்தாமணி 1099.

3 பெரியபுராணம், தடுத்தாட். 135.

4 கூர்மபுராணம்: பூருவ : கண்ணன்.: 58.

குரவை தழீஇ யாம் ஆட, குரவையுள்

கொண்டு நிலை பாடிக்காண் (கலித் 39:28-29)

பண் அமை இன் சீர்க் குரவையுள் (மேற்படி. 102:35)

நாம் ஆடும் குரவை (மேற்படி. 104:69)

மனை முதர் மகளிரொடு குரவை தூங்கும்

(அகம் 232:10)

சினமாந்தர் வெளிக் குரவை (புறம் 22:22)

*கூடி ஆடுவதால் கிடைக்கப்பெறும் மகிழ்ச்சி, சாதனை ஒப்பற்றது. பெண் மக்களின் ஆற்றல் வெளிப்பட ஏதுவான நிகழ்ச்சியாகக் குரவை ஆட்டம் அமைந்துள்ளது.*

*ஏழு மகளிர் குரவை ஆடியதைச் சிலப்பதிகாரக் காப்பியம் 'ஆய்ச்சியர் குரவை' எனப் பெயரிடப்பட்டுக் காட்டுகிறது. பாலை நிலம் தவிர ஏனைய நான்கு நிலங்களிலும் ஆய்ச்சியர் குரவை, கடைசியர் குரவை, குறிஞ்சிக் குரவை, நுளைச்சியர் குரவை என்பன முறையே முல்லை, மருதம், குறிஞ்சி, நெய்தல், நிலங்களில் நடைபெற்றுள்ள செய்தியைச் சிலப்பதிகாரம், மணிமேகலைக் காப்பியங்கள் பின்வருமாறு புலப்படுத்துகின்றன.*

குரவையும் வரியும் விரவல செலுத்தி (சிலம்பு. 3:24)

கோத்த குரவையு ளேந்திய தெய்வநம் (மேற்படி. 17:39)

வாய்வதின் வந்த குரவையின் (மேற்படி. 18:47)

ஆடிய குரவையி; ஃதாமென நோக்கியும் (மணிமே. 19:66)

*இக்காலத்தில் மகளிர் இவ்விளையாட்டில் ஈடுபாடு கொண்டுள்ளதை நாட்டுப்புறங்களில் காணலாம். இது சிறிது மாற்றங் கொண்டும் நிகழ்த்தப் பெறுகிறது.*

**செடி-கொடி வளர்ப்பு**

*செடி-கொடிகளை வளர்ப்பது பெண்களின் பொழுது போக்கு, மகிழ்ச்சி செயல் விளையாட்டு. புன்னை, குவளை, நொச்சி முதலிய செடிகளை வளர்த்து அதன் வளர்ச்சி கண்டு மகிழ்ந்துள்ளனர். தான் வளர்க்கும் செடி-கொடிகள் வெயில், மழை, பிற எவற்றாலும் தாக்கப் படாமல் இருக்க அவற்றைத் தழைகள், மலர்கள் கொண்டும்*

*மறைத்துக் காத்தனர். செடிகட்குப் பெயர் கொடுத்து மகிழ்ந்தனர். செடி, கொடி வளர்ப்பினை யொட்டி சில ஆசைகள், நம்பிக்கைகளையும் பெண்கள் வளர்த்துள்ளனர். உறவாகக் கருதி மகிழும் நிலையும் இருந்துள்ளது. தனது நேரடிப் பாதுகாப்பில், கவனத்தில் வளர்ப்பதை விரும்பினர். தான் வளர்த்து வரும் செடி, கொடிகளைச் சுற்றிப் பாட்டுப்பாடி, கைதட்டி விளையாடும் பழக்கத்தைச் சில பெண்கள் மேற்கொண்டிருந்தனர் திட்டமிட்ட விளையாட்டு. உடல் உறுப்பு இயக்கம் சார்ந்த விளையாட்டாகும். இவ்விளையாட்டுக் குறித்த செய்திகளைக் கீழ்வரும் சங்கப் பாடல் வரிகளின் மூலம் நன்கு அறியலாம்.*

உயிரெனக்
கண்ணு நுதலு நீவத் தண்ணெனத்
தடவுநிலை நொச்சி வரிநிழ லசைஇத்
தாழிக் குவளை வாடுமலர் சூட்டித்
தருமணற் கிடந்த பாவை (அகம் 165:8-12)

தெற்றி யுலறினும் வயலை வாடினும்
நொச்சி மென்சினை வணர்குரல் காயினும்
நின்னினும் மடவள் நனிநின்னயந்த (மேற்படி. 259:13-15)

ஒங்கு நிலைத் தாழி மல்கச் சார்த்திக்
குடையடை நீரின் மடையினர் எடுத்த
மாந்தர் மனைகட் பந்தெறிந்தாடி (மேற்படி. 275:1-3)

விளையாடு ஆயமொடு வெண்மணல் அழுத்தி
மறந்தனம் துறந்த காழ்முளை ஊஅகைய
நெய்பெய் தீம்பால் பெய்து இனிது வளர்ந்தது
(நற் 172:1-3)

இல் எழு வயலை ஈற்று ஆ தின்றென
பந்து நிலத்து எறிந்து, பாவை நீக்கி
........................................................
தீம்பால் உண்ணாள் வீங்குவனள் விம்மி
(மேற்படி. 179:1-2,6)

பெண்பாலரிடையே பொறுமைக்குணம் வளருவதற்கு உதவியுள்ளது. இரகசியங்களை மனதில் வைத்துக் காப்பாற்றவும், தகுதியுடைய தோழியர்களிடம் பகிர்ந்து கொள்ளவுமாக உதவியது கற்பனைகளை வளர்த்து எண்ணியதை முடிக்கும் ஆற்றலும் வளர்ந்தது. செடி-கொடி வளர்த்து விளையாடும் பழக்கம் காப்பிய காலத்தில் அதிகமாக இருந்துள்ளது. புன்னை, முல்லை, மௌவல், சந்தனக் கன்று, கருப்பூரக் கன்று போன்ற பல செடி-கொடிகளை வெயில் தாக்காமல் இருக்க அவற்றை மாலைகளைக் கொண்டு மறைத்தும், பிறைபோலப் பேணியும் பெயரிட்டும் அன்புடன் வளர்த்துள்ளதை,

> கொண்தகைப் பொதியிற் சோலைக் குழுவிய முல்லை
> மௌவல், செய்ய சந் தியமச் சாரற் கருப்பூரக்கன்று தீம்பூக்
> கைதரு மணியிற் றெண்ணீர் மதுக்கலந் தூட்டி மாலை, பெய்
> தொளி மறைத்து நங்கை பிறையென வளர்க்கின்றாளே
>
> (சீவகசிந்தாமணி 58:1267)

என்ற செய்யுள் வரிகள் தெரிவிக்கின்றன.

சமுதாயக் கடமையாகச் செடிகொடி வளர்ப்பு விளையாட்டு இன்று வளர்ந்துள்ளது.

**பந்து**

உருண்டை வடிவமுள்ள விளையாட்டுக் கருவி கைவிரல்ரேகை பந்தின் மீது பதிந்துவிடும் அளவு பளபளப்பான மேற்பரப்பு கொண்டது. பந்தெறிகளம், பந்தடிமேடை இருந்த விவரங்களை இலக்கியங்கள் கூறுகின்றன. பொழுது போக்காகவும் போட்டியாகவும் ஆடுவது, மாலை நேர விளையாட்டு, தனியாகவும், சேர்ந்தும் விளையாடுவது, கைகளாலும் கோல் கொண்டு தட்டியும் ஆடுவது, பாடிக்கொண்டு ஆடுவது. பந்தயம் கூறி விளையாடுவது, பூவினால் ஆக்கப்பட்ட பந்துகளைப் பயன்படுத்துவது, நூலினால் வரிந்து கட்டப்பட்ட ஒரு வகைப் பந்து கொண்டு ஆடுவது மாடி வீடுகளில்-மேல் மாடத்தில் நிலா முற்றத்தில் பெண்கள் பந்தாடியுள்ளனர். திட்டமிட்ட விளையாட்டு மகளிர் ஆடிய பந்து விளையாட்டுக் குறித்து சங்கப் பாடல் வரிகள் பின்வருமாறு விளக்குகின்றன.

வரிப்புனை பந்தொடு பாவை தூங்க (திருமுரு 68)

வான் நோய் மாடத்து வரிப்பந் தசைஇக் (பெரும்பாண் 333)

வரிப்புனை பந்தொடு வைஇய செல்வோள்

(நற் 12-6)

நெடுந்தேர் வழங்கும் நிலவுமணல் முற்றத்துப்

பந்தொடு பெயரும் பரிவு லாட்டி (மேற்படி. 140:6-7)

பந்து நிலத்து எறிந்து பாவை நீக்கி (மேற்படி. 179:2)

பாலும் உண்ணாள் பந்துடன் மேவாள்

விளையாட்டு ஆய மொடு (குறுந் 396-1)

கோதை பரிந்து வரிப்பந்து கொண்டோடி

நோதக்க செய்யுந் சிறுபட்டி (கலித் 51:3-4)

எறிபந்தோ டிகத்தந்தாய் கேளினி (மேற்படி. 57:7)

மலரா மாலைப் பந்து கண்டன்ன (புறம் 33-13)

வளக்கெழு திருநகர்ப் பந்துசிறி தெறியினு (அகம் 17-1)

பந்துபுடைப் பன்ன பாணிப் பல்லடிச் (மேற்படி. 105-9)

*ஆண்-பெண் இருவரிடையே மகிழ்ச்சிப் பொழுது போக்காக அமைந்து ஒருவரை ஒருவர் நன்கு புரிந்து கொள்ள உதவியுள்ளது. பந்து செய்வதில் தங்கள் திறமையையும், கற்பனையையும், தொழில் நுணுக்கத்தையும் வெளிப்படுத்தியுள்ளனர். பந்தடிப்பதில் தங்கள் முன்னோர்களைப் பின்பற்றிப் போலச் செய்யும் மரபும் அவர்களைவிட நன்கு செய்ய வேண்டுமென்ற உணர்வும் வளர்ந்துள்ளது. விதவிதமான பந்துகள், வயதுக்கும், ஆண்-பெண் இருவருக்கும் தனியாக, பொதுவாக உருவாக்கப்பட்டுள்ளன.*

*தனியாகவும், கூட்டமாகவும் விளையாடுவதற்கேற்ப பந்து செய்யப்பட்டுள்ளது. பந்து விளையாட்டினைச் சொல்லிக் கொடுத்தவர்களை மதிக்கவும், வணங்கவும் தலைப்பட்டனர். கூட்டாக-அணியாக விளையாடுவதன் மூலம் தோழமை உணர்வு வலுப்பெற்றது. கைவினைக் கலை வளர்ச்சிக்கும், மற்றவர் பார்த்துப் பாராட்டி வியக்கும் வகையில் பந்துகள் செய்யப்பட்டுள்ளன. நெட்டி, பூளைப்பூ, உலண்டுநூல், மயிற்பீலி,*

*வண்ண நூல்கள், பாம்பின் தோல், மெல்லிய துணிகள், பந்துகள் செய்யப் பயன்பட்டுள்ளன.*

*உடல் உறுப்பு, இயக்கத்துடன் பொறிபுலன் இயக்கம், அறிவு இயக்கம் ஆக மூன்று இயக்கங்களும் இவ்விளையாட்டில் இணைந்து காணப்படுகின்றன.*

**பறவை வளர்ப்பும் விலங்கு வளர்ப்பும்**

*பறவைகளையும், விலங்குகளையும் பொழுது போக்காகவும், விளையாட்டாகவும் பெண்கள் வளர்த்துள்ளனர் இதனால் ஆருயிர்களையும், விரும்பி நேசிக்கும் மனப்பக்குவம் அவர்கட்கு ஏற்பட்டது. தங்களது முழு கவனத்தையும் அவற்றை வளர்ப்பதில் செலவழித்தனர் தாங்கள் வளர்க்கும் பறவைகளும், விலங்குகளும் மற்றவர்கள் வளர்ப்பதை விடச் சிறப்பாகவும், உயர்வாகவும், முதன்மைத் தன்மையதாகவும் இருக்க வேண்டுமென்று கருதினர். தன்னுடைய இன்ப, துன்பங்களை அவற்றிடம் பகிர்ந்து கொண்டுள்ளனர். அவற்றோடு விளையாடுவதில் நிறைவைக் கண்டனர். தங்கள் விருப்பத்திற்கேற்ப அவை விளையாடுவது கண்டு ஊக்குவித்துள்ளனர். 'ஏறுகோள்' என்ற வீரவிளையாட்டிற்குரிய எருதுகளைப் பெண்கள் வளர்த்து மகிழ்ந்தனர். குயில், மயில், புறா, மான் குட்டிகள், குரங்குக் குட்டிகள், வளர்ப்புக்குரிய பறவைகளாகவும் விலங்குகளாகவும் விளங்கியுள்ளன. உடல் உறுப்பு இயக்க விளையாட்டாகும். இவ்விளையாட்டுக் குறித்த செய்திகளைப் பெரும்பாணாற்றுப்படை, குறுந்தொகைப் பாடல் வரிகள் பின்வருமாறு விளக்குகின்றன.*

கோழி சேக்கும் கூடுடைப்புதவு வைத்து (பெரும்பாண் 117)

உய்த்தனர் விடாஅர் பிரித்திடை களையார்
குப்பைக் கோழித் தனிப்போர் போல
விளிவாங்கு விளியி னல்லது
களைவோ ரிலையா னுற்ற நோயே (குறுந் 305:2-5)

*பறவை, விலங்குகளை வளர்த்துத் தொடர்ந்து விளையாடும் பழக்கம் இருந்துள்ளதைப் பெருங்கதைச் செய்யுள் பின் வருமாறு கூறுகிறது.*

விரிசிலை மாதர் விளையாட்டு விரும்பும்
பள்ளியுட் டன்னொடு பலநாள் பயின்ற
குயிலு மயிலுங் குறுநடைப் புறவுஞ்
சிறுமான் பிணையு மறுநீங் கியூகமும் (பெருங்.39, 11-14)

பெண்கள் தங்கள் கைகளில் எப்பொழுதும் கிளிகளை வைத்துக் கொண்டிருந்தனர். அதற்குப் பாலும், பழமும் தந்துள்ளனர். பேசவைத்து மகிழ்ந்தது போன்ற செய்திகளைச் சிலப்பதிகாரமும், அவற்றிற்குப் பெயர் வைத்தும், குழந்தைகளாகக் கருதி வளர்த்ததும், விளையாட்டுக் காட்டியதும் பற்றிக் கம்பராமாயணமும் குறிப்பிடுகின்றது.

இக்காலத்தில் பறவைகள், விலங்குகள் வளர்ப்பது உயிரினும் இனியதாகக் கருதி மேற்கொள்ளப்பட்டு வருகிறது. விளையாட்டாக மட்டுமின்றித் தொழிலாகவும் கருதப்படுகிறது.

**பிசி-நொடி விளையாட்டு**

புதல்வரிடத்தும், தோழியிடத்தும் விலங்குகள் பற்றிய கதைகள் கூறிப் பெண்கள் பொழுது போக்குதல். இவற்றைப் பிசி என்றும் நொடி என்றும் கூறுவர்.

பாட்டு உரைநூலே வாய்மொழி பிசியே

. . . . . . . . . . . . . . . . . . . . . . . .

அவைதாம் நூலினான உரையினான

நொடியொடு புணர்ந்த பிசியினான

ஒப்பொடு புணர்ந்த உவமத்தானும்

தோன்றுவது சிறந்த துணிவினானும்

என்றிரு வகைத்தே பிசிநிலை வகையே

அதுவே தானும் பிசியொடு மானும்

(பொருள்:செய்யுளியல்:75158, 169 & 174)

என்பன தொல்காப்பிய நூற்பா பகுதிகள். இவ்விளையாட்டு மிகவும் பழைமையானது திட்டமிடாதது, வாய்ப்புக் கிடைக்கும் பொழுது பயன்படுத்திக் கொள்ளுவது மகிழ்ச்சி பொழுதுபோக்கு, ஊக்கப்படுத்துவது நினைவாற்றலைப் பெருக்குவது; மகிழ்ந்து வாய்விட்டுச் சிரிப்பது, யானை, புலி, கரடி, சிங்கம், நரி போன்ற விலங்குகளுடன் தொடர்புபடுத்திக் கதைகள் கூறுவது. இது அறிவு இயக்க விளையாட்டாகும். இவ்வகை விளையாட்டைச் சங்க இலக்கியம்,

பைம்பூண் சேய்ப் பயந்த மாமோட்டு

துணங்கை அம் செல்விக்கு அணங்கு நொடித்தாங்கு

(பெரும்பாண் 457-459)

என்ற பகுதியில் புலப்படுத்தியுள்ளது.

குழந்தைகள் மனத்தில் வீரத்தையும், ஈரத்தையும் வளர்க்க உதவியது. அச்சம் தவிர்க்கத் துணை செய்தது. குழந்தைகளின் ஆளுமைத் தன்மை வளரத் துணையாயிற்று. வரலாறு தெரிந்து கொள்ளும் ஆர்வம் தூண்டப்பெற்றது. இயற்கைச் சூழல் பற்றிய அறிவியல் கருத்துகள் அறிந்து கொள்ள இவ்விளையாட்டு வகை செய்தது.

காப்பியங்கள், சிற்றிலக்கியங்களில் இவ்விளையாட்டுக் குறித்த குறிப்புகள் காணப்படுகின்றன.

பைந்தொடி யாயமொடு பன்னொடி பகர்ந்து
கங்குல யாமத்தும் கண்படுத் திலையால்

(பெருங்கதை:39, உஞ்ஞை:சாங்கியத் 123-125)

என்ற பெருங்கதைப் பகுதி இரவில் நொடிகளை உரைத்து மகிழ்ந்து விடியல் வரை தூங்காமல் இருந்ததைக் குறிப்பிடுகிறது.

யானையும் புலியும் கூவற் கரடியும்
அரிமா ஏறும் நரிமா சூழ்ச்சியும்
................ஏனைய பிறவும்
தந்துரைக் கிளவியிற் றந்துறை முடித்த
தன்னிணை யாயம் பன்னொடி பகர

(பெருங்கதை:39, உஞ்சை :வயத்தகன் 28-32)

என்ற பெருங்கதைப் பகுதி யானை, புலி, கரடி, சிங்கம், நரி விலங்குகளுடன் இணைத்துக் கதைகள் கூறப்பட்டதை விளக்குகின்றன.

இவ்விளையாட்டு இன்றும் மழலைப் பள்ளிகளிலும், வீடுகளில் பெரியவர்களின் வாயிலாகவும் குழந்தைகட்குக் கதை கூறும் பகுதியாகவும், குழந்தைகளே விலங்குகளைப் போல வேடமிட்டுப் பாடியும், ஆடியும் விளையாடும் பகுதியாகவும் உள்ளது.

**புள் ஓட்டல்**

பறவைக் கூட்டத்தை ஓட்டுவது. விரட்டுவது விளையாட்டாகவும், தொழிலாகவும் மேற்கொள்ளப்பட்டது. தனியாகவும், கூட்டாகவும் ஆண்மக்கள் துணையுடனும் செய்யப்பட்டது. உழைத்து உண்ண வேண்டிய நிலையிலிருந்த பெண்கள்

விளையாட்டாகக் கருதுவதைவிடத் தொழிலாக நினைத்தனர். அரச குடும்பம், செல்வச் செழிப்புள்ள குடும்பத்துப் பெண்கள் விளையாட்டாகக் கருதினர்.

திட்டமிட்டது, பொழுதுபோக்கானது. பாடிக் கொண்டே நிகழ்த்துவது. கவண் தட்டை போன்ற கனமில்லாத கருவிகளைப் பயன்படுத்துவது, பூங்கொத்து, தழைக் கொத்துத் தாங்கி 'ஆயோ' போன்ற ஒலிக் குறிப்புகளை வெளியிட்டு விரட்டுவது. கைதட்டி ஓசை எழுப்பி மகிழ்வது. உடல் உறுப்பு இயக்கத்தோடு அறிவு இயக்கமும் சார்ந்த விளையாட்டு. புள் ஓட்டுதலுக்காக ஒருத்தி, தன் கையில் பூங்கொத்தை ஏந்தி நின்றதையும், ஆயோ என்று கூவியதையும், கைபுடைத்துப் பறவைகளை ஓட்டியதையும் சங்க இலக்கியங்கள் பின்வருமாறு புலப்படுத்துகின்றன.

வள்ளுகிர்த் தெள்விளி யிடையிடைப் பயிற்றிக்
கிள்ளை யோப்பியுங் கிளை யிதழ் (மதுரை 101-102)
நல்கோட் சிறுதினைப் படுபுள் ஒப்பி
எல்பட வருதியர் எனநீ விடுத்தலின் (மேற்படி. 38-39)
பெருவரை அடுக்கத்துக் குரீஇ ஒப்பி
இன் இசை ஓரா இருந்தனமாக (அகம் 388)
பெருநீர் அழுவந்து எந்தை தந்த
கெழுமீன் உணங்கற் படுபுள் ஒப்பி
எக்கர்ப் புன்னை இன்நிழல் அசைஇ
செக்கர் ஞெண்டின் குண்டு அளைகெண்டி (மேற்படி. 20)

பறவைகளைப் பார்த்து மகிழுதல் இனிய பொழுது போக்கு கற்பனை தோன்றப் பாடும் திறமை வளர்ந்தது. உடல் திறன் உறுதிக்கு உதவியது. திறமை வெளிப்பாட்டுக்கும் காவல் திறனுக்கும் சான்றாக இருந்தவற்றை இவ்விளையாட்டின் பயன்களாகக் கொள்ளலாம்.

தொடர்ந்து காப்பியங்கள் குறிப்பாகச் சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், பெருங்கதைகளில் சான்றுகள் உள்ளன.

நினை விளை சாரற் செவ்வாய்ச் சிறுகிளி மாத ரோப்பப்
(சீவக 1498)

அரச மகள் கேமசரி விளையாட்டிற்காகக் கிளிகளை ஓட்ட அவளுக்கு உதவ சீவகன் வந்ததாகக் குறிப்புக் காணப்படுகிறது.

நிணங்கொள் புலாலுணங்கனின்று புள்ளொப்புத றலைக் கீடாகக்
கனங்கொள் வண்டார்த்துலாங் கன்னி நறுநாழல் கையிலேந்தி

(சிலம்பு. கானல்வரி 9)

புள் ஓட்டுதலுக்காகப் பூங்கொம்பைக் கையிலேந்தி ஒருத்தி விளையாடியதைச் சிலப்பதிகாரம் கூறுகிறது. இக்காலத்தில் இவ்விளையாட்டு இன்றும் கிராமப்புறங்களில் பெண்களால் விளையாடப்படுகிறது.

**மலர்கொய்தலும் மாலை தொடுத்தலும்**

மரங்களிலும், கொடிகளிலும் மலர்ந்துள்ள பலவகை மலர்களைப் பறித்தல்-மாலையாகத் தொடுத்தல். திட்டமிட்ட விளையாட்டுச் சேர்ந்து விளையாடுவது, பாடிக் கொண்டே மலர்களைப் பறிப்பது போட்டி போட்டுக் கொண்டு பறிப்பது. ஆடையாகத் தைப்பது-அணிகலன்களாக அணிந்து கொள்ளுவது. எதிர்பாராத சில விளைவுகளைச் சந்திப்பது-சமாளிப்பது கற்பனைத் திறம்பட பொருளோடு செய்வது. தாங்களே சூடிக் கொள்வது. தெய்வத்திற்குச் சூட்டுவதாக வேண்டிக் கொள்ளுவதாகவும் இவ்விளையாட்டு அமைந்துள்ளது. இது ஒரு உடல் உறுப்பு இயக்க விளையாட்டாகும். இவ்விளையாட்டுக் குறித்த செய்திகளை விளக்கும் சங்கப்பாடல் வரிகள் பின்வருமாறு.

| | |
|---|---|
| பைந்தழை மா மகளிரொடு | (பட்டினப் 91) |
| கொடுங்கான் மாமலர் கொய்து | (பெரும்பாண் 216) |
| பூ கொய் மகளிர் | (குறுந் 26:3) |
| கொய் தரு தளிர் சேர்த்து | (ஐங்குறு 216:5) |
| கொடும் கழி மருங்கு இன் அடும்பு | |
| மலர் கொய்து பின் | (நற் 349:2-3) |
| கொய்து ஒழி மலர் பின் சேர்த்து | (அகம் 38:14) |
| நறும்பூ கொய்யும் | (மதுரை 297) |
| தாது சேர் பல மலர்கொய்யும் | (குறுந் 311:6) |
| வகை வகை மகளிர் வன்கை கொய்யும் | (பதிற்று 29:2) |

*பிற்கால இலக்கியங்களில் குறிப்பாகக் காப்பியங்களில் கம்பராமாயணத்தில் "பூக்கொய் படலம்" உள்ளது. நைடதத்தில் "போது கொய்படலம்" காணப்படுகிறது. பலநிறப் பூக்களைக் கொய்தலால் பெண்களின் மெல்லிய விரல் சிவந்ததாகச் சீவக சிந்தாமணி (1643) குறிப்பிடுகிறது. மலர்களைக் கொய்வதுடன் அவற்றைப் பலவகைகளில் மாலைகளாகத் தொடுத்ததைப் பெருங்கதைப் பகுதி பின்வருமாறு குறிப்பிட்டுள்ளது.*

கத்திகைத் தொகுத்தும் பித்திகை பிணைத்தும் -29

சுனைமலர்க் குவளை குற்றுச் சூழ் மலர்க் கண்ணி சூட்டி -1495

*இக்காலத்தில் மலர் பறித்தல், மாலையாகத் தொடுத்தல் விளையாட்டாக மட்டுமன்றித் தொழிலாகவும் மேற்கொள்ளப்பட்டுள்ளது.*

**வள்ளை**

*உரலில் ஏதாவதொரு தானியம், அல்லது இடித்துப் பயன்படுத்தக் கூடிய ஒன்றை இட்டு, பாடிக் கொண்டு உலக்கையால் குற்றி மகிழும் ஒரு வகை மகளிர் விளையாட்டு. இது விளையாட்டாக மட்டுமன்றி இல்லத்திற்குப் பயனாகும் பொருட்களைத் தயாரிக்கவும் பயன்பட்டுள்ளது. உலக்கைப் பாட்டு, உரற்பாட்டு, அம்மனை வள்ளை என்றும் குறிக்கப்பட்டுள்ளது. இது உடல் உறுப்பு இயக்க விளையாட்டாகும். இவ்விளையாட்டுக் குறித்த செய்திகளைச் சங்க இலக்கியப் பாடல் வரிகள் பின்வருமாறு தெரிவிக்கின்றன.*

தினைகுறு மகளி ரிசைபடு வள்ளையுஞ்

(மலைபடு 342)

பாஅடி உரல பகுவாய் வள்ளை (குறுந் 89:1)

வளைக் கை மகளிர் வள்ளை கொய்யும்

(பதிற்று 29:2)

நம் வள்ளையுள்

ஒன்றி நாம் பாட (கலித் 41:40-41)

நாம்

வள்ளை அகவுவம் வா இருளை 1 நாம்

வள்ளை, அகவுவம் வா (கலித் 42:7-9)

வந்தூம்பு வள்ளை மயக்கித் தாமரை (அகம் 46:5)

பிணங்களில் வள்ளை நீடிலைப் பொதும் பின்

(மேற்படி 256:1)

மயங்கு வள்ளை மலராம் (புறம் 16:13)

செறுவின் வள்ளை சிறுகொடி (மேற்படி 399:6)

*பெண்களின் உடல் வலிமையைப் பெருக்கியதோடு பாடும் ஆற்றலும் வெளிப்பட ஏதுவாகியது. தனக்கென வாழாமல் மற்றவர்களுக்காகவும் தொழில் மேற்கொள்ளத் தூண்டியது. இவ்விளையாட்டின் சிறப்பாகும்.*

*கரும்பு, பவழம், யானைக் கொம்பு என்பனவற்றை உலக்கைகளாகக் கொண்டு முத்துக்களை உரலில் இட்டு அரசர்களைப் பற்றிப் பாடியவாறு குற்றி விளையாடிய நிகழ்ச்சி. 'வள்ளைப் பாட்டு' என்ற ஒரு பகுதியாக சிலப்பதிகாரத்தில்,*

தினைக்குறு வள்ளையும் புனத்தெழு விளியும்

(சிலப்பதிகாரம் 25:26)

குன்றாச் சிறப்பிற் கொற்ற வள்ளையும் (மேற்படி 25:145)

*என்று கூறப்பட்டுள்ளது.*

மகளிரொடு மரீஇ வெங்கண் மறவர் புகழ்ந்திடிக்கு

மம் மனை வள்ளை (39:இலாவான : உண்டாட்டு :51-52)

*என்ற பெருங்கதை வரிமூலம் மகளிருடன் மறவரும் பங்கெடுத்து விளையாடிய செய்தி கிடைக்கிறது. நாட்டுப்புறங்களிலும் தொழிலாகவும், விளையாட்டாகவும் இன்றும் இவ்விளையாட்டு மேற்கொள்ளப்பட்டுள்ளது.*

### 4.3. நாட்டுப்புற விளையாட்டு வகைகள்

### 4.3.1. உடல்திறன் விளையாட்டுக்கள்

1. *புளியங்கொட்டை தாய விளையாட்டு*
2. *கல்லாங்காய்*
3. *ஊஞ்சல்*
4. *சில்லுக்கோடு*

**ஊஞ்சலாட்டம்**

கிராமப்புறங்களில் அறுவடை காலங்களில் களத்து மேட்டை விளையாட்டுக் களமாக்கி விளையாடும் ஆட்டங்களுள் ஊஞ்சலாட்டமும் ஒன்று. ஆட்டம் ஒரே முறையாக அமைவதினால் கலை என்று கூறுவதை விட "ஓர் இன்ப விளையாடல்" என்று சொல்வதே பொருந்தும். ஊஞ்சலைப் பற்றிய குறிப்புக் குறிஞ்சிக் கலியின் முதற்பாடலில் இடம்பெற்றுள்ளது. இதிலிருந்து சங்க காலத்திலும் இந்த ஆட்டம் இருந்ததாக அறியலாம். பெரும்பாலும் பெண்களே பங்கு கொள்வர். மிக எளிதாக ஆடக்கூடியது. ஆயினும் சில சமயம் ஆண்களும் ஆடுகின்றனர். அவர்கள் ஆடும் போது ஆட்டத்தின் வேகமும், முறையும் மாறிவிடுவதைக் காண முடிகிறது.

வாய்ப்பான மரக்கிளைகளில் இரண்டு கயிறுகளைக் கட்டித் தொங்க விடுவர். கயிறு, வைக்கோல் புரியால் முறுக்கப்பட்டிருக்கும். தொங்கும் பகுதியில் ஒரு பலகையை இணைத்து அமருவதற்கு வசதி செய்வர். அதில் ஒன்று முதல் நான்கு பெண்கள் அமர்ந்து கயிற்றைப் பலமாகப் பிடித்துக் கொண்டு ஆடுவர். ஒருவருக்கு மேல் ஆடும் போது இரு பக்கமும் மாறி மாறி அமர்ந்து கொள்வர். கால் உந்தலால் ஊஞ்சலை அங்கும் இங்கும் வேகங் கொள்ளுமாறு செய்வர். ஊஞ்சலை ஊசல் என்று கூறுவர்.

தனிப்பட்ட நோக்கம் எதுவும் ஊஞ்சலாட்டத்திற்கு இருப்பதாகத் தோன்றவில்லை. சமுதாயக் கொண்டாட்டத்தை மிக மகிழ்வுடன் அனுபவிப்பதற்கே இவ்விளையாடல் நடைபெறுகிறது.

### 4.3.2. அறிவுத்திறன் விளையாட்டுக்கள்

1. தாயம்
2. பல்லாங்குழி
3. பரமபதம்
4. அந்திக்கடை சந்திக்கடை

**பரமபதம்**

*ஏகாதசி திருநாளன்று இரவு கண்விழிப்பதற்கு 'பரமபதம்' என்ற பட விளையாட்டினை ஆடுகின்றனர். தாயக்கட்டை தான் கருவி.*

*ஏகாதசி அன்று விரதமிருந்து கண்விழித்து விடியற்காலையில் எழுந்து வீட்டினைத் தூய்மை செய்து கோலமிட்டு ஏழுகாய்கறி வகைகளைப் பயன்படுத்திக் கறி சமைத்துப் பொழுது புலர்வதற்குள் பூசை செய்து அனைவருக்கும் உணவு படைப்பர். அன்று பகற்பொழுதும் உறங்கக் கூடாது. அவ்வாறு செய்தால் சொர்க்கம் (பரமபதம்) தனக்குக் கிடைக்கும்என்பது ஐதீகம்.*

*இக்காலக் கட்டத்தில் கண் உறக்கம் போக்க, பாவவினைகள் தீரப் பரமபதப் படவிளையாட்டினை விளையாடுவர். அப்படத்தில் சில கட்டங்கள் வரும் பொழுது ஏணிமரம் படம் இருக்கும். போடும் எண் ஏணி இருக்கும் இடத்திற்கு வந்தால் அந்த ஏணி வந்த எண் வரை உயர்ந்து உள்ளதோ அந்தக் கட்டத்தில் நம் காயை உயர்த்தி வைக்க வேண்டும். சில கட்டங்களில் பாம்புப்படம் இருக்கும் காயை அந்தக் கட்டத்தில் வைக்கும். நிலை வந்தால் அதன் வால் பகுதி கீழே எந்த எண்ணில் முடிகிறதோ அங்கே கீழிறக்கிக் காயை வைக்க வேண்டும்.*

*சிலர் தன் காயினை ஏணியில் ஏற்றிக் கொண்டே செல்வர். நல்வினை என்பர். சிலர் காய் இரண்டு கட்டம் மேல் சென்றால் உடனே கீழிறங்கும் நிலை வந்து விடும். இதிலிருந்து நாம் செய்யும் புண்ணியங்களுக்கு ஏற்ப உயர்வும், செய்யும் பாவங்களுக்கு ஏற்ப தாழ்வும் கிடைக்கிறது. வாழ்வு என்பது ஏற்றமும இறக்கமும் உடையது. இதை உணர்ந்து நடந்தால் பரமனின் திருவடி (பதம்) சேரலாம் என்ற உண்மைத் தத்துவத்தைப் பரமபதப்பட விளையாட்டு உணர்த்துகிறது.*

### 4.3.3. உடல், அறிவுத்திறன் சார்ந்த விளையாட்டுக்கள்

1. பல்லாங்குழி
2. தாயம்
3. கும்மி

4. கோலாட்டம்
5. கல்லாங்காய்

### கோலாட்டம்

கோலாட்டம் தமிழ்நாட்டின் பல பகுதிகளில் மிகவும் கோலாகலமாக ஆடப்பெற்று வரும் ஆட்டமாகும். இதில் இரண்டு கோல்கள் அல்லது கொம்புகளைப் பயன்படுத்தி ஒன்றுடன் ஒன்றை மோதி ஒலி எழுப்புவர். அடிக்கப்படும் கோல்களின் சிறப்புப் பற்றியே இந்த ஆடலுக்கு இப்பெயர் வரப் பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது. ஆண்களும், பெண்களும் கோலாட்டம் ஆடுவர் கால்களில் சதங்கையும் கட்டி இருப்பர்.

கோல்கள் இரு வண்ணமுடையவையாக இருக்கும். பொதுவாகச் சிவப்பும், பச்சையும் பூசி இருப்பார்கள். பெண்களே இதனைச் சிறப்பாக ஆடுவர் என்று கருதப்படுகிறது. இறைவனை வாழ்த்தி வணங்கும் பாடல்களைப் பாடுவதற்காகவே இந்த ஆடல் முதன்முதலில் பயன்பட்டது. தீபாவளியைத் தொடர்ந்து வரும் அமாவாசை நாளன்று கோலாட்டம் தொடங்கப்படும். அதைத் தொடர்ந்து பத்து நாட்கள் ஆட்டம் நடைபெறும். வீட்டுக்கு வீடு பல பெண்கள் சென்று கோலாட்டம் ஆடுவர். ஆட்டம் வீட்டு முற்றத்தில் நடைபெறுவது பலருடைய பார்வைக்கு வசதியாக அமையும்.

பெண்கள் வட்டமாகச் சுற்றி நின்று கோலடித்து ஆடுவர். பாடல்களைப் பாடி ஆடல்களையும் ஆடுவர். குனிந்தும், நிமிர்ந்தும் கைகளை உயர்த்தியும், தாழ்த்தியும் கோல்களை அடிப்பதைப் பார்க்கலாம். தன் கையில் உள்ள கோல்களை அடிப்பதுடன் முன்பின்னுள்ளவர்களின் கோல்களையும் தட்டி ஒலி எழுப்புவர்.

வட்டத்தில் அனைவரும் சுற்றிச் சுற்றி வந்தவாறு ஆட்டம் நடைபெறும். அனைவரும் ஒரு ஒழுங்கைப் பின்பற்றி பாடலின் தாளத்துக்குத் தக்கவாறு கோல்களைத் தட்டி ஒலி எழுப்புவதே இந்த ஆட்டத்தின் சிறப்புக் கூறாகத் தோன்றுகிறது. தமிழ்நாட்டில் கோல்கள் சிறியதாகவும், குட்டையாகவும் இருக்கும். கோலாட்டம் சிறந்த உடற்பயிற்சி ஆடலாக அமைந்துள்ளது.

### 4.4. பெண்கள் - நாட்டுப்புற விளையாட்டுக்கள்

*நாட்டுப்புறப் பெண்கள் விளையாட்டுக்களைப் பின்வருமாறு பட்டியலிடலாம்.*

1. *அந்திக்கடை-சந்திக்கடை*
2. *ஊஞ்சல்*
3. *கல்லாங்காய்*
4. *கும்மி*
5. *கோலாட்டம்*
6. *சில்லுக்கோடு*
7. *தாயம்*
8. *பல்லாங்குழி*
9. *பரமபதம்*

**அந்திக்கடை-சந்திக்கடை**

*இது மாலை நேர விளையாட்டு, இரு குழுக்களாக விளையாடுவர். ஒரு குழுவிற்கு ஐவருக்கு மேல் இருப்பர். ஒவ்வொரு குழுவிற்கும் ஒரு தலைவர் தேர்ந்தெடுக்கப்படுவர். இருவராகச் சென்று உத்தி பிரித்து ஒருவர் பூப்பெயர் அல்லது வண்ணம் அல்லது படப்பெயர் வைத்துக்கொண்டு வந்து தலைவர்களிடம் கூறுவர். தலைவர்கள் 'உத்தி பிரித்தல்' முறையில் ஆட்களைத் தேர்வு செய்து கொள்வர்.*

*எதிர் எதிராக குழுக்களை அமரச்செய்தல் வேண்டும் குழுத்தலைவர் அந்தக் குழுவிற்குப் பின் நிற்க வேண்டும். கையில் ஏதோ ஒரு பொருளை வைத்துக் கொண்டு குழு உறுப்பினர்களை நெருக்கமாக அமரச் செய்து இருகைகளையும் பின்புறமாக வைத்துக் கொள்ள வேண்டும். குழுத் தலைவர் எதிர்க்குழுத் தலைவரைப் பார்த்து,*

அந்திக்கடை சந்திக்கடை
ஆவாரம் பூத்தக் கடை
வெள்ளி முளைச்ச கடை
டாப்பு டுப்பு
கள்ளன் வர்றான்
கதவை சாத்திக் கோ

*என்று கூறி தன் உறுப்பினர் ஒருவர் கையில் வைத்து விடுவார்.*

எதிர்க்குழுத்தலைவர் எந்த உறுப்பினர் கையில் வைத்த பொருள் உள்ளது என்பதைத் தெரிவிக்க வேண்டும். எதிர் அணித்தலைவர் சரியாகக் கூறி அக்குழு உறுப்பினர் ஒருவர் வெற்றிக்கு அடையாளமாக ஒரு காலை நீட்டி ஒரு புள்ளிக் கணக்கு வைத்துக் கொள்வார்.

தோல்வியுற்றால் வினவியருக்குப் புள்ளி அவர் உறுப்பினர் காலை நீட்டிக் கொள்வார். மீண்டும் வென்றவர் அதே பாடலைக் கூறி ஆட்டத்தைத் தொடர்வார். அதிகம் புள்ளிகளைப் பெறுபவர் உயர்ந்தவராகக் கொண்டு ஒரு உறுப்பினருக்கு மூன்று நகைப்பெயர் வைத்துக் கொள்ள வேண்டும். தோற்றவர் மூன்று பூப்பெயர் வைத்துக் கொள்ள வேண்டும். தலைவர் இருவரும் மாறிக் கொள்வர். வெற்றிப் பெற்றத் தலைவர் எதிர் உறுப்பினர் கண்களைப் பொத்திக் கொண்டு தன் உறுப்பினர் நகைப்பெயரைச் சொல்லி அழைத்து தலையில் குட்டச் செய்ய வேண்டும். பின்னர் கண்ணைத் திறந்து, குட்டியவரைச் சரியாகச் சொல்ல வேண்டும். சொன்னால் அவருக்குப்புள்ளி. சொல்லாவிட்டால் இரண்டு முறை வாய்ப்பு கொடுப்பர் அதிலும் சொல்லா விட்டால் உறுப்பினர் குழுவிலிருந்து வெளியேற்றப்படுவார். அதிக உறுப்பினர் உடையவர் வெற்றி பெறுவார். குறைந்த உறுப்பினர் உடையவர் தோல்வி அடைவர்.

இந்த விளையாட்டு மாலைநேர விளையாட்டாகும். வீட்டு வேலைகளை முடித்துவிட்டு வீண்பேச்சிற்கு இடமின்றி கூடி விளையாடும் உணர்வை இவ்விளையாட்டில் பெறுகின்றனர். மேலும் கூர்ந்து நோக்கும் தன்மை, நினைவாற்றல் பல பூக்கள், வண்ணங்கள், ஆற்றல் உள்ள பறவைகள், விலங்குகள் தலைவர்கள் பெயர்களை அறிதல் முதலிய தன்மைகள் கிடைக்கின்றன. வெற்றி பெற வேண்டும் என்ற உயர்ந்த நோக்கமும் ஏற்படுகிறது.

**ஊஞ்சலாட்டம்**

கிராமப்புறங்களில் அறுவடைகாலங்களில் களத்து மேட்டைக் களமாக்கி விளையாடும் ஆட்டங்களுள் ஊஞ்சலாட்டமும் ஒன்று. ஆட்டம் ஒரே முறையாக அமைவதில்லை. கலை என்று கூறுவதைவிட "ஓர் இன்ப விளையாடல்" என்று சொல்வதே பொருந்தும். ஊஞ்சலைப் பற்றிய குறிப்புக் குறிஞ்சிக் கலியின் முதற்பாடலில்

இடம்பெற்றுள்ளது. இதிலிருந்து சங்க காலத்திலும் இந்த ஆட்டம் இருந்ததாக அறியலாம். பெரும்பாலும் பெண்களே பங்குகொள்வர். மிக எளிதாக ஆடக் கூடியது. ஆயினும் சில சமயம் ஆண்களும் ஆடுகின்றனர். அவர்கள் ஆடும்போது ஆட்டத்தின் வேகமும் முறையும் மாறி விடுவதைக் காணமுடிகிறது.

வாய்ப்பான மரக்கிளைகளில் இரண்டு கயிறுகளைக் கட்டித் தொங்க விடுவர். கயிறு, வைக்கோல் புரியால் முறுக்கப்பட்டிருக்கும். தொங்கும் பகுதியில் ஒரு பலகையை இணைத்து அமருவதற்கு வசதி செய்வர். அதில் ஒன்று முதல் நான்கு பெண்கள் அமர்ந்து கயிற்றைப் பலமாகப் பிடித்துக் கொண்டு ஆடுவர். ஒருவருக்குமேல் ஆடும்போது இருபக்கமும் மாறிமாறி அமர்ந்து கொள்வர். கால் உந்துதலால் ஊஞ்சலை அங்கும் இங்கும் வேகங்கொள்ளுமாறு செய்வர். ஊஞ்சலை 'ஊசல்' என்றும் கூறுவர்.

தனிப்பட்டநோக்கம் எதுவும் ஊஞ்சலாட்டத்திற்கு இருப்பதாகத் தெரியவில்லை. சமுதாயக் கொண்டாட்டத்தை மிக மகிழ்ச்சியுடன் அனுபவிப்பதற்கே இவ்விளையாடல் நடைபெறுகிறது.

**கல்லாங்காய்**

சிறுசிறு கற்களைக் காயாக இவ்விளையாட்டிற்குப் பயன்படுத்துவதால் இப்பெயர் வந்திருக்கலாம் (கற்களை நன்கு தேய்த்து ஆடுவதற்கு ஏற்றவாறு வழுவழுப்பாகச் செய்து கொள்வர்).

ஏழு காய்கள் இவ்விளையாட்டில் பயன்படுத்தப்படுகின்றன. காய்கள் சிறுகற்களாக அமைகின்றன. கீழே வைக்கப்பட்டுள்ள காய்களில் ஒன்றைக் கையில் எடுத்துக் கொண்டு அதை மேல் நோக்கி எறிதல் வேண்டும் மேலெறியப்பட்ட காயானது கீழே வருவதற்குள் கீழ் வைக்கப்பட்டுள்ளதிலிருந்து மற்ற காய்கள் அசையாமல் ஒரு காயை விரைவாக எடுத்தல் வேண்டும்.

இதில் விரைவும், நிதானமும் தேவை, கீழுள்ள காய்களைத் தொட்டு எடுக்கும் போது, எடுக்கும் காயைத் தவிர மற்றயவை அசைந்தால் விளையாட்டில் தோற்றவராகக்

கருதப்பட்டு அடுத்தவர் ஆட வாய்ப்புத் தரப்படுகிறது. இப்படியே ஆட்டம் தொடர்கிறது. பத்து ஆட்டங்கள் ஆடப்படுகின்றன. ஒவ்வொரு ஆட்டத்திற்கும் ஒரு விதிமுறை உள்ளது. முதல் ஆட்டத்தில் ஒருகாய் மேல் எறியப்பட்டு ஒருகாய் கீழிருந்து எடுக்கப்பட வேண்டும். அதன்பின் தொடர்ச்சியாக இரண்டு இரண்டாக, மூன்று மூன்றாக, நான்கு இரண்டாக, ஐந்து ஒன்றாக, சதுர வடிவில் நான்கு காய்களும் நடுவில் ஒன்றும், விரல் இடுக்கில் ஒன்று வைத்து ஒருகாய் மேலெறிந்து விட்டு விட்டுப் பிடித்தல் எனவும் விளையாட்டு அமைகிறது.

ஒவ்வொரு ஆட்டத்திற்கும் ஒரு பாடல் பாடப்படுகிறது. எழுத்து மாற்றம், சொல் மாற்றம் உண்டு.

ஆலா பொறுக்கி அடிமடி கட்டி
கிண்ணம் பொறுக்கி
கீரிபுள்ள தாச்சி
தாச்சிண்ணா தாச்சி
மதுரை மீனாட்சி
ஈரி ரெண்டு
மாதா ரெண்டு
மல்லிகைப் பூச்செண்டு....

இவ்வாறு பாடலோடு இந்த ஆட்டம் நிறைவு பெறுகிறது.

பொதுவாக இவ்விளையாட்டு அதிக விழுக்காடு மகிழ்ச்சியான பொழுது போக்கிற்கும் பெண்களை வீட்டிற்குள்ளே இருத்திப் போடவும் பயன்பட்டிருக்கிறது என்ற கருத்தை அறிய முடிகிறது. இருப்பினும் ஒவ்வொரு கட்ட ஆட்டப்பாடலையும் கவனிக்கும் போது அந்தந்த சமூகச் சூழலும், சமூகத்தின் நிகழ்வும் சமூகப்பழக்க வழக்கங்களும்கூட இப்பாடல்களில் புகுத்தப்பட்டுள்ளன என்பதை உணர முடிகிறது. நிச்சயமாக ஏதோ ஒரு வரலாற்று நிகழ்வை இப்பாடல்கள் கொண்டிருக்கின்றன.

**கும்மி**

தமிழக நாட்டுப்புற உழைக்கும் வர்க்கப் பெண்களிடையே பொதுவாகக் காணப்படும் விளையாடல் வகை இது. பேதையரும், பெதும்பையரும் வட்டமாகச் சுற்றி

வந்து பாடிக் கை குவித்தடிக்கும் கூத்து கும்மி எனப்படும். கை குவித்தடிக்கும். விளையாட்டு ஆதலால் (கும்முதல் -கைகுவித்தடித்தல்) இது கும்மி எனப்பட்டது. குழுமி என்ற சொல்லினின்றும் 'கும்மி' என்ற சொல் உருவாகியிருக்க வேண்டும் என்ற அ.கி.பரந்தாமனார் கருத்தும் ஈண்டு எண்ணத்தக்கது.

### சூழல்

கும்மி திருவிழாக்காலங்களில் இரவு பகல் இருவேளைகளிலும், பிற நாள்களில் நிலவொளியிலும் பொழுதுபோக்குக்காகப் பெண்களால் விரும்பி ஆடப்படுகின்றது. பருவமுற்ற பெண்களுக்குச் சடங்கு நிகழ்த்தும் போதும் கும்மி கொட்டுதல் உண்டு. இது பெண்கள் விளையாட்டே ஆயினும் கோயில் திருவிழாக்கள் முடிந்த மூன்றாம் நாள் நிகழ்ச்சிகளில் ஆண்களும் கும்மியடிப்பதைக் காணலாம். ஆண்கள் கும்மியை 'ஒயில் கும்மி' என்பர்.

### கும்மியின் வேறுபெயர்கள்

அகநானூற்றில் 'கொப்பி' என்றும், சீவக சிந்தாமணியில் 'கொம்மை' என்றும் கும்மி குறிப்பிடப்படுகிறது. பாடலோடு கைக்கொட்டும் ஓசையும் சேரும் போதுதான் கும்மிப்பாடல் முழுமை பெறுகிறது.

கும்மியாட்டத்தின் போது முன்னொருவர் பாட அதைத் தொடர்ந்து ஏனையோர் பாடும் "முன்பாட்டுப் பின்பாட்டு" முறையில் பாடல் பாடப்படும்.

கும்மியாட்டத்திற்கென்று தனிவகைப் பாட்டுண்டு, இது 'கும்மியடி' என்று தொடங்குவதோடு, அத்தொடரையே உருவிலும் (சரணத்திலும்) மகுடமாகக் கொண்டிருக்கும் என்பார் ஞா.தேவநேயன்.

சமயக் கருத்துக்கள், வரலாற்று நிகழ்ச்சிகள், புராணக் கதைகள் வாழ்வியல் நிகழ்வுகள், சீர்திருத்தக் கருத்துக்கள், மருத்துவ செய்திகள் முதலியவற்றைக் கும்மிப்பாடல்களின் பொருண்மையாகக் கூறலாம்.

வாழ்வியலின் அன்றாட நிகழ்ச்சிகள் கும்மிப் பாடல்களாக முகிழ்ப்பவை. உழைக்கும் வர்க்கத்தின் வாழ்வியலைப் பிரதிபலிக்கும் காதல், திருமணம், கேலி, குடும்பச்சண்டை, வறுமை, துயரச் சம்பவங்கள் முதலிய பாடுபொருளாக அமைந்திருப்பதைக் காணலாம்.

நாட்டுப்புறப் பாடல்கள், வரலாற்று உண்மைகளைத் தெரிந்து கொள்ள உதவுகின்றன. கும்மிப்பாடலின் எளிமையான வடிவமும், இனிமையான இசையும் வாய்மொழியாகத் தோன்றிய நாட்டுப்புற மக்களின் வாழ்வியல் தொடர்பாக அமைந்துள்ளது.

வாருங்கடி தோழிப் பெண்களா
மகிழ்ந்து கும்மி யடித்தாடச்
சேருங்கடி பெண்களெல்லாம்

என்ற பாடலில் பெண்களை மட்டும் கும்மியடிக்க அழைப்பதாகக் காணலாம். கும்மிப்பாடல்கள் இன்பத்தைத் தருவதுடன் உடற்பயிற்சியாகவும் உள்ளது.

பெண் தெய்வங்களின் கொடை விழாக்கள் நடைபெறும் பொழுது பத்து நாட்கள் தொடர்ந்து பெண்களால் கும்மி நடத்தப்படுகிறது. பொங்கலுக்கு மறுநாளைக் காட்டுப் பொங்கலாகவும் காணும் பொங்கலாகவும் மக்கள் கொண்டாடுகின்றனர். அன்று கும்மி அடித்து மகிழும் வழக்கம் பல ஊர்களில் உள்ளது.

**கோலாட்டம்**

கோலாட்டம் தமிழ்நாட்டில் பல பகுதிகளில் மிகவும் கோலாகலமாக ஆடப்பெற்று வரும் ஆட்டமாகும். இதில் இரண்டு கோல்கள் அல்லது கொம்புகளைப் பயன்படுத்தி ஒன்றுடன் ஒன்றை மோதி ஒலி எழுப்புவர். அடிக்கப்படும் கோல்களின் சிறப்புப் பற்றியே இந்த ஆடலுக்கு இப்பெயர் வரப்பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது. ஆண்களும் பெண்களும் கோலாட்டம் ஆடுவர். கால்களில் சதங்கையும் கட்டி இருப்பர்.

கோல்கள் இருவண்ணமுடையவையாக இருக்கும். பொதுவாகச் சிவப்பும் பச்சையும் உடையதாக இருக்கும். பெண்களே இதனைச் சிறப்பாக ஆடுவர் என்று

கருதப்படுகிறது. இறைவனை வாழ்த்தி வணங்கும் பாடல்களைப் பாடுவதற்காகவே இந்த ஆடல் முதன்முதலில் பயன்பட்டது. தீபாவளியைத் தொடர்ந்து வரும் அமாவாசை நாளன்று கோலாட்டம் தொடங்கப்படும். அதைத் தொடர்ந்து பத்து நாட்கள் ஆட்டம் நடைபெறும் வீட்டுக்கு வீடு பல பெண்கள் சென்று கோலாட்டம் ஆடுவர். பாடல்களைப் பாடி ஆடல்களையும் ஆடுவர்.

கோல்களை அடிப்பதும், முன்னும் பின்னும் திரும்பிமாறி அடிப்பதுமாக ஆட்டம் நடைபெறும். குனிந்தும், நிமிர்ந்தும் கைகளை உயர்த்தியும் தாழ்த்தியும் கோல்களை அடிப்பதைப் பார்க்கலாம். தன் கையில் உள்ள கோல்களை அடிப்பதுடன் முன்பின்னுள்ளவர்களின் கோல்களையும் தட்டி ஒலி எழுப்புவர்.

வட்டத்தில் அனைவரும் சுற்றிச் சுற்றி வந்தவாறு ஆட்டம் நடைபெறும். அனைவரும் ஒரு ஒழுங்கைப் பின்பற்றி பாடலின் தாளத்துக்குத் தக்கவாறு கோல்களைத் தட்டி ஒலி எழுப்புவதே இந்த ஆட்டத்தின் சிறப்புக் கூறாகத் தோன்றுகிறது.

பின்னல் கோலாட்டம் என்ற ஒருவகை ஆட்டம் தமிழ்நாட்டில் நடக்கிறது. ஆடுவோரின் கரங்கள் கயிறுகளால் கட்டப்பட்டு உயரே ஓரிடத்தில் முடியப்பட்டிருக்கும். கோலாட்டம் ஆடி அவர்கள் சுற்றி வரவர விதவிதமான பின்னல்கள் கயிறுகளில் போடப்படும் மறு ஆட்டத்தில் அது பிரிக்கப்பட்டு விடும். இவ்வாறு பலவிதமாக ஆடுவதைப் பின்னல் கோலாட்டம் என்று கூறுவர். கோலாட்டம் சிறந்த உடற்பயிற்சி ஆடலாக அமைந்துள்ளது.

**சில்லுக்கோடு (நொண்டிக்கோடு)**

ஓட்டுச் சில்லைப் பயன்படுத்துவதால் சில்லுக்கோடு என்றும், நொண்டியடித்துக் கோடிட்டு விளையாடுவதால் நொண்டிக்கோடு என்றும் பெயர் பெற்றது.

**ஆடு கருவி**

நான்கு சமக் கட்டங்கள் கொண்ட நீள் சதுர அரங்கும் ஆளுக்கொரு சில்லும் கருவிகளாகப் பயன்படுகின்றன. அரங்கின் மேற்பகுதியான இடத்திற்கு மலை என்று பெயர்.




படத்தில் காட்டியவாறு அரங்கினை அமைத்துக் கொள்ள வேண்டும். முதலாவது, முதற்கட்டத்தில் சில்லையெறிந்து நொண்டியடித்து அந்தக் கட்டத்தைத்தாண்டி அடுத்த கட்டங்களை ஒவ்வோர் எட்டில் மிதித்துச் சென்று கடைசிக் கட்டத்திற்கு வெளியே காலூன்றி மீண்டும் முன்போல் நொண்டியடித்துக் கீழ் வந்து சில்லை மிதித்து வெளியே ஒரே எட்டில் மிதித்தல் வேண்டும்.

கட்டங்களின் வழியே செல்லும் போதும், மீளும் போதும் நொண்டியடிக்க வேண்டிய போதெல்லாம் நொண்டியடித்தே சென்று மீள வேண்டும். எறியப்பட்ட சில் கட்டத்திற்கப்பால் விழுந்தாலும், கட்டத்திற்குள் விழாமல் கோட்டின் மேல் விழுந்தாலும் நொண்டியடித்துக் கட்டத்திற்குள்ளும் வெளியேயும் ஒரே எட்டில் சில்லை மிதக்கத் தவறினாலும் கோட்டின் மேல் மிதித்தாலும், நொண்டியடிக்கும் போது தூக்கிய காலைக் கட்டத்திற்குள் ஊன்றினாலும், காலால் வெளியே தள்ளப்பட்ட சில் முதல் கட்டத்தினின்று, ஒரே எட்டில் மிதிக்க முடியாதவாறு நெடுந்தொலைவிற்குச் சென்றாலும் ஆடுபவர் தோற்றவராவார். அதன்பின் அடுத்தவர் ஆடல் வேண்டும். அடுத்தவரும் தவறினால் முன்னவர் மீண்டும் ஆடல் வேண்டும். இப்படியே ஆட்டம் முடியும் வரை இருவரும் மாறிமாறி ஆடுவர்.

நாலுக்கட்டத்திலும் சில்லெறிந்தாடிய பின் அகங்கையில் ஒரு முறையும், புறங்கையில் ஒரு முறையும் குத்து, கொழுக்கட்டை, கைக்கிடுக்கி, புறங்கால் இவ்வாறாகச் சில்லை வைத்துக் கொண்டு மலைவரை நொண்டியடித்துச் சென்று மீளவும் மலையில் காலூன்றிக் கொள்ளலாம்.

அதன்பின் தலைமேல் சில்லை வைத்துக் கொண்டும் சில்லையெறிந்து கண்ணை மூடிக் கொண்டும் கிச்சா, கினியா, காயா, பழமா? எனக் கேட்டபின்னர், மேட்டா, கீட்டா என்று சொல்லி குனிந்து இருகாலுக்கும் இடையே சில்லை ஒரு கட்டத்திற்குள் எறிய வேண்டும். அது எந்தக் கட்டத்திற்குள் விழுகிறதோ அக்கட்டத்தில். மூலைக் குறுக்குக் கோடுகள் கீறல் வேண்டும். அது பழம் எனப்படும் 'மச்சு' என்றும் கூறுவர்.

பழம் போட்ட கட்டத்திற்குள் எதிரியார் கால் வைத்தல் கூடாது. அதைத் தாண்டியே செல்ல வேண்டும். அக்கட்டத்திற்கு வெளியே வலப்புறத்தில் அல்லது இடப்புறத்தில் கட்டத்தை ஒட்டி ஓர் அரை வட்டம் அமைத்துக் கொடுக்கப்படும். அதற்கு 'யானையடி' என்று பெயர். இப்படி ஒவ்வொரு ஆட்டக்காரரும் தத்தம் பழக்கட்டத்தின் பக்கமாக எதிரியாருக்கு 'யானையடி' அமைத்துக் கொடுப்பர்.

ஒரு முறை பழம் போட்டவர் மறுமுறை முந்தியாடுவர் மறுமுறை பழத்திற்குச் சில்லெறியும் போது அது பழக் கட்டத்தில் விழுந்து விடின் தவறாகும்.

ஒருவரோ அல்லது இருவரோ எல்லாக்கட்டத்திலும் பழம் போட்டபின் விளையாட்டு கலைக்கப்பட்டு, மீண்டும் தொடங்கப்படும்.

இரட்டைக் கட்ட அரங்கு கீறி ஆடப்படும் சில்லி இரட்டைச் சில்லி எனப்பெறும். இருவர் இதை ஆடுவர். ஏரோப்பிளேன் சில்லுக்கோடு, ஆயிரங்கால் சில்லி, புலிச்சில்லி கைச்சில்லி என சில்லுக் கோட்டில் பலவகைகள் உண்டு.

**தாயம்**

தாயம் என்பதற்கு உரிமை என்று பொருள். (தாயத்தார்-உறவினர்-உரிமையுடையவர்) தொல்காப்பியர் கூறும் வல்லாட்டமும் குறள் கூறும் வட்டாட்டமும் இதனோடு தொடர்பு உடையன.

தாயம், பகடை, அட்டாபதம், சதுரங்கம் ஆகிய விளையாட்டுக்கள் ஏறக்குறைய ஒத்த தன்மையுடையன.

பலவகை தாயக் கட்டங்கள் உண்டு. நான்கு கட்டத்தாயம் எட்டுக் கட்டத்தாயம், பத்துக் கட்டத் தாயம் எனப் பகுத்துக் காணமுடிகிறது.

கட்டவிளையாட்டின் வளர்ச்சியே 'தாயம்'. போர்க்காலங்களில் ஒரு நாட்டில் இருந்து பிறிதோர் நாட்டிற்குப் படையெடுத்துச் செல்பவர் மலைப்பகுதிகளைத் தாண்டி போயினர். இவ்விளையாட்டில் வெட்டுதல், குத்துதல் (உதைபடுதல்) மலை போன்ற சொற்கள் போரைக் குறிக்கும்.

அதிகபட்சம் நால்வர் விளையாடலாம். இருவருக்குக் குறையாமல் விளையாடவேண்டும். தனித்தனியாகவும், ஜோடியாகவும் விளையாடலாம். எட்டுக் கோடிட்டு நான்கு மலை வெளிப்புறம், உள்புறம் நான்கு, மையத்தில் ஒன்றுமாகப் பெருக்கல் அடையாளம் இட்டுப் போடப்படும். படத்தில் காட்டியவாறு கட்டம் போட்டுக் கொள்ள வேண்டும்.



**கருவி**

*மரத்தால் செய்யப்பட்ட (அல்லது) பித்தளையால் செய்யப்பட்ட உருட்டுக் கட்டைகள் அல்லது சோழியால் விளையாடலாம்.*

*தாயக் கட்டையில் 1,2,3, கோடுகள் ஒரு பக்கம், மற்றொரு பக்கம் கோடின்றியும் அமைந்திருக்கும். யார் முதலில் ஆட்டம் தொடங்குவது என்பதற்கு பூவா? தலையா? போட்டுத் தேர்ந்தெடுக்கலாம்.*

*ஆறு புளியங்கொட்டைகள் (அல்லது) சிறு கற்கள் அல்லது சிறு குச்சிகள் உபயோகப்படுத்தலாம். இவற்றைக் காய்கள் (அல்லது) நாய்கள் என்றும் சொல்லலாம்.*

*தாயக்கட்டையை உருட்டும் போது ஓர் எண் மட்டும் இருந்தால் அதற்குத் தாயம் என்று பெயர். அது விழுந்தால்தான் ஆட்டம் தொடங்கலாம். தாயம் விழும்வரை, ஆட்டம் தொடங்க முடியாது. தாயம் விழுந்தபின் எந்தப் பக்கத்தில் அமர்ந்து இருக்கிறோமோ அப்பக்கம் பெருக்கல் அடையாளக் கட்டத்தில் காய் வைத்து ஆட்டம் தொடங்க வேண்டும். தாயத்திற்குப் பிறகு உருட்டும் போது 5 எண் வந்தால் காய் வைத்து ஆட்டம் தொடங்கலாம். வெட்டு ஆட்டம், வெட்டு கொடுக்காமல் சமத்து ஆட்டம் என்று இருமுறை உண்டு. காயை வெட்டியபின்தான் உள்கட்டத்தில் காயைக் கொண்டு போய் பழம் தின்ன முடியும். பெருக்கல் அடையாளக் கட்டத்திற்கு 'மலை' என்று பெயர். அதில் காய் இருந்தால் வெட்டமுடியாது. இருவர்காயும் ஒரே மலையில் இருக்கும் போது ஒருவர் காய் மூன்றாம் கட்டத்தில் இருந்தால் அடுத்தவர் மூன்று போட்டால் அந்தக் காய் வெட்டப்படும்.*

*வெட்டிய பிறகு வெட்டியவர் வெட்டாட்டம் ஆடுவர். எண்ணிக்கைக்கேற்ப காய்களைக் கட்டங்களில் நகர்த்திக் கொண்டு போகலாம். கட்டத்தின் (மையப்புள்ளியை) மையக் கட்டத்தை காய் அடைந்து விட்டால் பழம். ஆறு காயையும் மையத்தில் சேர்ப்பவர் வெற்றி பெற்றவராவர். காய் வெட்டுப்பட்டால் அடுத்துத் தாயம் அல்லது ஐந்து போட்டுதான் தொடங்க வேண்டும். ஒரே ஆட்டத்தில் இரண்டு காய்கள் வெட்டுப்பட்டால், தாயம் போட்டுப் பதியும்போது இரு காய்களையும் பதியலாம்.*

'சமத்து வெட்டு' என்று சொன்னால் வெட்டுக் கொடுக்காமல் எல்லாக் காய்களையும் கட்டத்தின் உள்பகுதிக்குக் கொண்டு சென்றால் வென்றவர் ஆவார். வெட்டி விளையாடினால் தான் ஆட்டம் விறுவிறுப்பாக இருக்கும்.

பாரதக் கதையே சூதாட்டம் பற்றி விளக்கும் மிகப்பழமையான விளையாட்டு; வேலை முடிந்து ஓய்வு நேரத்தில் விளையாடுவர். இரவில் ஆடக்கூடாது என்பர்.

**பல்லாங்குழி**

பதினான்கு குழிகளைக் கொண்ட, புளியங்கொட்டைகளை இட்டு ஆடும் அறிவுத்திறன் சார்ந்த வாய்ப்பு நிலை விளையாட்டே பல்லாங்குழி. பல்லாங்குழி என்பது பண்ணாங்குழி, பன்னாங்குழி, பல்லாங்குழி, பதிரைங்குழி, பரலாடும் குழி, பாண்டி எனப் பலவிதமான பெயர்களில் இடத்தினைப் பொறுத்து வழங்கப்படுகின்றன.

பல அழகிய குழிகளை வைத்துக் கொண்டு அந்த ஆட்டம் ஆடப்பெறுவதால் (பல்"அம்"குழி) பல்லாங்குழி என அழைக்கப்பட்டிருக்கலாம் என்பர்.[5]

பள்ளம்"குழி எனப் பிரித்துப்பூமியில் பள்ளந்தோண்டிக் குழியாக்கி கற்கள் இட்டு ஆடப் பெறுவதால் பள்ளாங்குழியென வந்திருக்கலாம். குழிகளின் எண்ணிக்கை பதினான்கு என்பதால் 'பதினாங்குழி' எனவும் 'பன்னாங்குழி' எனவும் திரிந்ததாகக் கூறுவர்.[6]

இக்கருத்து ஏற்றுக் கொள்ளத்தக்கதாய் இருப்பினும் சில இடங்களில் குழிகளின் எண்ணிக்கை மாறுபட்டிருக்கிறது. ஆனால் பெரும்பான்மை பதினான்கு குழிகளே உள்ளன. முத்து என்பதற்குப் பரலென்ற பெயரும் உண்டு. இதனைப் பாண்டியாட்டம் என்றும் வழங்குகின்றனர்.

---

5 எஸ்.நவராஜ் செல்லையா, விளையாட்டுக்களுக்குப் பெயர் வந்தது எப்படி, ப.48.

6 ஞா.தேவநேயன், தமிழ்நாட்டு விளையாட்டுக்கள், ப.93.

பல்லாங்குழி ஆட்டத்தில் பல வகைகள் உண்டு. அவையாவன: முத்துப்பாண்டி, எதிர்ப்பாண்டி, இராசாப்பாண்டி, காசிப்பாண்டி, கட்டுப்பாண்டி அல்லது அச்சரப்பாண்டி, சீதைப்பாண்டி, சரிப்பாண்டி அல்லது தள்ளுப்பாண்டி.

இருவர் ஆடும் இந்த ஆட்டத்தில் ஒவ்வொருவருக்கும் ஏழு குழிகள் என்ற விதத்தில் பிரிக்கப்பட்டு எதிரெதிர் அமர்ந்து ஆடுவர். ஒவ்வொரு குழியினுள்ளும் ஐந்து ஐந்து காய்கள் இடுவர். முதலில் ஆடுபவர் ஏதேனும் ஒரு குழியைப் பிரித்து அதன் வலப்புறக் குழியிலிருந்து தொடங்கி ஆடுவர் அக்காய் முடிந்தவுடன் அடுத்த குழியிலுள்ள காய்களைப் பிரித்தாடுவர். அப்பொழுது அடுத்த குழி வெறுமையாக இருந்தால் அதனைத் துடைத்து அடுத்துள்ள குழியின் காய்களை எடுப்பர். இதனைத் 'துடைத்து எடுத்தல்' என்பர். அவ்வாறு எடுக்கும் காய்க்குப் 'பாண்டி' என்று பெயர்.

ஒருவர் ஆடி முடிந்தவுடன் மற்றொருவர் ஆடுவார். வெறுமையாக உள்ள குழிகளில் நான்கு காய்கள் சேர்ந்து விட்டால் அதனை அவரவர் முத்தென்று சொல்லி எடுத்துக் கொள்வர். காய்கள் அனைத்தும் ஒருவர் பக்கமே சென்று விட்டால் ஆட்டம் முடிவுற்றதாகக் கருதப்படும்.

தோற்றவர்க்கு ஒரு குழிக்குத் தேவையான காய்கள் கிடைக்கவில்லையெனில் ஒவ்வொரு குழியிலும் ஒரு காயினை இட்டுக் குழியை நிரப்புவர். முன்போலப் பிரித்தாடுவர். இதனைக் 'கஞ்சி காய்ச்சுதல்' என்பர். கஞ்சி காய்ச்சுவதற்குக்கூடக் காயில்லாத நிலையில் தோற்றதாக அறிவிக்கப்படும்.

பல்லாங்குழியில் எந்தக் குழியினை எடுத்தால் எத்தனைக் காய் கிடைக்கும் என்பது தொடக்க நிலையில் தெரியாது. இவ்விளையாட்டில் பயிற்சி பெற்றவர்க்கு எந்தக் குழிக்கு எந்தக் குழி துடைகுழி என்பது அனுபவ அறிவுத்திறன் அடிப்படையில் தெரியவரும்.

**பரமபதம்**

*ஏகாதசித் திருநாளன்று இரவு கண்விழிப்பதற்குப் பரமபதம் என்ற படவிளையாட்டினை ஆடுகின்றனர். தாயக்கட்டைதான் கருவி.*

*ஏகாதசி அன்று விரதமிருந்து கண்விழித்து விடியற்காலையில் எழுந்து வீட்டினைத் தூய்மை செய்து கோலமிட்டு ஏழு காய்கறி வகைகளைப் பயன்படுத்தி கறிசமைத்துப் பொழுது புலர்வதற்குள் பூசை செய்து அனைவருக்கும் உணவு படைப்பர். அன்று பகற்பொழுதும் உறங்கக் கூடாது. அவ்வாறு செய்தால் சொர்க்கம் (பரமன் பதம்) தனக்குக் கிடைக்கும் என்பது ஐதீகம்.*

*இக்காலக் கட்டத்தில் கண் உறக்கம் போக்க, பாவவினைகள் தீரப் பரமபதப் படவிளையாட்டினை விளையாடுவர். அப்படத்தில் சில கட்டங்கள் வரும்பொழுது ஏணிமரம் படம் இருக்கும் போடும் எண் ஏணி இருக்கும் இடத்திற்கு வந்தால், அந்த ஏணி எந்த எண் வரை உயர்ந்து உள்ளதோ அந்தக் கட்டத்தில் நம் காயை உயர்த்தி வைக்க வேண்டும். சில கட்டங்களில் பாம்புப் படம் இருக்கும், காயை அந்தக் கட்டத்தில் வைக்கும் நிலை வந்தால், அதன் வால் பகுதி கீழே எந்த எண்ணில் முடிகிறதோ அங்கே கீழிறக்கிக் காயை வைக்க வேண்டும்.*

*சிலர் தன் காயினை ஏணியில் ஏற்றிக் கொண்டே செல்வர். நல்வினை என்பர். சிலர் காய் இரண்டு கட்டம் மேல் சென்றால் உடனே கீழிறங்கும் நிலை வந்து விடும். இதிலிருந்து நாம் செய்யும் புண்ணியங்களுக்கு ஏற்ப உயர்வும், செய்யும் பாவங்களுக்கு ஏற்ப தாழ்வும் கிடைக்கிறது. வாழ்வு என்பது ஏற்றமும், இறக்கமும் உடையது. இதை உணர்ந்து நடந்தால் பரமனின் திருவடி (பதம்) சேரலாம் என்ற உண்மைத் தத்துவத்தைப் பரமபதப் பட விளையாட்டு உணர்த்துகிறது.*

## 4.5. பெண்கள்-சங்க இலக்கிய-நாட்டுப்புற விளையாட்டுக்கள்-ஒப்பீடு

*இவ்வியலில் சங்க இலக்கியத்தில் பெண்கள் விளையாட்டுக்கள் பன்னிரண்டும், நாட்டுப்புற பெண்கள் விளையாட்டுக்கள் ஒன்பதும் விளக்கப்பட்டுள்ளன. அவற்றுள்*

ஊசல், கழங்கு, குரவை என்ற இந்த மூன்று விளையாட்டுக்களும் ஒத்த தன்மையுடையனவாக உள்ளன.

**ஊஞ்சலாட்டம்**

ஊசல் என்ற விளையாட்டு-பெரியமரக் கிளைகளில் கயிறு கட்டி ஆடப்பட்ட திட்டமிட்ட விளையாட்டு என்றும், மகிழ்ச்சி-பொழுதுபோக்கு உடல் உறுப்பு-பொறிபுலன் சார்ந்த விளையாட்டு என்றும் அறியலாம்.

கயிற்றில் பலகையைக்கட்டி விளையாடுவது. கால் உந்துதலால்-அல்லது சிலர் ஆட்டி விடுவதும் உண்டு பெண்கள் விளையாடிய இவ்விளையாட்டுக் காலப் போக்கில் ஆண்களும் விளையாடுவதாக அமைந்தது.

உடலினை உறுதி செய்தது. விட்டுக் கொடுத்தல், உடன் இருப்பவர்க்கு உதவுதல், மகிழ்ச்சிப் பொழுதுபோக்கு இயற்கைச் சூழலில் விளையாடுவது போன்ற அனைத்துக் கருத்துக்களும்-சங்க இலக்கிய விளையாட்டு-நாட்டுப்புற விளையாட்டுக்கள் கூறும் பெண்களின் ஊஞ்சலாட்டமும் ஒத்த நிலையில் உள்ளன.

வீடுகளில் வேலைப்பாடமைந்த பலகையால் செய்யப்பட்ட ஊஞ்சலில் தற்பொழுது விளையாடி வருகின்றனர்.

**கழங்கு கல்லாங்காய்**

சங்க இலக்கியம் கூறும் பெண்கள் விளையாட்டாகிய கழங்கு-நாட்டுப்புறப் பெண்களின் 'கல்லாங்காய்' விளையாட்டோடு ஒத்துள்ளது.

களம் : நிலம்
காலம் : பகல் ஆடும் நபர் இருவர்

இயற்கையில் கிடைத்த காய்களைக் கொண்டு எறிந்தும், எடுத்தும், உயரத் தூக்கிப் போட்டும் கீழே கொட்டியுள்ளதைப் பொறுக்கியுமாக ஆடியுள்ளனர்; பாடிக் கொண்டே

ஆடியுள்ளனர். வீட்டின் பின்புறம், மரநிழல், மேல் மாடங்களில் அமர்ந்து ஆடியுள்ளனர். பந்தயம் கட்டி ஆடியுள்ளனர்.

நாட்டுப்புறப் பெண்கள்-கற்களைக் காய்களாகப் பயன்படுத்தினர். சங்க காலப்பெண்கள் பொன், மணி, முத்து, பூக்கள், கைக்குள் அடங்கக் கூடிய கழங்குக் காய்கள் போன்றவற்றை விளையாடப் பயன்படுத்தியுள்ளனர்.

ஓய்வு நேரத்தை நன்கு பயன்படுத்தி வீட்டில் இருந்தபடியே சுறுசுறுப்பாக இருக்க முடிந்துள்ளது. காய்களைத் தூக்கிப் போட்டு விளையாடியதால் கைகள், கண்களுக்குப் பயிற்சி-பாடிக் கொண்டே ஆடியது-பயன்படுத்திய கருவி-அனைத்தும் ஒத்துள்ளது.

**குரவை-கும்மி**

இது ஒருவகை நாட்டியம். விளையாட்டாக மேற்கொண்டுள்ளனர். திட்டமிட்டது. பெண்கள் பலர் மகிழ்ந்து, கூடித் தழுவியும், கைகளைக் கோத்தும் சத்தமிட்டு, ஒலி எழுப்பியும் பாடியும் ஆடியுள்ளனர்.

களம் : நிலம்
காலம் : பகல்

உடல் உறுப்பு-பொறிபுலன் சார்ந்த விளையாட்டு. சில நேரங்களில் ஆண்களும் கலந்துகொண்டு ஆடியிருக்கலாம் எனக் கூற இடமுண்டு.

கூடி ஆடுவதால் மகிழ்ச்சி-பெண்களின் ஆற்றல் வெளிப்பட ஏதுவான நிகழ்ச்சி. சங்க-நாட்டுப்புறப் பெண்கள் விளையாட்டாகிய கும்மி-குரவை-ஒத்து உள்ளது.

அன்றாட வாழ்க்கையில் நிகழும் நீரிறைத்தல், பாத்திரம் துலக்குதல், சோறு சமைத்தல், அரிசி அரைத்தல் முதலியவற்றைப் பாடலாகவும் ஆடலாகவும் விளக்கிக் காட்டுகின்றன.

பெண் தெய்வங்களின் கொடை விழாக்கள் நடைபெறும் பொழுது நாட்டுப்புறப் பெண்கள் 10 நாட்கள் தொடர்ந்து கும்மியடித்து இனிமையாகவும் பொருள் சிறப்போடும் பாடி ஆடுவர்.

பந்து, நீர்விளையாட்டு, கவண் போன்ற சங்க இலக்கிய பெண்கள் விளையாட்டுக்கள் பெண்களின் நாட்டுப்புற விளையாட்டுக்களில் இடம்பெறவில்லை.

நாட்டுப்புற விளையாட்டுக்களாகிய சில்லுக்கோடு, பல்லாங்குழி, பரமபதம், அந்திக்கடை-சந்திக்கடை, தாயம் போன்றவை சங்க இலக்கிய பெண்கள் விளையாட்டில் இடம் பெறவில்லை.

சங்க இலக்கிய பெண்கள் விளையாட்டுக்கள் செடி-கொடி வளர்ப்பு, மலர்கொய்தலும்-தொடுத்தலும் பறவை வளர்ப்பும்-விலங்கு வளர்ப்பும், வள்ளை என்ற உலக்கைப்பாட்டு-விளையாட்டாக கூறாவிட்டாலும் நடைமுறை வாழ்வில் ஒன்றி தொழிலாக உள்ளன.

புள் ஓட்டல்-வீட்டு முற்றத்தில் உலர்த்தும் தானியங்களை உண்ணவரும் பறவைகளை விரட்டும் நிலையில் உள்ளது.

பிசி-நொடி என்ற விளையாட்டுச் சிறு குழந்தைகளுக்கு வீரத்தைப் புகட்டும் கதைகளைக் கூறுவதாகவும் அச்சத்தைப் போக்கும் நிலையிலும் கதை கூறுதல் என்ற நிலையில் உள்ளது.

சங்க இலக்கியப் பெண்கள் விளையாட்டுக்கள் நாட்டுப்புற விளையாட்டுக்களில் சிலவற்றில் ஒத்தும் பலவற்றில் வேற்றுமை உடையதாகவும் அமைந்துள்ளன.

பிசி-நொடி விளையாட்டு 'விடுகதை போடுதல்' என்ற விளையாட்டு நிகழ்வாக இன்றும் மக்களிடம் வழக்கில் உள்ளன.

பெண்கள் விளையாட்டுக்கள் பெரும்பாலும் பொழுது போக்கிற்காகவும், மன மகிழ்ச்சிக்காகவும், சமுதாய சூழ்நிலையில் அதிகம் வெளியில் செல்ல முடியாத நிலையில் இருந்தபடியே விளையாடும் வழக்கம்-நாட்டுப்புற விளையாட்டுக்களில் அமைந்துள்ளன. உள்ளிருந்து விளையாடும் விளையாட்டுக்களில் ஈடுபட்டுள்ளனர்.

சங்க காலத்தில் நால்வகை நிலங்கள்-அந்நிலத்தில் வாழும் மக்கள் தங்கள் நில அமைப்பிற்கேற்ற வாழ்க்கை முறை அமைத்துக்கொண்டனர். எனவே நாட்டுப்புற மக்கள் வாழ்க்கை நிலையில் இருந்தே-சங்ககாலம் வளர்ச்சியுற்றது.

வீட்டில் இருந்தே விளையாடிக் கொண்டிருந்த பெண்கள் வெளியிடங்களுக்கும் சென்று விளையாட ஆரம்பித்தனர்.

மலைநிலத்தில் வாழ்ந்த மகளிர்-தினைப்புனம் காவலுக்குச் சென்றனர். தினைகளைத் தின்ன வரும் பறவைகளை விரட்டினர். அதுவே புள் ஓட்டல், விளையாட்டாக வளர்ந்தது. பறவைகளை விரட்ட கவண்கல் வீசினர். கவணில் கல் வைத்து வீசியது ஒரு விளையாட்டாக உருவாக்கம் பெற்றது கவனிக்கத் தக்கது.

மலைநிலத்து மகளிர்-மலைக்குச் சென்று பிறரிடம் சொல்லமுடியாத தேங்கிக் கிடக்கும் உணர்வுகளை ஒலிகளாக எழுப்பி தோழிகளுடன் கருத்துகளை வெளிப்படுத்தினர். இதுவே 'எதிரொலி கேட்டல்' என்ற விளையாட்டாக வெளிப்படுகிறது.

சங்ககால பாவை விளையாட்டு நாட்டுப்புற மகளிர் (சிறுமியர்) விளையாடும் பொம்மை விளையாட்டோடு தொடர்புடையது.

பிசி-நொடி என்ற சங்க இலக்கிய விளையாட்டு நாட்டுப்புற விளையாட்டாகிய-விடுகதை-பழமொழிகளின் வளர்ச்சியாக அமைந்துள்ளது.

வீட்டிலிருந்து விளையாடும் விளையாட்டுக்களாகப் பறவை வளர்ப்பும் விலங்கு வளர்ப்பும், பிசி-நொடி விளையாட்டு, வள்ளை, சிறு சோறு ஆக்கல் முதலியன அமைந்துள்ளன.

வெளியிடங்களில் விளையாடும் விளையாட்டுக்களாகவும் அலவன் ஆட்டல் (நெய்தல்) ஊசல் (மருதநிலம்) எதிரொலி கேட்டல்-கவண், சிற்றில், செடி கொடி

வளர்ப்பு-நீர் விளையாட்டு-பந்து-இவை போன்ற விளையாட்டுக்கள் இருபாலார் விளையாடும் வெளியிட விளையாட்டுக்களாகவும் அமைந்துள்ளன.

நாட்டுப்புற பெண்கள் பருவநிலைக்கேற்ப தங்கள் விளையாட்டு முறைகளை வாய்ப்பு நிலைக்கேற்ப அமைத்துக் கொண்டனர். காலம் மாற, மாற சிந்தனைத்திறன், ஆழ்ந்த அறிவுத் திறன் கொண்டு விளையாட்டுக்களிலும் வளர்ச்சியை மேற்கொண்டனர். சங்ககாலப் பெண்கள் கல்வியறிவு நிரம்ப உடையவர்களாய் இருந்தனர் என்பதற்கு ஔவையார், காக்கைப்பாடினி நச்செள்ளையார், வெள்ளிவீதியார், நக்கண்ணையார் போன்றவர்களை எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம். எனவே தங்கள் விளையாட்டுக்களிலும்-நால்வகை நில அமைப்பிற்கு ஏற்ப பொருள் ஈட்டும் வகையிலும், தொழில் ரீதியாகவும் குழந்தைகளுக்கு ஆளுமைத்திறனை வளர்க்கும் வகையில் பிசி-நொடி விளையாட்டும் அமைந்துள்ளன.

உயிர்களிடத்தில் அன்பு காட்டினர் என்பதற்கு அடையாளமாகப் பறவை வளர்ப்பும் விலங்கு வளர்ப்பும் விளையாட்டாகச் சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளன. (அசைவ உணவு அருந்துவதற்காகவும்-விற்பனைக்கும் கூட இருக்கலாம்) மற்றவர்கள் வளர்ப்பதைவிடச் சிறப்பாகவும், உயர்வாகவும் முதன்மைத் தன்மையதாகவும் இருக்க வேண்டுமென்று கருதினர். ‘ஏறுகோள்’ என்ற வீரவிளையாட்டிற்குரிய எருதுகளைப் பெண்கள் வளர்த்து மகிழ்ந்தனர்.

பேசாதவற்றைப் பேசுவதாகவும், சொல்லாதனவற்றைச் சொல்வதாகவும் கூறுவதற்கு தொல்காப்பியமே இலக்கணம் வகுக்கிறது. இலக்கணம் கண்டதற்கு இலக்கியம் படைக்கப்பட்டது. தன்னுடைய இன்ப, துன்பங்களைத் தான் வளர்க்கும் பறவை, விலங்குகளிடம் கூறி பகிர்ந்து கொண்டுள்ளனர்.

சங்க இலக்கியங்களைத் தொடர்ந்து பிற்கால காப்பிய இலக்கியங்களிலும் மேற்குறித்த செய்திகள் இடம்பெற்று அதன் வளர்ச்சி நிலையை விளக்குகின்றன.

நாட்டுப்புற விளையாட்டுக்களின் அடிப்படையிலேயே சங்க இலக்கிய விளையாட்டுக்கள் அமைப்பிலும், வகைப்பாட்டிலும் வளர்ச்சி பெற்றுச் சில ஒற்றுமைகளுடனும், வேற்றுமைகளுடனும் அமைந்துள்ளன.

### 4.6. விளையாட்டுக்களும் பெண்களும்

சங்க காலத்தில் பெண்கள் மிக விருப்பத்தோடு விளையாட்டுக்களில் ஈடுபட்டுள்ளமைத் தெளிவாகத் தெரிகிறது. ஆண்கள் விளையாடுவதற்குக் காரணமாக இருந்துள்ளனர். அவர்களை ஊக்குவித்துள்ளனர். அத்துடன் குழந்தைகளும் விளையாட்டில் ஈடுபட உதவியுள்ளனர்.

வீட்டிலும், வெளியிலுமாகத் தங்கள் கடமைகள் பலவற்றில் ஈடுபட்டிருந்த பெண்கள் விளையாட்டில் முழுக் கவனம் செலுத்தியுள்ளனர்.

உடல் வலிமையை வெளிப்படுத்தும் விளையாட்டுகளாக அமையாது அறிவு இயக்க விளையாட்டில் அதிக கவனம் செலுத்தியுள்ளனர். பொறிபுலன் இயக்கத்திற்கு முக்கியத்துவம் தந்துள்ளனர். ஆக்க சக்திக்கு மதிப்பு அதிகம் தந்துள்ளனர். சிறுசோறு ஆக்கல், சிற்றில் அமைத்தல், செடி-கொடி வளர்த்தல், பாவை அமைத்தல் முதலியன இதற்குக் எடுத்துக்காட்டாக அமைகின்றன. விளையாட்டுக்கள் மூலமாக இரக்க உணர்வை வெளிப்படுத்தியுள்ளனர். சேர்ந்து பணியாற்றும் கூட்டு முயற்சிக்கு ஆக்கம் தந்துள்ளனர். குறிபார்த்து இலக்கைத் தொட்டு வெற்றி கண்டுள்ளனர். மலர் கொய்து மாலை தொடுத்து விளையாடி, அழகுணர்ச்சியை வெளிப்படுத்தியுள்ளனர். எதிரொலி கேட்டு விளையாடி அறிவியல் விளக்கம் பெற ஊக்குவித்துள்ளனர். குரவையாடி குரல் வளத்தைக் கூட்டி இசை ஞானத்தை வெளிப்படுத்தியுள்ளனர். மணற்குவியலில் மறைத்து வைத்து தேடிக் கண்டு பிடித்து ஆராய்ச்சி உணர்வை அதிகப்படுத்தியுள்ளனர். கவண், கழங்கு, புள்ளோட்டல், வள்ளை முதலிய விளையாட்டுக்களால் உடலழகையும், உடல் வலிமையையும் பெருக்கியுள்ளனர். நீர் விளையாட்டில் ஆண்களோடு சமமாக கலந்து கொண்டு வேறுபாடுகளைக் களைந்துள்ளனர். உப்பு வண்டிகள், யானைகள், குதிரைகள் படகுகளை எண்ணி விளையாடி எண்ணும் எழுத்தும் கண்ணினும் இனியவை என்பதை நிலைநாட்டியுள்ளனர்.

ஆண்களின் வீரத்தை நிலைநாட்டக் கூடிய ஏறுதழுவல் விளையாட்டிற்கு முதன்மையான காளைகளை வளர்த்து உதவியுள்ளனர். பெண்கள் விளையாடியுள்ள விளையாட்டுக்கள் பலவும் அவர்களது மென்மையான உள்ளத்தை எதிரொலிப்பதாக அமைந்துள்ளதென்பதே உண்மையாகும். கற்பனையாகக் கதைகள் சொல்லி, தூங்கும் குழந்தைகட்கு இரவில் வீரம் விளைவிக்கும் வரலாறுகள் சொல்லி ஆளுமைப் பண்பு வளரத் துணை நின்றுள்ளனர். விளையாடிக் கொண்டே வீட்டுக்கு வேண்டிய பொருட் சேகரிப்பிலும் கவனம் செலுத்தியுள்ளனர். விளையாட்டுக்களின் வழி உயர்ந்த சிந்தனைகள் தங்கள் மக்கட்கு வளர அம்புலி-காட்டல் விளையாட்டைப் பயன்படுத்தியுள்ளனர். பெண்கள் விளையாடியுள்ள விளையாட்டுக்கள் பலவும் அவர்களது மென்மையான ஈர உணர்வுள்ள பண்பை, உள்ளத்தை எதிரொலிப்பதாக அமைந்துள்ளன என்பதே உண்மையாகும். சங்க காலச் சமுதாய அமைப்பையும் பெண்களின் உடலமைப்பையும் பொருத்து அவர்களது விளையாட்டுக்கள் சிறப்பானதாக அமைந்ததோடு, சங்ககாலத்தில் பெண்களுக்கமைந்த இடம் குறித்து அறியவும் விளையாட்டுக்கள் பயன்பட்டன.

## 4.7. சங்க இலக்கியத்தில் ஆண் - பெண் இருபாலர் விளையாடும் விளையாட்டுக்கள்

1. அசதியாடல் - அறிவு இயக்க விளையாட்டு
2. அலவன் ஆட்டல் - உடல் உறுப்பு விளையாட்டு
3. உலாவல் - உடல் உறுப்பு விளையாட்டு
4. ஊசல் - உடல் உறுப்பு விளையாட்டு
5. கண்ணா விளையாட்டு - உடல் உறுப்பு விளையாட்டு
6. சூது - அறிவு இயக்க விளையாட்டு
7. நீர் விளையாட்டு - உடல் உறுப்பு விளையாட்டு
8. பந்து - உடல் உறுப்பு விளையாட்டு
9. பறவைகளைக் காணலும் - அவற்றின் செயல்கள் போல செய்தலும் (பொறிபுலன் விளையாட்டுக்கள்)ஆகிய ஒன்பது விளையாட்டுக்களும் சங்க இலக்கியத்தில் ஆண் - பெண் இருபாலரும் விளையாடும் விளையாட்டுகளாக விளக்கமாகக்

கூறப்பட்டுள்ளன. அவற்றிற்கான விளக்கங்களும் - விதிமுறைகளும் - மேற்கோள்களுடன் அமைந்துள்ளன.

**அசதியாடல்**

நகையாடுதல், பரிகாசஞ்செய்தல், வேடிக்கை வார்த்தை கூறுதல், பொய்யாயினவற்றைச் செய்து மகிழ்தல், ஆண் - பெண் இருபாலரும் ஒருவரோடு ஒருவர் வேடிக்கையாகப் பேசி, செய்கையாற் செய்து காட்டி, பொழுதுபோக்கி மகிழுவது. அசதியாடல் திட்டமிட்ட பொழுதுபோக்கு விளையாட்டு. நெஞ்சொடு - தனக்கு மட்டுமே கேட்பதாகப் பாடி, பேசிப் பரிகாசம் செய்வது. அடுத்தவர் காதுபடவும் கூறுவது. கற்பனை மிகுபட, அந்தந்த இடத்திற்கும், நிகழ்ச்சிக்கும் தக்கவாறு பேசிச் சிரிப்பது, மனம் புண்படாமல் பேசி விளையாடுவது. இயற்கைச் சூழலில் - காற்றோட்டமான வெளிப்புறத்தில் இவ்வகை விளையாட்டு விளையாடப்பட்டுள்ளது. பகல், முன்னிரவு நேரங்களில் ஆண் - பெண் இருவரும். குறிப்பாகக் கூன், குறளன், விதூடகன் விளையாடியுள்ளனர். அரசன், அரசி, அமைச்சன் ஆகியோரும் தமக்குள் அசதியாடியதாகக் காப்பியங்கள் குறிப்பிடுகின்றன.

வல்லுப்பலகை எடுத்து நிறுத்தன்ன, கல்லாக் குறள
உழுந்தினும் துவ்வாக் குறுவட்டா நின்னின் இழிந்ததோ கூனின் பிறப்பு
(கலித் 94-96)

என்ற செய்யுட்பகுதிகள் கூனியும், குறளனும் ஒருவருடன் மற்றொருவர் வேடிக்கையாகப் பேசி அசதியாடியதை மகிழ்ந்ததைத் தெரிவித்துள்ளன.

பொதுவாக விளையாட்டில் உடல் உறுப்பு இயக்கம், பொறிபுலன் இயக்கம், அறிவு இயக்கம் என மூவகையாகப் பிரித்துப் பார்ப்பர். இவ்விளையாட்டில் மூவகை இயக்கங்களும் இருந்தாலும் அறிவு இயக்கம் (Intellectual Movement) அதிகமாகக் காணப்படுகிறது.

ஆண், பெண் இருபாலாரிடையே உறவு வளருவதற்கும் ஒருவருடைய மனதை மற்றொருவர் புரிந்து கொள்ளுவதற்கும் மனிதநேயம் உறுதிப்படுவதற்கும் துணையாக அமைந்த இருபாலாரும் விரும்பிய பொழுதுபோக்கு விளையாட்டு அசதியாடல். சங்க

இலக்கியங்களுக்குப் பிறகு இவ்விளையாட்டுத் தொடர்ந்து நடைபெற்றுள்ளது என்பதைக் காப்பியங்கள், சிற்றிலக்கியங்கள் தெரிவிக்கின்றன.

நின்மா னாக்கியரே மாயினே மினியென

அசதியாடிய மைதவழ் கண்ணி (39:16-18)

என்பது பெருங்கதை. இக்காலத்திலும் இவ்விளையாட்டு உள்ளது. திருமணத் தொடர்பான நிகழ்ச்சி, இளைஞர்கள் பங்கேற்கும் பொது நிகழ்ச்சிகளில் காணப்பெறுகிறது.

## அலவன் ஆட்டல்

கடற்கரைப் பகுதி, நீர் தங்கும் பகுதிகளில் உள்ள அலவன்கள் கரைநோக்கி வரும்போது அவற்றைக் கைகளில் பிடித்து ஆட்டியும், மோத விட்டும் மகிழ்ந்துள்ளனர். பொழுதுபோக்கானது; திட்டமிடாதது; மகிழ்ச்சிக்காக மட்டுமே செய்வது; நெய்தல் நிலத்து மக்களுக்குப் பொழுதுபோக்காக இருந்துள்ளது.

கடற்கரையில் நீர்படிந்த மணல் பகுதியில் பகல், நிலாக்கால முன்னிரவில் ஆண், பெண் இருவரும் விளையாடியுள்ளனர். உடல் உறுப்பு இயக்க விளையாட்டாகும். இதனை விளக்கும் சங்க இலக்கியப் பாடல்.

**வரிகள்**

1.மாசுபோகப் புனல் படிந்து

மலவ னாட்டியும் (பட்டினப் 100-101)

2.ஆழி மருங்கின் அலவன் ஆட்டி (நற் 11:7)

3.பல்கால் அலவன் சேர்த்து ஆட்டி (மேற்படி 35-4)

4.ஆடுவரி அலவன் ஓடுவயின் பிடித்து (மேற்படி 106:3)

5.சிறுகால் அலவனொடு பெயரும் புலவுத் திரைநளிகடல்

பெருமீன் கொள்ளும் பரதவர் ஆட்ட (மேற்படி 219:5-6)

6.அலவன் ஆட்டுவோள் சிலம்பு ஞெமிர்ந்து எனவே

(மேற்படி 363:10)

7.பொன்வரி அலவன் ஆட்டிய ஞான்றே (குறுந்தொகை 303:7)

8. தண்கடற் பரப்பின்

அடும்பு அமல் அடைகரை அலவன் ஆடிய (பதிற்று 51: 7-8)

9.உவறுநீர் உயர் எக்கர் அலவன் ஆடு அளைவர்

(கலித் 136:2)

10.கலையா டலவன் ஆட்டி மகிழ்ந்து (அகம் 260:4)

11.திணிமண லடைகரை அலவன் ஆட்டி (மேற்படி 280:3)

*அலவன் துன்புறுவது எண்ணத்தக்கது. பொழுதுபோக்கு மகிழ்ச்சியால் விளையாடியோர் பெற்ற ஊக்கம் மாற்றுப்பணியைக் கவனிக்க உதவியது இவ்விளையாட்டின் பயனாகும்.*

*தொடர்ந்து பிற்காலத்தில் இவ்விளையாட்டு நடைபெற்றுள்ளமையைச் சிற்றிலக்கியங்கள், காப்பியங்கள் தெரிவிக்கின்றன.*

புணர் துணையோ டாடும் பொறியலவ னோக்கி (7:31-1)

*என்பது சிலப்பதிகாரம். இக்காலத்தில் கடற்கரை மணல் நோக்கி ஓடிவரும் அலவன்களை அங்குமிங்கும் அலைக்கழிப்பது பொழுதுபோக்கு நிகழ்ச்சியாக நகர மக்களுக்கு அமைந்துள்ளது.*

**உலாவல்**

*நிதானமாக நடக்கும் பொழுதுபோக்கு நிகழ்ச்சி. தனித்து மகிழ்வாகச் சிற்றடி எடுத்து வைப்பது. இவ்விளையாட்டிற்குப் பிறகு மனதின் கனம் குறைவது போல் உணருவது. வீட்டின் நிலா முற்றத்தில் மேல் மாடியில், பின்புறத்தில் உலாவுவது, வெளிப்புறச் சோலைகளில், கடற்கரை மணலில் உலாவுவது செல்வந்தர்களின் பொழுதுபோக்கு விளையாட்டு. உடல் உறுப்பு இயக்க விளையாட்டாகும்.*

*உலவும் பொழுது அநேகமாக அதிக அணிகலன்கள் அணிவதில்லை. அவசரமாகவோ, வேகமாகவோ, விரைவாகவோ செல்வதில்லை. சங்க இலக்கியங்கள் உலாவல் நிகழ்ச்சிகளைத் தெரிவிக்கின்றன.*

*காலம் : விடியற்காலை, மாலை, முன்னிரவு பொழுதில் ஆண்கள், பெண்கள் இருபாலரும் விளையாடியுள்ளனர்.*

நிலா முற்றத்தில் பெண்கள் உலாவி மகிழ்ந்ததை

அணங்கு வீழ்வன்ன பூந்தொடி மகளிர்... திருமுகம் ... தென்கடற்றிசையின் அசைவளி புடைப்ப,

நிரை நிலை மாடத்து அரமியந்தோறும்

மழையாய் மதியின் தோன்றுபு மறைய

(மதுரைக்காஞ்சி, 446-452)

*என்ற பகுதி புலப்படுத்துகிறது.*

*மகிழ்ச்சிப் பொழுதுபோக்கு விளையாட்டு. இதன் காரணமாக உடல், உள்ளம் இரண்டுமே தெளிவும், ஊக்கமும் பெற்றது. மன அமைதி பெற உதவியுள்ளது. தொடர்ந்து காப்பியங்கள், சிற்றிலக்கியங்களில் உலாவல் விளையாட்டுப் பற்றியும் உலாவு மண்டபம் இருந்த செய்தியும் தெரிகிறது.*

மாதர்கள் மைந்தர் வாவிநாவில் உலாவி மகிழ்ந்தனர்

*எனச் சீவகசிந்தாமணியும் 115.*

சீர்ப்பூண் களைந்த நில்லென் கோலமொரு

நிலா வெண் முற்றத்துலாவி யாடி

*என்ற பெருங்கதை வரிகளும் (39:23-24) சிலவாகிய அணிகளை மட்டுமே அணிந்து பெண்கள் உலாவியதைக் குறிப்பிடுகிறது. இவ்வுலாவல் இக்காலத்தும் தொடர்ந்து நடைபெற்று வருகிறது.*

காலை மாலை உலவி நிதம்

காற்று வாங்கி வருவோரின்

காலைத் தொட்டுக் கும்பிட்டுக்

காலன் ஓடிப் போவானே

*என்பது கவிமணி அவர்களின் வாக்கு.*

**ஊசல்**

*பெரிய மரக்கிளைகளில் நீண்ட கயிற்றைக் கட்டிவிட்டு அதில் அமர்ந்து திட்டமிட்டு விளையாடும் விளையாட்டாகும். ஊசலில் அமர்ந்து கயிறுகளை இருகைகளாலும் பிடித்துக் கொண்டு கால்களினால் மண்ணை உதைத்து வேக, வேகமாக ஆடுவது. மேலுக்கும், கீழுக்குமாக எதிர் எதிர் திசைகளில் காற்றில் மிதப்பது போல*

ஆடுவதில் மகளிர் அதிகம் ஆர்வம் காட்டினர். கயிறுகளை மறைக்க மலர்க் கொத்துகளைக் கிளைகளில் சுற்றிவிட்டும், அமர்ந்து விளையாடுவதற்குப் பலகைகளையும், துணை இருக்கைகளையும் அமைத்திருந்தனர்.

வீட்டுக்கு வெளியே சோலைகளில் இவ்விளையாட்டு நடைபெற்றது. சில இடங்களில் சிற்றூசல் அமைத்து இல்லத்தினுள்ளும் வீட்டு விளையாட்டாக (Indoor Game) வும் ஆடியுள்ளனர். வீட்டினுள் அமைக்கப்பட்டிருந்த ஊசல் பலவகை வேலைப்பாடுகளை உடையதாக இருந்தது. 'சங்கிலியால் பிணைக்கப்பட்ட பலகைகளும் ஊசல் விளையாட்டுக்குப் பயன்படுத்தப்பட்டது. பெண்கள் மட்டுமே விளையாடிக் கொண்டிருந்த இவ்விளையாட்டுக் காலப் போக்கில் ஆண்களும் ஆடுவதாக அமைந்தது.

இவ்விளையாட்டுக் குறித்த செய்திகளைச் சங்க இலக்கியப் பாடல் வரிகள் பின்வருமாறு விளக்குகின்றன.

1.பூங்குழை யூசற் பொறைசால் காதி (பொருநர் -30)

2.ஊசல் ஊர்ந்து ஆட, ஒரு ஞான்று வந்தானை

(கலித் 37-14)

3.தண் தாழை

வீழ் ஊசல் (மேற்படி 131 -11)

4.சில்வளைக் குறுமகள்

ஊசல் ஊறுதொழிற் பூசல் (நற் 90: 10-11)

5.வழிநாள் ஊசலின் கோடை தூக்குதொறும்

(மேற்படி 162-9)

6.தாழை வீழ்கயிற் றூச நூங்கிக் (அகம் 20:6)

7. தாழ்வி லோங்குசினைத் தொகுத்த வீழ்கயிற்

றூசன் மாறிய மருங்கும் பாய்புட (மேற்படி 38:7-8)

8.ஒங்கு சினைத் தொகுத்த ஊசல் பாம்பென

(மேற்படி 68-6)

உடல் உறுப்பு இயக்கமும், பொறிபுலன் இயக்கமும் சார்ந்த விளையாட்டாகும்.

*உடலினை உறுதி செய்வதும், திட்டமிட்டதும், மகிழ்ச்சிப் பொழுது போக்கும், விட்டுக்கொடுக்கும் மனப்போக்கை வளர்ப்பதும், உடன் இருப்பவர்க்கு உதவுவதும் இயற்கைச்சூழலில் விளையாடுவதும் இவ்விளையாட்டின் பயனாகும்.*

*சங்க இலக்கியங்களுக்குப் பிறகு தொடர்ந்து இவ்விளையாட்டு வளர்ந்து வந்துள்ளது. ஊசலாடும் பொழுது பாடியுள்ளனர் என்றும், கண் பிறழ்தல், குழல் ஆடுதல், இடை நுடங்குதல் என்பவை நிகழ்ந்துள்ளன என்றும் இதன் மூலம் அறிந்து கொள்ளலாம் (21: வஞ்சி: வாழ்த்து). 'ஊசல் வரி' என்ற பகுதியைச் சிலப்பதிகாரத்தில் காணலாம்.*

மடவோர்க் கியற்றிய மாமணியூசல் (75)

*என்று மணிமேகலையும்,*

மகளிராடும் ஊசல் (2268)

*என்று சிந்தாமணியும் குறிக்கிறது. "வார்கயிற்றூசல்",[7] "விட்டத்துப் பொன்னூசல்",[8] "வீட்டின் ஊசல்"[9] என்பவை காப்பியங்கள் காட்டும் ஆதாரங்கள். இக்காலத்தில் இவ்விளையாட்டு உள்ளது. மழலைப் பள்ளிகளிலேயே குழந்தைகட்கு இவ்விளையாட்டில் பயிற்சி தரப்படுகிறது.*

**சுண்ணம் தூவல்**

*சுண்ணம் என்பது ஒரு வகை வாசனைப் பொடி. இதனைத் தயாரிக்கும் பொறுப்பினைப் பெண்கள் ஏற்றிருந்தனர். சுண்ணத் தயாரிப்பில் தங்கள் முழுத்திறமையையும் காட்டிப் போட்டியில் வெற்றி பெற்று முதலிடத்தைப் பெற்றுள்ளனர். திட்டமிட்ட விளையாட்டு. பலரும் சேர்ந்து விளையாடுவது. ஒருவர் மீது ஒருவர் சுண்ணப் பொடியினைத் தூவி மகிழ்வது. சில நேரங்களில் ஆடவர் மீதும் சுண்ணப் பொடியினைத் தூவிப்பெண்கள் விளையாடியுள்ளனர். சங்க இலக்கியப் பாடல் வரிகள் இதனை பின்வருமாறு விளக்குகின்றன.*

1.புன்காய்ச் சுண்ணம் புடைத்த (பெரும்பாண் 220)

2.பலர் தொகுபு இடித்த தாதுஉரு சுண்ணத்தார்

(மதுரை 399)

---

7 *திருத்தக்கதேவர், சீவகசிந்தாமணி, 2714.*

8 *பனு-அகமது மரைக்காயர், சின்னச்சீறா என்று வழங்கப்படும் சீறாப்புராணம், 541.*

9 *கம்பர், கம்பராமாயணம், சுந்தர: பிணி: 1165.*

3.சாந்தும் கமழ்தாரும் கோதையும் சுண்ணமும்

(பரி 2)

4.சுண்ணம் பொதிந்த வண்ண வட்டினை (மேற்படி 12)

5.சுண்ண நீறு ஆடி (கலித் 97:10)

*மன இறுக்கத்தைத் தவிர்த்து, உடலுக்கும், உள்ளத்துக்கு மகிழ்வைத் தந்தது. சுண்ணத்தயாரிப்பில் புதுவகைத் தொழில் நுட்பத்தைப் பெருக்கும் ஆர்வத்தைப் பெருக்கியது இவ்விளையாட்டு. சுண்ணம் தயாரித்து, மற்றவர்கள் மீது தூவி விளையாடியதைக் காப்பியங்கள் பிற்காலத்தில் விரிவாகவே விவரித்துள்ளன.*

வண்ணமுஞ் சுண்ணமுந் தண்ணறுஞ் சாந்தமும்

(சிலம்பு 5:13)

தூமயிர்க் கவரி சுந்தரச் சுண்ணத்து (மேற்படி 5-155)

வண்ணமுஞ் சாந்து மலரும் சுண்ணத்து (மேற்படி 6-134)

வண்ணமுஞ் சுண்ணமுந் தண்ணறுஞ் சாந்தமும்

(மேற்படி 12-36)

சிந்துரச் சுண்ணஞ் சேர்ந்த மேனியில் (மேற்படி 14-92)

வண்ணமேந்தினர் சுண்ணமேந்தினர் (மேற்படி 20-15)

சுந்தரச் சுண்ணரும் துழநீராடலும் (மணிமே 2-23)

வால்வெண் சுண்ணம் ஆடிய திதுகாண். (மேற்படி 4-18)

*சுண்ணம் தூவி விளையாடியதையும் இதுவே போட்டியாக விரிந்து இன்ப நிகழ்ச்சிகள் நடைபெற்றமையைக் கூடப் பிற்கால இலக்கியங்கள் விவரித்துள்ளன. இக்காலத்தில் இவ்விளையாட்டு உள்ளது. சுண்ணத் தயாரிப்பு ஒரு சிறு தொழிலாகவே வளர்ந்துள்ளது. வண்ணப் பொடிகளைக் கொண்டு வாசலில் கோலமிடுதல் ஒப்பனைக்குப் பயன்படுத்துதல், தண்ணீரில் கரைத்து மேலே தெளித்துக் கொண்டு விளையாடுதல் உள்ளன.*

**சூது**

இது ஒரு பொழுதுபோக்கு விளையாட்டு. காலம் போவது தெரியாமல் ஆடும் விளையாட்டு. திட்டமிட்டும், திட்டமிடாமலும் ஆடுவது. வீடுகளிலும் பொது இடங்களிலும் ஆடிய செய்தி தெரிகிறது. சூதாடும் இடத்தினைக் 'கழகம்' என அழைத்துள்ளனர். 'ஒவாச் சூதுபொரு கழகம்' என்கிறது பெருங்கதை. பந்தயங்கூறி ஆடுவது. ஆட்டம் தொடங்கும் முன் பந்தயப் பொருளினை உறுதிப்படுத்திக் கொள்ளுவது. சூதாட்ட விளையாட்டில் தனக்கு ஒப்பார் இல்லையெனக் கூறுவது. எதிர்த்து ஆடுவோரை வீழ்த்துவதாகக் கூறுவது. எவர் எதிர்த்தாலும் வெல்லுவதாகக் கொடி உயர்த்துவது. சில குறிப்பிட்ட சொற்களைக் கூறிக்கொண்டே ஆடுதல் யாவும் இவ்விளையாட்டில் குறிப்பிடத்தக்கது. இதனை 'வல்லு விளையாடல்' என்றும் குறிப்பிட்டுள்ளனர். ஆயம், கவறு, வட்டு, வல் என்ற சொற்கள் யாவும் சூதாட்டத்தில் உருட்டியாடப் பயன்படுத்திய கருவியின் பல பெயர்களாகும். முதியவர்கள் ஊர் பொது இடங்களில் ஆடிய குறிப்புகளும் கிடைக்கின்றன.

பகல், இரவு எப்பொழுதும் ஆடுவர். ஆண்கள், பெண்கள் இருவரும் விளையாடுவர். (இருபாலர் விளையாட்டு) இவ்விளையாட்டு அறிவிற்கு வேலை தருகிறது. இது தொடர்பான கருத்துக்களைச் சங்கப்பாடல் வரிகள் பின்வருமாறு தெரிவிக்கின்றன.

1.பொதியில் நரை
நரை மூதாளர் நாயிடக் குழிந்த
வல்லின் நல்லுலகம். (புறம் 32: 4-6)

2.மன்றத்து
நரை மூதாளர் அதிர் தலை யிறக்கிக்
கவை மனத் திருத்தும் வல்லு. (அகம் 377:3-5)

3.சூதார் குறுந்தொடிச் சூரமை நுடக்கத்து. (ஐங்குறு 71:1)

காப்பியங்கள், சிற்றிலக்கியங்கள் காலத்தில் பெரிதும் விரும்பி விளையாடப் பெற்றுள்ளது என்பதை

வல்லாடாய்த்து மண்ணரசிழந்து (50)

என்று சிலப்பதிகாரமும்,

சூது உந்தலின் பொழுதுபோம் சிலர்க்கு

என்று கம்பராமாயணமும் (31 பால: நகர:68).

வட்டினும் சூதினும் வான்பொருள் வழங்கி

(ஆதிரை:7)

என்று மணிமேகலையும் தெரிவிக்கின்றன.

சூதாட இடம், கருவி, பலகை, முறை, பந்தயம் கட்டுதல், பந்தயப் பொருளைத் தீர்மானித்தல் பற்றிய செய்திகளை விரிவாகக் காப்பியங்கள் குறிப்பிடுகின்றன.

வைத்த மணியாரம் வென்றேன் மறுபலகைக்

கொத்த பணயம் உரை (225)

என்பது நளவெண்பா. உறங்காமல் இடைவிடாது போர்க்காலக் குணத்தோடு விளையாடிய செய்தியைக் கம்பராமாயணம் - சுந்தர காண்டம் - ஊர் தேடு படலம் சுட்டிக் காட்டுகிறது.

பொன்னணி வலகை சூது துயில் கிலர்

பொருது வாரூர். (சுந்தர-ஊர் தேடு:280)

சூதாட்டத்தில் பெண்களும் வல்லவர்களாயிருந்ததை மேருமந்தரபுராணம் இராமதத்தை என்பவனின் திறமையை எடுத்துக்காட்டுகிறது. இக்காலத்தில் இவ்விளையாட்டு உலக அளவிலே அரங்கிலே - ஆடப்படக்கூடிய போட்டி விளையாட்டாக உள்ளது.

**நீர் விளையாட்டு**

நீரில் விளையாடுவது, பொழுதுபோக்காக ஆடுவது. போட்டி போட்டுக் கொண்டு ஆடுவது, வெற்றிபெற வேண்டுமென்ற எண்ணத்தில் விளையாடுவது, தான் கற்ற வித்தைகளைக் காட்டிப் பரிசும் பாராட்டும் பெறுவது. பலரும் வேடிக்கை பார்க்க விளையாடுவது. நீரில் நீச்சலடித்தும், படகுகளைப் பயன்படுத்தியும் காட்டுவது. நீர் விளையாட்டு ஒரு விழாவாகவும் நடைபெற்றுள்ளது. பகல்பொழுதில் நீரில் ஆண், பெண் இருவரும் விளையாடும் விளையாட்டு. உடல் உறுப்பிற்கு, இயக்கமும் தரும் விளையாட்டு. பதிற்றுப்பத்தும், பரிபாடலும் நீர் விளையாட்டுக் குறித்த செய்திகளைப் பின்வருமாறு புலப்படுத்துகின்றன.

1. மலிபுனல் நிகழ்தரும் தீம் நீர் விழாவின் (பதிற்று 48:1)

2. விழவுப் புனல் (மேற்படி 12-99)

3. மண்ஆர் மணியின் வணர்குரல் வண்டு ஆர்ப்ப
தண் அம்துவர் பல ஊட்டிச் சலம் குடைவார்.

4. இறுவரை புரையுமாறு இருகரை ஏமத்து
வரைபுரை உருவின் துரைபல சுமந்து
பூ வேய்ந்து, பொழில் பரந்து
துனைந்து ஆடுவார் ஆய் கோதையர். (பரி 7: 40-43)

5. அறம் காவற் பெண்டிர்
மணி அணிந்த தம் உரிமை மைந்தரோடு ஆடித்
தணிவின்று, வையைப் புனல். (மேற்படி 48-50)

*தனித்திறமை, வெளிப்பாட்டுக்கு வகை செய்தது. நீரினை அடக்கி ஆளுந்திறன் வெளிப்படுதல் திட்டமிட்ட மகிழ்ச்சிப் பொழுதுபோக்கு இதன் பயனாகும். காப்பியங்களிலும், சிற்றிலக்கியங்களிலும் மிகச் சிறப்பான இடம்பெற்றுள்ளது. 'சலவிளையாட்டு', 'மஞ்சனம் ஆடல்', 'ஆய விளையாட்டு' என்ற பெயர்களில் அழைக்கப்பட்டுள்ளன. நீர் ஏறி விளையாட சுண்ணவட்டு, சுழி நீர்க்கோடு முட்டிணை வட்டு, பந்து போன்ற கருவிகள் பயன்படுத்தப்பட்டதைப் பெருங்கதை குறிப்பிடுகிறது.*

*நீர் விளையாட்டு ஒரு விழாவாகவே நடைபெற்றுள்ளது. 'நீரணி விழவு' எனச் சிலப்பதிகாரம் (சிலம்பு - நாடுகாண்காதை 22) சுட்டுகிறது. பெண்கள் நீர் விளையாட்டை நீர்ப் போராக மாற்றி விளையாடியமையைச் சீவகசிந்தாமணி (58:966) விவரிக்கிறது. உயரமான மாடம் மீது ஏறி அங்கிருந்து பெண்கள் நீரில் பாய்ந்துள்ளமை, நீரில் இசைக்கருவிகளை இசைத்த செய்திகள் பெருங்கதையில் விரிவாகக் குறிக்கப்பட்டுள்ளது. இக்காலத்தில் உலக அளவில் போட்டி விளையாட்டாக நடைபெற்று வருகிறது.*

**பந்து**

உருண்டை வடிவமுள்ள விளையாட்டுக் கருவி, கைவிரல் ரேகை பந்தின் மீது பதிந்து விடும் அளவு பளபளப்பான மேற்பரப்பு கொண்டது. பந்தெறி களம், பந்தடி மேடை இருந்த விபரங்களை இலக்கியங்கள் கூறுகின்றன. பொழுதுபோக்காகவும் போட்டியாகவும் ஆடுவது. மாலை நேர விளையாட்டு. தனியாகவும், சேர்ந்தும் விளையாடுவது. கைகளாலும், கோல் கொண்டு தட்டியும் ஆடுவது. பாடிக் கொண்டு ஆடுவது. பந்தயம் கூறி விளையாடுவது. பூவினால் ஆக்கப்பட்ட பந்துகளைப் பயன்படுத்துவது. நூலினால் வரிந்து கட்டப்பட்ட ஒருவகைப் பந்து கொண்டு ஆடுவது. மாடி வீடுகளில் - மேல் மாடத்தில் - நிலா முற்றத்தில் பெண்கள் பந்தாடியுள்ளனர்.

திட்டமிட்ட விளையாட்டு. நிலத்தில், வீட்டின் மேல் மாடித்திறந்த வெளிப்பகுதி, வெளிப்புறமான பொதுவான இடத்தில் பகல் பொழுது, நிலவு ஒளிவீசும் முன்னிரவுப் பொழுதில் ஆண் - பெண் இருபாலரும் விளையாடும் விளையாட்டு. இவ்விளையாட்டுக் குறித்த செய்திகளைச் சங்க இலக்கியங்கள் பின்வருமாறு விளக்குகின்றன.

1. வரிப்புனை பந்தொடு பாவை தூங்க (திருமுருகு -68)
2. வான்தோய் மாடத்து வரிப்பந் தசைஇக் (பெரும்பாண் - 333)
3. வரிபுனை பந்தொடு வைஇய செல்வோள் (நற் 12-6)
4. நெடுந்தேர் வழங்கும் நிலவுமணல் முற்றத்துப்
   பந்தொடு பெயரும் பரிவி லாட்டி (மேற்படி 140: 6-7)
5. பந்து நிலத்து எறிந்து பாவை நீக்கி (நற் 179-2)
6. பாலும் உண்ணாள் பந்துடன் மேவாள்
   விளையாடு ஆய மொடு (குறுந் 396-1)
7. கோதைபரிந்து வரிப்பந்து கொண்டோடி
   நோதக்க செய்யுஞ் சிறுபட்டி (கலித் 51: 3-4)
8. எறிபந்தோ டிகத்தந்தாய் கேளினி (கலித் 57:7)
9. மலரா மாலைப் பந்துகண்டன்ன (புறம் 33-13)

*அளவில் பல நிலைகளில் - பல வடிவங்களில் ஆண் - பெண் இருபாலராலும் விளையாடப்பட்டு வருகின்றது.*

**பறவைகளைக் காணலும் அவற்றின் செயல்கள் போல் செய்தலும்**

*பறவைகளைக் காண்பதற்காக வெளியிடங்களுக்குச் செல்லுதல் - தேடிக் காணுதல் - மகிழுதல் - அவற்றின் செயல் போலச் செய்து மகிழுதல் - பொழுது போவது தெரியாமல் மகிழ்ச்சிச் செயலில் ஈடுபடுதல் - திறமையினை வெளிப்படுத்திப் பரிசும் பாராட்டும் பெறுதல் - திட்டமிட்டும், திட்டமிடாமலும் வாய்ப்பு அமைவதற்கேற்பப் பயன்படுத்திக் கொள்ளுதல், பறவைகளின் செயல்களைப் போலச் செய்து மகிழும் நேரத்தில் தங்களது திறமைகளையும் அவற்றிற்குச் சொல்லித் தந்து செய்யச் செய்தல், இலக்கு குறித்து - அந்த இடத்திற்கு அனுப்பி மீண்டும் அதே இடத்திற்கு 'வரவைத்தல்' மனதில் மகிழ்ச்சி நிறைதல் - மனச்சுமை விலகுதல். பகல் பொழுதில் ஆண், பெண் இருபாலரும் விளையாடும் விளையாட்டு பொறிபுலன் இயக்கம் சார்ந்த விளையாட்டு. இவ்விளையாட்டுக் குறித்த செய்தியைப் பரிபாடல்,*

நறவுண் வண்டாய் நரம்பு உளர்நரும்
சினகமயிலாய்த் தோகை விரித்து ஆடுநரும்
கோகுலமாய்க் கூவுநரும்
ஆகுலம் ஆகுநரும். (6: 3-6)

*என விளக்குகிறது.*

மணிமயிற் பீலி மாமயிற் றொகுதி
கணிநல நோக்கியு மாடல் கண்டுவந்தும்

*என்ற பெருங்கதை வரிகள் (39: 136-137) இவ்விளையாட்டுப் பிற்காலத்தில் தொடர்ந்துள்ளதைக் காட்டுகிறது. கிளி, மயில், குயில் போன்ற பறவைகளின் செயல்களால் கவரப்பட்டப் பெண்கள் அவற்றின் செயல்கள் போலச் செய்து மகிழ்ந்துள்ளனர். கிளியுடன் மழலை மொழி பேசியதையும் (66-11), குயிலுடன் எதிர் கூவி ஓடி ஆடியதையும் (106-61), மயில் ஆடுவது போல ஆடிக்காட்டியதையும் (106-62) பெருங்கதை தெரிவித்துள்ளது. நாட்டுப்புற விளையாட்டில் அம்புலி அழைத்தல் - சிறுவர் சிறுமியர் விளையாட்டில் இடம்பெற்றுள்ளது. தாய்மார் - ஆண், பெண் இருபால*

சிறுவயதினருக்கும் நிலா காட்டி சோறு ஊட்டி - அழுகை நிறுத்தி - சிரிக்க வைக்க பயன்படுத்தியுள்ளனர்.

சங்க இலக்கியத்திலும் இருபாலர் விளையாட்டில் அம்புலி அழைத்தல் கூறப்பட்டுள்ள நிலை நாட்டுப்புற விளையாட்டோடு ஒத்துள்ளது.

சங்க இலக்கியம் கூறும் அசதியாடல் - நகையாடுதல், பரிகாசஞ்செய்தல், வேடிக்கை வார்த்தை கூறுதல் - விளையாட்டாக நாட்டுப்புற விளையாட்டில் கூறப்படவில்லை.

சங்க இலக்கிய விளையாட்டுகளுள் ஒன்றான அலவன் ஆட்டல் - இருபாலர் விளையாட்டில் உள்ளது. நெய்தல் நில மக்கள் விளையாடும் விளையாட்டாகச் சங்க இலக்கியப் பாடல்கள் மூலம் அறிய முடிகிறது. இக்காலத்தில் கடற்கரை மணல் நோக்கி ஓடிவரும் அலவன்களை அலைக் கழிப்பது பொழுதுபோக்கு நிகழ்ச்சியாக நகர மக்களுக்கு அமைந்துள்ளது. நாட்டுப்புற விளையாட்டில் வேறுபடுகிறது. நாட்டுப்புற விளையாட்டு எண்ணிவிளையாடல், பந்து, நீர் விளையாட்டு சிறுவர் சிறுமியர் விளையாட்டில் இடம்பெறுகிறது.

உலாவல் - சூது, பறவைகளைக் காணல் - அவற்றின் செயல்கள் போல் செய்தலும், பறவை, விலங்குகளுடன் விளையாடல் - போன்றவை நாட்டுப்புற விளையாட்டுக்களிலிருந்து வேறுபட்டுக் காணப்படுகிறது. நாட்டுப்புறப் பெண்கள் - பந்து விளையாடியதாகக் குறிப்பு இல்லை. சங்க இலக்கியங்கள் - பந்து விளையாட்டை சிறப்பாக எடுத்துக் கூறுகிறது. தொடர்ந்து காப்பிய, சிற்றிலக்கியங்களிலும் இடம்பெற்றுள்ளன. இருபாலாரும் சேர்ந்து விளையாடுவதாகவும் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன.

**விளையாட்டு விழாக்கள்**

நீர் விளையாட்டு விழா - மன்னன் உட்படப் பலரும் இதனைக் கண்டு மகிழ்ந்துள்ளனர். ஆட்டன் அத்தி இதில் கலந்து கொண்டு தம் திறமையைக் காட்டியுள்ளனர் (அகநானூறு 376 & 396).

**விளையாட்டோடு கூடிய நம்பிக்கைகளும், சடங்குகளும்**

பெரும்பாலான விளையாட்டுக்கள் சடங்கு நிகழ்ச்சிகளிலிருந்து தோன்றியவை என்பர். சடங்கிற்காகச் செய்யப்பட்டு வந்த நிகழ்ச்சிகள் காலப்போக்கில், காரணமின்றி வெறும் இன்பத்திற்காக விளையாட்டாக மேற்கொள்ளப்பட்டன. விதை நன்கு முற்றும் என்ற நம்பிக்கையில் விதைக்கும் விழாவில் பம்பரத்தையும், நல்ல விளைச்சல் கிடைக்கும் என்ற நம்பிக்கையில் விளை நிலத்தில் ஊசலையும் மக்கள் மேற்கொண்டதாகப் பிரேசர் குறிப்பிட்டுள்ளார்.

வானில் மிக உயரமாக ஊசலாடுவதன் மூலம் செடி, கொடிகள் நன்கு வளரும் என்று நம்பியதாகவும் பாடியவாறு ஊசலாடி உரக்கக் கத்திக் கொண்டு குதித்தால் விரைவில் தளிர்கள் வெளிவரும் என்று நம்பியதாகவும் அவர் குறிப்பிட்டுள்ளார். கயிறு இழுப்புப் போட்டிகளால் பயிர்கள் தழைக்கும் என்றும் பந்து விளையாட்டால் மழைபொழியும் என்று நாகர்கள் நம்புகின்றனர் என்பர்.

## 4.8. தொகுப்புரை

இவ்வியலில் சங்க இலக்கியப் பெண்கள் விளையாட்டுக்கள் பன்னிரண்டும், நாட்டுப்புறப் பெண்கள் விளையாட்டுக்கள் ஒன்பதும் எடுத்துக்காட்டுகளுடன் விளக்கப்பட்டுள்ளன.

விளையாட்டு வகைகள் சங்க இலக்கிய விளையாட்டுக்களும், நாட்டுப்புற விளையாட்டுக்களும் - ஒப்பீடு செய்யப்பட்டுள்ளன.சங்க இலக்கியம் குறிப்பிடும் இரு பாலர் விளையாட்டுக்கள் ஒன்பதும் எடுத்துக்காட்டுகளுடன் விளக்கப்பட்டுள்ளன.

பெண்கள் விளையாட்டுக்கள் பெரும்பாலும் அறிவுத்திறன் சார்ந்தவையாகவும், உடல் உறுப்பு இயக்கம், பொறிபுலன் இயக்கமும் சார்ந்த விளையாட்டுக்களாகவும் அமைந்துள்ளன. மேலும் பொழுது போக்கு, மனமகிழ்ச்சி-உடற்பயிற்சியுடன் கூடியதாகவும் உள்ளதை அறிய முடிகிறது.

கும்மி- குரவையாக அமைந்து திருவிழாக்காலங்களிலும், சமயம் சார்ந்த, சமயம் சாராத நிகழ்வுகளில் ஒரு நிகழ்த்துக் கலையாகவும் விளங்குகிறது. விளையாட்டோடு கூடிய நம்பிக்கைகளும், சடங்குகளும் கூறப்பட்டுள்ளன.

இயற்கைச் சூழலில் அமைந்த விளையாட்டுக்கள் உடலினை உறுதிசெய்வன- கற்பனை ஆற்றல், ஆழ்ந்த சிந்தனை, அறிவு நுட்பம், மன அழுத்தக் குறைவு, உள்ள உணர்ச்சிகளை வெளிப்படுத்தல், விட்டுக் கொடுத்தல், உடன் இருப்பவர்களுக்கு உதவுதல், போன்றவைகளை நன்மைகளாகக் கூறலாம்.

பெண்கள் தங்கள் அறிவுத்திறத்தையும், தரத்தையும் உயர்த்திக் கொள்ள அவர்களுக்கு விளையாட்டுக்கள் உதவுகின்றன.

# இயல் 5

# சங்க இலக்கிய - நாட்டுப்புற விளையாட்டுக்கள் - ஓர் ஒப்பீடு

5.0 முன்னுரை

5.1. விளக்கம் - ஒற்றுமை வேற்றுமை

5.2. வரையறை - ஒற்றுமை வேற்றுமை

5.3. விளையாட்டின் பெயர் ஒற்றுமை வேற்றுமை

5.4. ஆடும்நபர் எண்ணிக்கை - ஒற்றுமை வேற்றுமை

5.5. ஆடுகளம் - ஒற்றுமை வேற்றுமை

5.6. விளையாடும் முறை - ஒற்றுமை வேற்றுமை

5.7. விளையாட்டு வகைகள் - ஒற்றுமை வேற்றுமை

5.8. சங்க இலக்கியம் - நாட்டுப்புற விளையாட்டுக்களில் குறிப்பிடப்படும் இருபாலர் விளையாட்டுக்கள் - ஒற்றுமை - வேற்றுமை

5.9. தொகுப்புரை

# இயல் 5

## சங்க இலக்கிய - நாட்டுப்புற - விளையாட்டுக்கள் - ஓர் ஒப்பீடு

### 5.0. முன்னுரை

மனிதனின் வாழ்வியல் கூறுகளில் ஒன்றாகிய விளையாட்டுக்கள் குறித்துச் சங்க இலக்கியங்களின் பார்வை என்ன என்பதை இனங்கண்டு நாட்டுப்புற விளையாட்டுக்களோடு எவ்வகையில் ஒத்து விளங்குகிறது என்பதை இவ்வியல் ஆராய்கின்றது.

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்டனவாகப் பெரும்பாலான வரலாற்றறிஞர்களால் ஒப்புக் கொள்ளப்பட்டவை சங்க இலக்கியங்கள். காதல், வீரம் பற்றிய செய்திகளை வெளியிட்டுப் பண்டைய சமுதாய வாழ்வின் ஒரு பகுதியைச் சங்க இலக்கியங்கள் எடுத்துக்காட்டினாலும், வரலாற்றில் குறிப்பிடத்தக்க ஏனைய பண்பாட்டுச் செய்திகளைக் குறிப்பிடாமலும் இல்லை என்பதே உண்மை. இவ்வகையில் விளையாட்டுக்கள் குறித்துச் சங்க இலக்கியங்கள் வெளிப்படுத்தும் கருத்துக்களை வகைப்படுத்தி நாட்டுப்புற விளையாட்டுகளோடு ஒப்புநோக்குவதே இவ்வாய்வின் நோக்கம்.

சங்க இலக்கியங்களைப் படித்துப் பார்த்த பொழுது விளையாட்டுக்களில் சங்க மக்களுக்கிருந்த ஈடுபாடு தெளிவாகப் புலப்படுகிறது. முப்பத்தி ஏழு விதமான விளையாட்டுக்களில் கலந்து கொண்டு தங்களது தனித்திறமையை மக்கள் வெளிப்படுத்தியுள்ளனர். ஆடவர் விளையாட்டுக்கள், பெண்கள் விளையாட்டுக்கள், இருபாலர் சேர்ந்து விளையாடிய விளையாட்டுக்கள், சிறுவர் விளையாட்டுக்கள் என வகைப்படுத்தப்பட்டும் உள்ளன. இவ்வகையில் பாட்டும், தொகையும் சான்றாதார நூல்களாக இவ்வாய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன. சங்க இலக்கியங்களில் காணப்படும் விளையாட்டுக்கள் தொடர்ந்து விளையாடப்பட்டுள்ளன என்பதை அறிவதற்காக ஒரு சில காப்பியங்களும் புராணங்களும் மட்டுமே எண்ணப்பட்டுள்ளன. இக்கால நடைமுறையில் அவ்விளையாட்டுக்கள் இருப்பதை விளையாட்டுக்கள் பற்றிய இக்காலக் குறிப்புகள் வழியாகக் கருதிப்பார்க்கப்பட்டுள்ளன.

**விளையாட்டு - வரையறை**

விளையாட்டு என்பதற்குத் தமிழ்ப் பேரகராதி (Tamil Lexicon) ஐந்து பொருளைத் தந்துள்ளது. அவை யாவன:

1. பொழுது போக்குக்குரிய மகிழ்ச்சிச் செயல்
2. சிரமமின்றி இலேசாகச் செய்யுந்தொழில்
3. வேடிக்கை
4. காமலீலை
5. கலைத்தொழில் எட்டனுள் பாட நினைத்த வண்ணத்தில் சந்தத்தை விடுகை என்பனவாகும்.[1]

"விளையாட்டெனில் ஆட்டம் (Play) போட்டி விளையாட்டு (Game) வன்மை விளையாட்டு (Sports) இன்பப்பொழுது போக்கு (Reereation)"[2] என்ற தொடர்ச்சி வகையினையும் சொற்களஞ்சியம் தருகிறது.

"விளையாட்டு" என்பது வாழ்க்கைக்குப் பயிற்சி அளிக்கும் களமெனக் கூறலாம்"[3] என்பார் டாக்டர் இரா.பாலசுப்பிரமணியம்.

விளையாட்டு என்பதற்கு "விரும்புகின்ற ஆட்டம்"[4] என்றும், "இன்பம் விளைவிக்கும் ஆட்டம்"[5] என்றும், "விதிகளை விளைவித்துக் கொண்டு ஆடும் ஆட்டம்"[6] என்றும் சிலர் பொருள் குறித்துத்துள்ளனர்.

---

1 Tamil Lexicon, Vol VI Part I (Published under the authority University of Madras, 1934), p. 3730.

2 Ibid.,

3 பாலகப்பிரமணியம். இரா., பண்டைத் தமிழ்ச் சிறுவர் விளையாட்டு, செந்தமிழ்ச் செல்வி, மே 80, ப.448.

4 தேவநேயன், ஞா., தமிழ்நாட்டு விளையாட்டுக்கள், சை.சி.நூ.சென்னை, இரண்டாம் பதிப்பு, 1962.

5 இராகவையங்கார், மு., விலங்குப்போர் விளையாட்டு, தொகுதி, பாரி நிலையம், சென்னை 1964, ப.297.

6 மீனாட்சி சுந்தரம், தெ.பொ., தமிழும் பிற பண்பாடும், என்.சி.சென்னை, நான்காம் பதிப்பு, 1981.

விளையாட்டு என்பது, "மகிழ்ச்சி உணர்ச்சியோடு தொடங்கி, மகிழ்ச்சி உணர்ச்சியோடு நிகழ்ந்து, மகிழ்ச்சி உணர்ச்சியோடு முடிவது"[7], "இன்பம் மட்டும் விளைவிப்பது"[8] "விளையாட்டின் முதற்பயன் இன்பமே"[9] விளையாட்டு அதன் செயற்பாட்டிலேயே அமைதி. ஆறுதல், இன்பம் தருவது"[10] "விளையாட்டு என்பது ஒரு செயல் அதில் மனநிறைவு என்பது ஒரு பகுதி. தன் ஆற்றலை வெளிப்படுத்தும் ஒரு பகுதியே விளையாட்டு".[11]

விளையாட்டில் பொழுது போக்குதல் என்ற நிலை பொதுவான கருத்தாகும். இது விளையாட்டில் இயல்பாக அமைகிறது. ஓய்வு வேளையில் மனமகிழ்வுக்காகச் செய்யக் கூடிய எளிய அல்லது வேடிக்கையான செயல்களில் சில வரையறைகள் வகுக்கப்பட்டால் இவ்விளையாட்டிலும் ஒழுங்குமுறை ஆட்டம் உருவாகிறது. ஒழுங்கு முறைகளை ஒழுங்காகக் கடைப்பிடித்து வெற்றி பெறுகின்றவர்களைக் கண்டறிய முற்படும்போது போட்டியாட்டம் ஏற்பட்டு விடுகிறது. போட்டியாட்டத்தின் வெற்றி அல்லது முடிவினை அறிவிக்க முற்படும்போது விளையாட்டின் தரம், உயர்வு நிச்சயிக்கப்படுகிறது. இம்முடிவினைப் பெற உடல் திறனோ அல்லது அறிவுத்திறனோ அல்லது வாய்ப்பு நிலையோ காரணமாக இருக்கலாம். "உடல் திறன், அறிவுத் திறன் வளர்ச்சிக்கு உணவு முக்கிய இடத்தை வகிக்கிறது. நல்ல சத்துள்ள ஊட்ட உணவு தேவைக்கேற்ப உண்ணும் பொழுது விளையாட்டுத் துறையிலும் ஒளிவிட முடிகிறது."[12]

---

7 பெருமாள், க., விளையாட்டுக் கலை, கலைக்கதிர், மலர் 3, கோவை, நவம்பர் 1951, ப.9.

8 நவராஜ் செல்லையா, எஸ்.விளையாட்டுக்களின் விதிகள், ஏ.சி.பி.முன்னாள் மாணவர் கழகம், காரைக்குடி, மூன்றாம பதிப்பு.

9 இராசாராம், சங்க இலக்கியத்தில் மகளிர் ஆட்டங்கள், ஆய்வு மலர், தொகுதி 1, கேரளப் பல்கலைக்கழகத் தமிழ்த் துறை மாணவர் மன்ற வெளியீடு, 1972.

10 சிவகுருநாதன், சிறுமகளிர் விளையாட்டு, செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு 18, சென்னை, 1940 - 1941, ப.125.

11 பெருமாள், வ., மகளிர் விளையாட்டுக்கள் தமிழ்ப் பொழில் துணர் 47, மலர் 4, கரந்தை, ஜீலை - ஆகஸ்டு 1972, ப.116.

12 சிவகாமசுந்தரி, சு., மனையியல், மாணிக்கவாசகர் வெளியீடு, சிதம்பரம் 1992, ப.21.

"விளையாட்டிற்கு இலக்கணம் கூறுவது எளிதன்று"[13] "விளையாட்டு என்ற சொல்லானது என்ன பொருளைத் தரும் என்று பகுத்துப் பார்க்கக் கூடிய அக்கணத்திலேயே அதை விளக்குவதும், நிகழ்த்துவதும் எவ்வளவு கடினமானது"[14] என்பதை உணரமுடிகிறது என்று சிலர் கூறுவர்.

இத்தகைய விளக்கங்களை எல்லாம் ஆராய்ந்து பார்க்கும் பொழுது விளையாட்டை வரையறுப்பது கடினமெனத் தோன்றுகிறது. எனினும் விளையாட்டு என்பதற்கு,

1. தமிழ்ப் பேரகராதி தந்துள்ள விளக்கங்கள்
2. அறிஞர்கள் அளித்துள்ள பல்வேறு விளக்கங்கள்
3. ஆய்வுக்கு ஆதாரமாகிய சங்க இலக்கியங்களிலிருந்தே ஒரு நெறிமுறையை உருவாக்கிக் கொள்வது அவசியமாகும்.

விளையாட்டு பற்றிய விளக்கங்களைத் தொகுத்துப் பார்க்கும் பொழுது "விளையாட்டென்பது சிரமமின்றி இலேசாகச் செய்கிற, வேடிக்கையான, மகிழ்ச்சி நிறைந்த செயல்" என்று விளக்கம் பெறுகிறது.

## ஆய்வு நெறிமுறை

விளையாட்டுக்கள் தொடர்பான செய்திகள் சங்க இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளனவா? அவை யாவும் பெண்கள் விளையாட்டு நிகழ்ச்சிகளா? ஆண்கள் விளையாடியுள்ளார்களா? ஆண்களும், பெண்களும் தனித்தனியே விளையாடியுள்ளனரா? சேர்ந்து விளையாடியுள்ளனரா? சிறுவர் விளையாட்டுக்களுக்கு இடமுள்ளதா? இவை போன்ற வினாக்களுக்கு விடை காண்பதோடு - தொகை, வகை, விரி என்ற நெறிமுறையும், 'கண்டுணர்' முறையும் பயன்படும் என்று கருதப்பட்டது. எனவே சங்க இலக்கியங்களிலுள்ள விளையாட்டு நிகழ்ச்சிகளைத் தொகுத்து, வகைப்படுத்தி

---

13 இராசேசுவரி, ஈ.த., குழவி உள்ளம், சென்னைத் தமிழ்ச் சங்க வெளியீடு, 1950, ப.5.

14 சுப்பிரமணியப்பிள்ளை, கோ., பண்ணை விளையாட்டுக்கள், மதுரைத் தமிழ்ச் சங்கப் பொன் விழா மலர், 1956, ப.12.

நாட்டுப்புற விளையாட்டுக்களோடு ஒப்பிட்டு ஆய்வதெனவும் அமைத்துக் கொள்ளப்பட்டது.

**விளையாட்டுக்களின் வகைப்பாடுகள்**

விளையாட்டுக்களைப் பொதுவாக "அகவிளையாட்டுக்கள்" (Indoor games) என்றும் "புறவிளையாட்டுக்கள்" (Outdoor games) என்றும் பிரிக்கலாம்."[15] இவ்வகையில் பெண்கள் விளையாட்டுக்களும், சிறுவர்கள் விளையாட்டுக்களும், முதல் வகையிலும், ஆடவர் விளையாட்டுக்கள் இரண்டாம் வகையிலும் அடங்கும் என்றாலும், இதற்கும் விதி விலக்குகள் இருந்துள்ளன. காலத்திற்கும், சூழ்நிலைக்கும், மனநிலைக்கு ஏற்பப் பெண்களும் சில புறவிளையாட்டுக்களில் ஈடுபட்டுள்ளனர். தவிர காலத்திற்கேற்ப சில விளையாட்டுக்களும் வசதியையொட்டி அமைக்கப் பட்டுள்ளதையும் கருத்தில் கொள்ள வேண்டியுள்ளது.

விளையாடப்படும் நேரத்தினைக் கொண்டு பார்க்கும்பொழுது அநேகமாக இரவு நேரத்து விளையாட்டுக்கள் குறைவு என்றே கூறலாம். சிறுவர், சிறுமியர் பகலில் விளையாடுவது போலவே இரவின் முற்பகுதியிலும் விளையாட்டில் ஈடுபடுகின்றனர்.

பங்கு பெறுவோர் அடிப்படையிலும் விளையாட்டுகளை மூன்று வகையாக பிரித்துக்காணலாம். தனிநபர் விளையாட்டு, இருவர் கலந்து கொள்ளும் விளையாட்டு, குழு விளையாட்டு என்பவையாகும்.

விளையாட்டுக்களின் தன்மை அடிப்படையில் கீழ்க்கண்டவாறு நோக்கலாம்.

1. உடல் திறன்
2. அறிவுத் திறன்
3. வாய்ப்புநிலை
4. மனமகிழ்ச்சி நிலை

ஆடவர் விளையாட்டுப் பெரும்பாலும் புறவிளையாட்டுக்களாகவே உள்ளன. பொழுது போக்குநிலை மிகக்குறைவே. மேலும் இவ்வகை விளையாட்டுக்கள் அடிக்கடி

15 கருணாகரன், கி., நாட்டுப்புறவியலாய்வு நெறிமுறைகள், 1989, ப.68.

விளையாடும் இயல்பு இல்லை. வீரத்தினை வெளிப்படுத்தும் "வீர விளையாட்டு" உடல் திறனுக்கு முதன்மை கொடுக்கும் விளையாட்டு, அல்லது அதனைச் சார்ந்த நிலையில் உள்ளதாகவே உள்ளன.

அறிவுத்திறன் சார்ந்த வாய்ப்புநிலை விளையாட்டுக்கள் மகளிரிடம் அதிகமாக உள்ளன. மரபாக வருகின்ற விளையாட்டுக்களில் சிறுவர்கள் அதிகமாக ஈடுபடுவதோடு மனமகிழ்ச்சி நிலையை வெளிப்படுத்தும் விளையாட்டுக்களில் ஈடுபடுகின்றனர்.

**விளையாட்டுக்களின் தோற்றம்**

வாழ்க்கையே ஒரு போராட்டமாக இருந்த முற்கால மனிதனுக்கு அதுவே பல படிப்பினைகளைக் கற்றுத் தந்தது. அந்த அனுபவம் அவனுக்கு இயற்கையைப் புரிந்து கொள்ளவும், சமாளிக்கவும் சக்தியைத் தந்தது எனலாம். தற்காப்புக்காகத் தாண்டினான், ஓடினான், நீந்தினான், மரமேறினான், கண் விழித்தான். கையில் கிடைத்தவற்றை வைத்துக் கொண்டு போராடினான், நாடோடி வாழ்க்கையை விட்டுவிட்டு நிலைத்த வாழ்க்கைக்குத் திரும்பிய போது தனித்த வாழ்க்கை, குழு வாழ்க்கையைப் புரிந்துகொண்டு செயல்பட்டான். அப்பொழுது அவன் பெற்ற பயிற்சி அவனது வீரத்தைப் புலப்படுத்த வகை செய்தது. வீரத்தோடு, மனமகிழ்ச்சியும் இணைய விளையாட்டுக்கள் தோன்றலாயின. வீரத்தை வளர்க்க, பயத்தை விரட்ட, நம்பிக்கையை வளப்படுத்த, நண்பர்களைப் பெருக்க, பொழுதுபோக்கை வரவேற்க, முரண்பாட்டை உணர்த்த, வாழ்க்கையினையும், தொழிலினையும் எதிரொலிக்க, போலச் செய்ய எனப் பல நிலைகளில் விளையாட்டுக்கள் தோன்றலாயின.

**தமிழர் விளையாட்டுக் கொள்கை**

விளையாட்டால் உவகைக் கிடைக்கும் என்பது தொல்காப்பியத்திலும் சுட்டப்பட்டுள்ளது.

செல்வம் புலனே புணர்வு விளையாட்டென்று
அல்லல் நீத்த உவகை நான்கே[16]

[16] தொல்காப்பியம், என்.சி.பி.எச்., சென்னை, இரண்டாம் பதிப்பு, 1981.

இன்பம் தருவதே விளையாட்டின் நோக்கம் என்பது தெளிவாகிறது. சங்க இலக்கியத்தில் காணப்படும் விளையாட்டுக்களில் பெரும்பாலானவை இன்பத்திற்கு ஊறு விளைவிக்காத விளையாட்டுக்களாகவே உள்ளன என்றே சீவகசிந்தாமணி கூறுகின்றது. "நகை விளையாட்டு"[17] என்று குறுந்தொகையும் "நயந்து ஆடும் விளையாட்டு"[18] என அகநானூறும் குறிப்பிடுகின்றது. சங்க இலக்கியங்களைத் தொடர்ந்த காப்பியங்களில் நோக்கும் போது "இன்பக் காரணமாம் விளையாட்டு"[19] என்றே சீவகசிந்தாமணியும் குறிப்பிடுகின்றது.

சங்க இலக்கியத்தில் காணப்படும் விளையாட்டுக்களையெல்லாம் ஆழமாகப் பார்த்து, வகைப்படுத்திப் பொதுவான விளையாட்டுக் கொள்கையை உருவாக்கி எழுதியதாகத் தெரியவில்லை. குறிப்பிட்ட விளையாட்டு இன்ன காரணத்திற்காக விளையாடப்பட்டது என்ற குறிப்பும் கிடைக்கவில்லை. சங்கத் தமிழர் வாழ்வியல் வளர்ச்சியில் விளையாட்டுக்கள் புறக்கணிக்கப்படவில்லை என்பது மட்டும் தெளிவாகிறது. பிற நாட்டார் தங்கள் நாட்டுச் சூழ்நிலை, வளர்ச்சிக்கேற்ப வளர்ந்து வரும் விளையாட்டுக்களோடு உரசிப்பார்த்து ஒரு கொள்கையை உருவாக்குவதென்பதும் இயலாத நிலை தனிமனிதனின் மிகுதி ஆற்றலை வெளிப்படுத்தவோ, ஓய்வு நேரத்தைச் செலவழிக்கவோ, பொழுது போக்கவோ, அல்லது தனது தனித்திறமையை வெளிப்படுத்தவோ அல்லது முன்னோர் செய்து வந்ததைத் தொடர்ந்து செய்வதற்காக மட்டுமே என்பதை எண்ணி விளையாட்டுக்கள் உருவாக்கப்பட்டன என்று கூறுவதற்கில்லை. ஆற்றலும், உடல்பலமும் கொண்ட குழந்தைகள் மட்டுமே விளையாடுவதில்லை. ஆற்றல் குறைந்த வசதியில்லாத குழந்தைகள் கூட விளையாட முயற்சிப்பதையும் வெற்றி பெறுவதையும் காணலாம். ஒருவன் தன்னுடைய ஆளுமையை - தன்னை - தன் ஆற்றலை வெளிப்படுத்திக் கொள்ள உதவுகின்ற பலநிலைகளில் விளையாட்டும் ஒன்றாக உள்ளது.

---

17 குறுந்தொகை, 394:6.

18 அகநானூறு, 302:7.

19 சீவகசிந்தாமணி, தமிழ்ப்பல்கலைக்கழக வெளியீடு, 1986, பக்.456-909.

தொல்காப்பியத்திலேயே விளையாட்டு என்ற சொல்லும், அது தொடர்பான செய்திகளும் இடம் பெற்றுள்ளன. மனிதர்கள் மட்டுமல்லாது விலங்கினங்கள் கூட விளையாடியதாக இலக்கியங்களில் செய்திகள் கிடைக்கின்றன.

மகாஅ ரன்ன மந்தி மடவோர்
நகாஅ ரன்ன நளிநீர் முத்தம்
வாள்வா யெருத்தின் வயிற்றகத் தடக்கித்
தோள்புற மறைக்கு நல்கூர் நுசுப்பி
னுளரிய லைப்ப லுமட்டிய ரீன்ற
கிளர்பூட் புதல்வரொடு கிலுகிலி யாடும் (சிறுபாண். 56-61)

குழந்தைகள், நரைகூடிக் கிழப்பருவம் எய்திய பெரியவர்கள் மட்டுமன்றி இறைவன், தேவர்கள், வானவ மகளிர் போன்றோரும் விளையாடியதாகக் குறிப்பிட்டுள்ளனர்.

நரை மூதாளர்அதிர் தலை யிறக்கிக்
கவைமனத் திருத்தும் வல்லுவன பழிய (அகம். 377)

என்பது அகநானூறு. சங்க இலக்கியங்கள் தொடர்ந்த உரையாசிரியர்களின் உரைகள், காப்பியங்கள், பிற்கால இலக்கியங்கள் தரும் விளக்கங்களை யெல்லாம் திரட்டிப் பார்க்கும் பொழுது இன்பம் பெறுதல் என்பதே சங்கத் தமிழரின் விளையாட்டுக் கொள்கையாக இருக்கலாம் என எண்ணத் தோன்றுகிறது.

**விளையாட்டின் வகைப்பாடுகள்**

விளையாட்டின் வகைப்பாடுகளைப் பொதுவாக மூன்று வகையாகப் பிரிப்பர். உடல் உறுப்பு இயக்கம், பொறிபுலன் இயக்கம், அறிவு இயக்கம் என மூவகையாகும். இவ்வகையில் இருபத்தொரு விளையாட்டுக்கள் உடல் உறுப்பு இயக்கம் சார்ந்ததாகவும் பொறிபுலன் இயக்கம் சார்ந்ததாக ஆறு விளையாட்டுக்களும் அறிவு இயக்கம் சார்ந்து ஏழும், உடல் உறுப்பு, பொறிபுலன், அறிவு மூன்றும் கலந்து மூன்று விளையாட்டுகளும் சங்க இலக்கிய விளையாட்டுக்களில் காணப்பெறுகின்றன. உடல் உறுப்பு இயக்க வகை விளையாட்டுக்களே சங்க இலக்கியங்களில் அதிகமாக உள்ளன. கால்கள், கைகள் போன்ற முதன்மை உறுப்புகளின் இயக்கம் மிகப் பழமையானதென்பதை உணர்த்துவதுபோல இது அமைந்துள்ளது. உடம்பை வளர்த்து உயிரை வளர்க்கும் அடிப்படையில் இவ்வகைப்பாடுகள் விளங்கியுள்ளன. உடல் உறுப்புகளும், பொறிபுலனும் அறிவு இயக்கமாக இயங்கி இன்பம் தரும் செயலாக அமைய வேண்டும்.

இன்பத்திற்கு ஊறு விளைவிக்கும் போட்டி வகை விளையாட்டுக்களைத் தவிர்க்க வேண்டுமென எண்ணியுள்ளனர். போட்டியினால் ஏற்படும் இடர்ப்பாடுகள், இழப்புகளை உணர்ந்து விளையாட்டுக்கள் மனிதனுக்கு மகிழ்ச்சியையும், மலர்ச்சியையும் தரவேண்டுமென விரும்புயுள்ளதையே இவ்வகைப்பாடுகள் உணர்த்துகின்றன.

**திறன்மிகு விளையாட்டுக்கள்**

திறன்மிகு விளையாட்டுக்கள் பற்றிச் சங்க இலக்கியங்கள் பேசுகின்றன. கூரிய கொம்புகளை உடைய எருதுகளை ஆயுதமின்றித் தம் உடல் வலிமையால் இளைஞர்கள் அடக்கும் 'ஏறுகோள்' விளையாட்டு வீர இளைஞர்களை இனங்காண உதவியுள்ளது. இவ்வீர விளையாட்டில் தம் உயிரைப் பொருட்படுத்தாமல் இடர்த்தும், ஊர்ந்தும், அடக்கி மகிழ்ந்த இளைஞர்களை ஆயர்குடிப்பெண்கள் மணந்த வரலாறுகள் சங்க இலக்கியங்களை அழகுபடுத்துகின்றன. பந்து விளையாட்டு குறித்த செய்திகளும் ஊக்கம் தருவதாக உள்ளன. பந்து செய்வதிலிருந்து விளையாடி பரிசு பெறுவது வரை உள்ள செய்திகள் பிற்கால காப்பிய காலத்தில் இருபத்தொரு பந்துகளைப் பயன்படுத்தியும், எண்ணாயிரம் கை பந்தடித்த பெண் குறித்தும் செய்தி பெற உதவுகிறது.

உலக அரங்கில் இந்தியப் பெருமையை உயர்த்திக் காட்டும் வில் விளையாட்டில் சங்கத் தமிழர் பெற்றிருந்த தனித்திறம் கவனித்தற்குரியது. நீர் விளையாட்டும் அத்தகையதே. வேட்டை விளையாட்டு வெற்றியைக் குறிக்கோளாக வைத்துச் செயல்படுவது. வேட்டை விளையாட்டில் கிடைத்த விலங்கைப் பக்குவப்படுத்தி உண்ணும் பொழுது பகுத்துண்டு பல்லுயிர் ஓம்பும் விருந்துத்திறன் புலப்படுகிறது. கருவிகளின் துணையில்லாமல் தமது உடல் வலிமையைக் காட்டும் 'மல்' விளையாட்டு வீரர்களின் தனித்திறன் வெளிப்பட உதவியுள்ளது.

**விளையாட்டில் இசை**

சங்க இலக்கியங்களிலுள்ள பல விளையாட்டுக்கள் பாடியவாறு ஆடப்பட்டுள்ளன. 'பாடி விளையாடலும்' என்பது நற்றிணை. மகிழ்வான மனநிலையில் இன்பப் பொழுது போக்காக விளையாட்டுக்களை அமைத்துக் கொண்ட சங்க காலத் தமிழ் மக்கள் அவற்றிற்கு மேலும் சிறப்பு சேர்க்கும் வகையில் பாடியவாறு ஆடியுள்ளனர்.

தனித்தும், சேர்ந்தும் இசைத்து விளையாடியதற்கான குறிப்புகள் கிடைக்கின்றன. குரவை, பாவை விளையாட்டு, புள் ஓட்டல், ஊசல், பந்தடித்தல் போன்ற விளையாட்டுக்களில் தாளந்தப்பாமல் பாடி ஆடியுள்ளனர். கண் புதைத்து ஒளிந்தாடல் மணற்குவியலில் மறைத்தாடல், சுண்ணவிளையாட்டு போன்றவற்றில் சொற்களை உரைநடையாக உதிர்க்காமல் சிறிது இழுத்து இசைப்பது போல நீட்டி முழக்கிச் சொன்ன குறிப்புகள் தென்படுகின்றன. ஏறுகோள், வேட்டை, வில் விளையாட்டு போன்றவற்றில் இசைக் கருவிசுள் மட்டுமே ஒலிக்கப்பட்டுள்ளன. பின்னணி இசைக்குத் தக்கவாறு நீர் விளையாட்டு நடந்ததைப் பரிபாடல் சுட்டுகிறது.

தங்களது திறமையை வெளிப்படுத்த விளையாட்டு வீரர்கள் இசையைப் பயன்படுத்தியதைவிட மகிழ்ச்சிக்குத் துணையாக அமைத்துக் கொண்டனர் என்பதே பொருத்தமாக அமைகிறது. பாடியதாகக் குறிப்புகள் கிடைச்கின்றனவே தவிர இன்னபாட்டு பாடப்பட்டது என்ற பாடல் வரிகள் கிடைக்கப்பெறவில்லை. காப்பியங்களிலும் சிற்றிலக்கியங்களிலும், பிற்காலத்தில் நாட்டுப்புற இலக்கியங்களிலும் விளையாட்டுகளுக்கேற்ப பாடிய பாடல்கள் பற்றிய குறிப்புகள் கிடைக்கின்றன.

### விளையாட்டுக்கள் - வீட்டிலும் வெளியிலும்

சங்க இலக்கிய விளையாட்டுக்கள் சில நுட்பமான செய்திகளைத் தெரிவிக்கின்றன. மக்களுடைய வாழ்க்கையில் விளையாட்டுக்கள் முக்கிய இடத்தைப் பெற்றிருந்தமையை இக்குறிப்புகள் காட்டுகின்றன. தங்கள் அன்றாட பணி நேரம் போக எஞ்சிய நேரத்தில் வீட்டிலும், வெளியிலுமாக விளையாடியுள்ளனர். விளையாடுவதற்கு எத்தகு தடைகளும் சங்க கால மக்களுக்கு இருந்திருக்கவில்லை என்பதோடு அவர்கள் ஊக்குவிக்கப் பட்டுள்ளனர் என்பதும் தெளிவாகத் தெரிகிறது.

சாம விளையாட்டு, சிறுசோறு ஆக்கல், பறவை வளர்ப்பும் விலங்கு வளர்ப்பும், பிசி - நொடி விளையாட்டு, வள்ளை ஆகிய ஐந்து விளையாட்டுக்களையும் வீட்டிலிருந்தவாறே விளையாடியுள்ளனர். அலவன் ஆட்டல் தொடங்கி வேட்டை விளையாட்டு முடிய பத்தொன்பது விளையாட்டுக்கள் வீட்டிற்கு வெளிப்புறத்தில் விளையாடும் விளையாட்டுக்களாக விளையாடியிருக்கின்றனர். அசதியாடல் தொடங்கி

மலர் கொய்து மாலை தொடுத்தல் வரையிலான பதின்மூன்று விளையாட்டுக்கள் வீட்டிலும் வெளியிலுமாக விளையாடியுள்ளனர். விளையாட்டிற்கு எங்கும் யாராலும் தடையில்லை என்பதுடன் அதற்கேற்ற சூழலையும் எல்லா நிலையிலும் சங்க கால மக்கள் பெற்றிருந்தனர். வீட்டிற்கு உரியவள் பெண் என்ற குரல் ஒலித்துக் கொண்டிருந்தாலும் வீட்டை விட்டு வெளியில் சென்று விளையாட அவள் அனுமதிக்கப்பட்டிருந்த செய்தியும் தெளிவாகத் தெரிகிறது. தனியாகவும், கூட்டமாகவும் பெண்கள் வெளியில் சென்று பாடி, ஆடி விளையாடியுள்ளனர்.

**விளக்கம் : ஒற்றுமை**

விளையாட்டுக்களை வாழ்வின் ஒரு கூறாகவே சங்க கால மக்களும் - நாட்டுப்புற மக்களும் கொண்டிருந்தனர். பல நிலைகளில், பல வகைகளில், பல சூழல்களில் விளையாட்டை மேற்கொண்டிருந்தனர். அகவிளையாட்டு - புறவிளையாட்டு - வீட்டில், வெளியில் தனித்தனியாக - இருபாலர் சேர்ந்து விளையாடல் முறைகளில் ஒற்றுமை நிலவுகிறது.

மகிழ்ச்சி விளையாட்டு, பொழுதுபோக்கு விளையாட்டு இந்த வகையிலும் ஒற்றுமை நிலவுகிறது. காதல் - வீரம் - இவற்றையும் அடிப்படையாகக் கொண்டுள்ளது.

**வேற்றுமை**

நாட்டுப்புற விளையாட்டுக் குறித்து பாட்ரிக் (Patrich) "விளையாட்டுக்கள் அசதியினின்றும் விடுதலை பெறத் தேவைப்படுகின்றன" என்று கூறுகிறார். ஆப்பிள்டன் லேடி (Appleton Lady) "நாட்டுப்புற விளையாட்டுக்கள் மூளையைப் பாதிக்காமல் ஒருவருடைய உள்ள உணர்ச்சிகளை வெளிக்கொணர நல்லவழி" என்று கூறுகிறார்.

சங்க இலக்கியத்தில் கூறப்படும் சில விளையாட்டுக்கள் நாட்டுப்புற விளையாட்டுக்களாக இல்லாமல் - தொழில் அடிப்படையில் அமைந்துள்ளன. எடுத்துக்காட்டாக செடி - கொடி வளர்ப்பு, பறவை வளர்ப்பு - விலங்கு வளர்ப்பு, மலர் கொய்தலும் மாலை தொடுத்தலையும் கூறலாம். எதிரொலி - புள் ஓட்டல், பந்து, கவண்

போன்ற விளையாட்டுக்கள் வீட்டிற்குள் இருக்கும் பெண்கள் வெளியிடங்களுக்குச் சென்று மேற்கூறிய விளையாட்டுக்களில் ஈடுபடுதல் என்பது முற்றிலும் வேறுபட்டுள்ளது.

வெற்றி, தோல்வி - தோற்றானைக் கேலி செய்தல், தோற்றவர்க்குத் தண்டனை, தோற்றவர் தன் ஆடு கருவியை இழத்தல் - நாட்டுப்புற விளையாட்டின் பொதுக்கூறுகளில் சங்க இலக்கிய விளையாட்டுக்கள் மாறுபட்டுள்ளன.

## 5.2. வரையறை : ஒற்றுமை

விளையாட்டு என்பதற்குத் தமிழ்ப் பேரகராதி (Tamil Lexicon) குறிக்கும் ஐந்து பொருள்களின் அடிப்படையிலேயே அமைந்துள்ளன.

"விளையாட்டு வாழ்க்கைக்குப் பயிற்சி அளிக்கும் களம்" என்று நாட்டுப்புற விளையாட்டுக் குறித்து அறிஞர் தரும் கருத்துத்தோடு ஒத்துள்ளது.

எடுத்துக்காட்டாக - சிறுசோறு ஆக்கல், சிறுதேர் சிற்றில், பாவை முதலிய விளையாட்டுக்களைக் கூறலாம்.

திட்டமிட்டும், திட்டமிடாமலும், விளையாட்டின் தன்மைக்கும், சூழலுக்கும் ஏற்ப விளையாட்டுக்கள் விளையாடப்பட்டன.

## வேற்றுமை

கட்சி பிரித்தல், அடையாளம் கொண்டு வருதல், சாட்பூட்திரி, காயா? பழமா? இடையில் நிறுத்துதல், பாட்டம், உப்பு வைத்தல் போன்ற நாட்டுப்புற விளையாட்டுக்களில் வரையறைகள் சங்க இலக்கிய விளையாட்டுக்களில் இடம் பெறவில்லை.

## 5.3. விளையாட்டின் பெயர்: ஒற்றுமை - வேற்றுமை

சங்க இலக்கிய விளையாட்டுக்கள் - இருபாலர் விளையாட்டுக்கள், ஆடவர் விளையாட்டுக்கள், பெண்கள் விளையாட்டுக்கள் எனப் பகுத்துப் பார்க்கப்பட்டுள்ளது.

குழந்தை விளையாட்டுக்கள் (இருபால்) சிறுவர், சிறுமியர் விளையாட்டுக்கள், ஆடவர் விளையாட்டுக்கள், பெண்கள் விளையாட்டுக்கள் எனப்பிரித்து சங்க இலக்கிய

விளையாட்டுக்கள் - நாட்டுப்புற விளையாட்டுக்களுடன் எவ்வாறு ஒத்தும் வேறுபட்டும் விளங்குகிறது என்பதை அறியலாம்.

**குழந்தை நிலை**

1. அம்புலி காட்டல்
2. எண்ணி விளையாடல்
3. கண் - புதைத்து ஒளிந்தாடல்
4. பறவை விலங்குகளுடன் விளையாடல்.

சங்க இலக்கியத்தில் கூறப்படும் அம்புலி அழைத்தல் நாட்டுப்புற விளையாட்டில் அதே பொருண்மையுடன் ஒன்றியுள்ளது.

எண்ணி விளையாடல் என்பது உப்பு வண்டிகள் குதிரைகளை எண்ணுவது என்று கூறப்படும் சங்க இலக்கிய விளையாட்டு.

நாட்டுப்புற விளையாட்டில் எண்ணுப்பெயர்களை அறிந்துகொள்ளும் பொருட்டு " ஒன்று யாவர்க்கும் தலை ஒன்று இரண்டு முகத்தின் கண் இரண்டு . . . . . என பாடலாகக் கூறி,

ஒரு குடம் தண்ணீர் ஊற்றி ஒரு பூப்பூத்ததாம்
இரண்டு குடம் தண்ணீர் ஊற்றி இரண்டு பூப்பூத்ததாம். . . .
. . . . . . . . . . . .

எண்ணுப் பெயர்களை அறிய பயிற்சி கொடுப்பதாக இவ்விளையாட்டு அமைந்துள்ளது.

'கண்புதைத்து ஒளிந்தாடல்' என்ற விளையாட்டு 'கண்ணாமூச்சி' 'கண் பொத்திக் கைக்கிள்ளல்' என்ற பெயர்களில் உள்ளது. இக்காலத்தில் ஒருவர் கண்ணைப் பொத்திக் கொண்டு மற்றவர்கள் ஒளிந்து விளையாடும் சிறுவர் சிறுமியர் விளையாட்டாக உள்ளது.

பறவை, விலங்குகளுடன் விளையாடல் என்ற விளையாட்டு இக்காலத்தில் - பறவை, விலங்குகளின் பெயர்களைக் குழந்தைகளுக்கு விளையாட்டாக அறியச் செய்யும் வகையில் பாடலாக அமைந்துள்ளது.

காக்கா காக்கா

கண்ணுக்கு மைகொண்டு வா

குருவி குருவி கொண்டைக்குப் பூக் கொண்டு வா

கிளியே கிளியே

கிண்ணத்தில் பால் கொண்டு வா.

*சங்க காலம் வீரஞ்செறிந்த காலம் துஷ்யந்தன் - சகுந்தலை இவர்களின் புதல்வன் பரதன் சிங்கக் குருளையுடன் விளையாடினான் என வரலாறு கூறுகிறது. புலிக்குருளை, மான்கன்றுகளுடன் விளையாடி மகிழ்ந்துள்ளனர். பரத கண்டம் - பாரத நாடு - மனிதர்களை நேசிப்பதைவிடவும் பறவை, விலங்குகளை அதிகம் நேசித்தனர்.*

*இவ்விளையாட்டு சங்க கால விளையாட்டிலிருந்து சற்று வேறுபட்டுள்ளது.*

**சிறுமியர் விளையாட்டுக்கள்**

1. *சிறுசோறு ஆக்கல்*
2. *சிற்றில் செய்தல்*
3. *பாவை விளையாட்டு*
4. *மணற்குவியலில் மறைத்தாடல்.*

*இவ்விளையாட்டுக்கள் - நாட்டுப்புற விளையாட்டிலும் இடம் பெற்றுள்ளன. போலச் செய்தல் பண்பு அடிப்படையில் சிறுசோறு ஆக்கல் சிறுமியரின் இல்லறப் பண்பை இளமையில் உள்ளதாகக் காட்டுவதில் - ஒன்றுபட்டுள்ளது.*

*சமைக்கும் முறையில் செல்வச் செழிப்புள்ள சங்க காலச் சிறுமியர், மரகதம், வைரம், அகில், பனிநீர், முத்து, செம்மணி, பொன் இவற்றை வைத்து விளையாடி உள்ளனர்.*

*நாட்டுப்புறச் சிறுமியர் கற்களில் அடுப்புகட்டி மண்ணால் செய்த பானை - சட்டிகளில் இலை - தழைகளைக் கொண்டு சமைத்தனர். சமைத்த உணவைத் தாமும் உண்டு மற்றவர்களுக்குப் பரிமாறி உண்ணச் செய்வதில் ஒன்றுபட்டுள்ளனர்.*

**சிற்றில் செய்தல்**

சிற்றில் செய்தல் என்ற சங்க இலக்கிய விளையாட்டு, மணலில் வீடு கட்டி விளையாடும் நாட்டுப்புற விளையாட்டுடன் ஒன்றுபட்டுள்ளது.

**பாவை விளையாட்டு**

இயற்கையில் கிடைத்த குரவ மலர் கொண்டு பாவை செய்து விளையாடியதைக் "குரவம் பாவை" என்ற தொடர் தெரிவித்துள்ளது. மணல், மலர், பவழம், முத்து, சிப்பி, பொன் முதலியன பாவை செய்வதற்குப் பயன்பட்டுள்ளன.

நாட்டுப்புறச் சிறுமியர் - பொம்மைகளை வைத்துக் கொண்டு விளையாடியுள்ளனர். (மரப்பாச்சி எனப்பெயர்) தாலாட்டி, கதைகள் சொல்லி பொம்மையைக் குழந்தையாகக் கற்பித்துக் கொண்டு விளையாடிய நிலை இருவகை விளையாட்டிலும் உள்ளது.

**மணற்குவியலில் மறைத்தாடல்**

மண்ணிற்குள் ஏதேனும் ஒரு பொருளை மறைத்து வைத்து விளையாடிய விளையாட்டு ஒன்றுபட்டுள்ளது.

**சிறுவர் விளையாட்டுக்கள்**

| சங்ககாலம் | நாட்டுப்புறம் |
|---|---|
| 1. குறும்பு விளையாட்டுக்கள் | 1. ஒரு தலையில் ஆடு, மாடு மேயுதாம் |
| 2. சாம விளையாட்டுக்கள் | 2. கற்பனைப் பெயரிட்டு விளையாடுவது |
| 3. சிறுதேர் | 3. சப்பரம் |
| 4. சிறுபறை | 4. தகரடப்பாக்களைத் தட்டி விளையாடுதல் |
| 5. வட்டு | 5. பளிங்கு |

வட்டு என்று குறிக்கப்பெறும் சங்க இலக்கியம் கூறும் சிறுவர் விளையாட்டு நாட்டுப்புறச் சிறுவர்கள் விளையாடும் பளிங்கு விளையாட்டைக் குறிக்கிறது. ஏனெனில் விளையாட்டுக் கருவி - விளையாடும் முறை - அனைத்தும் ஒத்துள்ளது. இது விளையாட்டின் பெயரில் மாறி உள்ளது.

**ஆடவர் விளையாட்டுக்கள்**

**ஒத்த விளையாட்டுக்கள்**

1. ஏறுகோள்
2. விற்போர்
3. மற்போர்
4. சூது

ஏறுதழுவல் - சல்லிக்கட்டு, மஞ்சு விரட்டு என்ற பெயர்களில் நாட்டுப்புற விளையாட்டாக உள்ளது.

இலட்சியம், போட்டி, பொழுதுபோக்கு வீரத்தை நிலை நாட்டுவது விற்போர் (விற்போர் அரசர்களின் விளையாட்டாக) இருந்தது. நாட்டுப்புற மக்கள் வேட்டை ஆடுதலைத் தொழிலாகக் கொண்டு - கொடிய விலங்குகள் தாக்காதிருக்க தற்காப்புக்காக மேற்கொண்டனர். 'கில்டாபில்ட்' என்று சிறுவர்கள் விளையாடுகின்றனர் வேறுபட்டுள்ளது.

சூது - சங்க இலக்கியம் பெண்களும் ஆடியதாகக் கூறுகிறது. நாட்டுப்புற விளையாட்டில் 'சொக்கட்டான்' என்ற பெயரில் இவ்விளையாட்டு அமைந்துள்ளது.

**மல்**

வீரத்தை வெளிப்படுத்த நடைபெறும் போட்டி விளையாட்டு - ஒத்த தன்மையுடன் உள்ளது.

'குதிரையேற்றமும் யானை ஏற்றமும்' என்ற சங்க இலக்கிய விளையாட்டின் பெயர் நாட்டுப்புற விளையாட்டில் இல்லை. சிலம்பம், சடுகுடு, ஆடு புலி ஆட்டம் போன்ற நாட்டுப்புற விளையாட்டுக்களின் பெயர்கள் சங்க இலக்கிய விளையாட்டில் குறிக்கப்படவில்லை.

**பெண்கள் விளையாட்டுக்கள்**

| சங்க இலக்கியம் | | நாட்டுப்புற இலக்கியம் |
|---|---|---|
| 1. கழங்கு | - | கல்லாங்காய் எனப்பெயர் மாற்றம் ஆனால் ஆடும்முறை - பாடல் ஒற்றுமை. |
| 2. குரவை | - | கும்மி (பாடிக் கொண்டே ஆடல்) ஆண்களும் ஆடியுள்ளனர். (ஒயில் கும்மி) |
| 3. ஊசல் | - | ஊஞ்சல் விளையாட்டாக உள்ளது. பொழுதுபோக்கு, மனமகிழ்ச்சி - தனிப்பட்ட நோக்கம் இல்லை. பெண்கள் விளையாட்டாக இருந்தாலும் ஆண்களும் ஆடியுள்ளனர். ஆடும்போது வேகமும், முறையும் மாறி விடுகிறது. |
| 4. பிசி - நொடி விளையாட்டு | - | ‘விடுகதை போடுதல்’ என்ற விளையாட்டு நிகழ்வாக இன்றும் மக்களிடம் வழக்கில் உள்ளது. எதிரொலி கேட்டல், கவண், பந்து, சுண்ணம்தூவல் வள்ளை, செடி - கொடி வளர்ப்பு, பறவை வளர்ப்பும் விலங்கு வளர்ப்பும், மலர் கொய்தலும் மாலை தொடுத்தலும் இவற்றில் சில விளையாட்டுக்கள் இல்லை. |

சில விளையாட்டுக்கள் விளையாட்டு முறையில் மாறுபட்டும் உள்ளன. செடி - கொடி வளர்ப்பு, பறவை வளர்ப்பும் விலங்கு வளர்ப்பும், புள் ஓட்டல் (தானியங்களைத் தின்னவரும் பறவைகளை ஓட்டல்) மலர் கொய்தலும் - மாலை தொடுத்தலும் - ஒரு தொழிலாகவே உள்ளன. வள்ளை என்பது உலக்கைப்பாட்டு என்று கூறப்படுகிறது. வேலையின் சுமை தெரியாத வகையில் பாடிக்கொண்டே செய்வது. சுண்ணம் தூவல் - ஹோலிப் பண்டிகையாகத் தற்பொழுது உள்ளது. ‘பந்து’ விளையாட்டு சங்க இலக்கியங்கள்- காப்பியங்களில் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளது. நாட்டுப்புற விளையாட்டில் குறிக்கப்படவில்லை.

சங்க இலக்கியம் ஆண் - பெண் இருபாலர் விளையாட்டுக்கள் எனக் கூறும். கீழ்வரும் விளையாட்டுக்கள் நாட்டுப்புற விளையாட்டுக்களில் சொல்லப்படவில்லை.

1. அசதியாடல் (பரிகாசஞ்செய்தல்) - இதை நாட்டுப்புற விளையாட்டாகக் கூறுவதில்லை.
2. அலவன் ஆட்டல் - நெய்தல் நிலத்தில் நடைபெறுவது
3. உலாவல் - விளையாட்டாக இல்லை
4. சூது - நாட்டுப்புறப் பெண்கள் விளையாட்டில் இல்லை.
5. நீர் விளையாட்டு - நாட்டுப்புற பெண்கள் விளையாட்டில் இல்லை. ஆனால் சிறுவர்கள் விளையாட்டில் உள்ளது.

இவ்வாறாகச் சங்க இலக்கிய விளையாட்டுக்களில் இடம் பெறும் விளையாட்டுக்கள், நாட்டுப்புற விளையாட்டுக்களின் பெயர்களோடு ஒன்றியும் சில விளையாட்டுக்களின் பெயர்கள் மாற்றத்தோடும் - சில வேறுபட்டும் உள்ளதை அறிய முடிகிறது.

## 5.4. ஆடும் நபர் எண்ணிக்கை - ஒற்றுமை வேற்றுமை




தனியர் - இருவர் - குழு என எண்ணிக்கை அடிப்படையில் விளையாடும் போது சங்க இலக்கிய நாட்டுப்புற விளையாட்டுக்களின் ஒற்றுமை வேற்றுமைகளை நோக்கலாம். ஏறுகோள் என்று சங்க இலக்கியம் கூறும் விளையாட்டு நாட்டுப்புற விளையாட்டில் - ஏறுதழுவல், மஞ்சுவிரட்டு, சலவிக்கட்டு என்று அழைக்கப்படுகிறது.

இளைஞர்கள் ஆர்வமுடன் கலந்து கொண்ட ஒரு வீரவிளையாட்டு. கூரிய கொம்புகளை உடைய எருதுகளை ஆயுதம் ஏதுமின்றித் தம் உடல் வலிமையால் இளைஞர்கள் அடக்குவர். இவ்வீர விளையாட்டில் தம் உயிரைப் பொருட்படுத்தாமல் அடர்த்தும் ஊர்ந்தும், அடக்கி மகிழ்வர்.

ஆயர்குடிப் பெண்கள் இத்தகு வீரவிளையாட்டுக்காகவே காளைகளை வளர்ப்பர். இவ்விளையாட்டில் வெற்றி பெறும் இளைஞனை விரும்பி மணந்துள்ளனர்.

தான் விரும்பிய பெண்ணை அடைய ஆண்மகன் துணிவோடு அக்காளையை அடக்கி அப்பெண்ணை அடைவான். இது சங்க இலக்கிய விளையாட்டு என்று கூறப்பட்டாலும், மக்கள் வாழ்வியல் உண்மைகளின் உரசலே இலக்கியங்கள் என்பதை யாரும் மறுப்பதற்கில்லை.

இன்றும் மேற்குறித்த விளையாட்டு, பொங்கல் திருநாள் முடிந்த மூன்றாம் நாள் 'மஞ்சுவிரட்டு' அல்லது 'சல்லிக் கட்டு' என்ற பெயர்களோடு விழாபோல் சிறப்பாக நடத்தப்பெறுகிறது. காளையின் கொம்பில் தங்கச் சங்கிலி அல்லது பணமுடிப்பு வைத்துபோட்டி விளையாட்டாக, இவ்விளையாட்டை மேற்கொள்வது நடைமுறையில் உள்ளது.

**வில் விளையாட்டு**

கற்றுத்தரக் கைதேர்ந்த ஆசிரியர்கள் இருந்துள்ளனர். விளையாட்டுத் தொடக்கத்தில் விழா நடத்துவது. ஆசிரியருக்கு மரியாதை செய்வது - சிலவகை அடையாளங்களை உருவாக்கி அவற்றின் மீது அம்பெய்தல் - போட்டி போட்டு விளையாடுதல் - பரிசு பெறுதல் - இலட்சியத்தில் வெற்றி பெறுவது. பொழுது போக்காகவும் - வீரத்தை நிலை நாட்டிக் கொள்ளவுமாகப் பயன்படுத்தப்பட்டது.

வில் விளையாட்டுக் குறித்து,

தடக்கையின்
வண்ண வரிவில் லேந்தி யம்பு தெரிந்து. (குறிஞ்சி 123-124)

என்கிறது குறிஞ்சிப்பாட்டு.

**நாட்டுப்புற விற்போர்**

*மனிதர்கள் தங்கள் தேவைக்கேற்ற பொருட்களைப் பெற, காடு மற்றும் மலைப்பகுதிகளுக்குச் செல்ல வேண்டிய கட்டாயம் இருந்தது. காட்டுப் பகுதிகளுக்குச் செல்லும்போது அங்குள்ள விலங்குகளிடம் இருந்து தற்காத்துக் கொள்ள வில் முதலிய ஆயுதங்களைப் பயன்படுத்தினர். அது பின்னாளில் போட்டியாக வளர்ந்து விளையாட்டாக மலர்ந்தது.*

*இவ்விளையாட்டால் கூர்ந்து நோக்கும் திறன், குறி பார்த்து அடிக்கும் ஆற்றல், நுட்ப அறிவு ஆகியன வளர்கின்றன.*

*தானியங்களைத் தின்னும் பறவைகளை விரட்டக் 'கவண்கல் வீசல்' என்ற ஒன்றும் உண்டு. சிறுவர்கள் கிராமங்களில் இதைக் 'கில்டாபில்ட்' என்று கூறுவர். அரச குடும்பத்தினர் பின்பற்றிய விற்போர் முதலியன அருகி 'கில்டாபில்ட்' என்ற விளையாட்டினைத் தற்போது மேற்கொள்கின்றனர்.*

**ஒன்றுக்கு மேற்பட்டோர் விளையாடுவது:**

**மணற்குவியலில் மறைத்தாடல்**

*மணற்குவியலில் ஒரு பொருளை மறைத்து வைப்பதும், அதனைக் கண்டெடுக்குமாறு தன்னுடன் விளையாடுபவரைக் கேட்பது. திட்டமிட்ட பொழுதுபோக்கு விளையாட்டு. ஆர்வத்தைத் தூண்டுவது. எப்படியும் கண்டு பிடித்துவிட வேண்டுமென்ற உறுதியை வளர்ப்பது. புன்னைக்காயை மணலில் மறைத்து விளையாடிய செய்தியை நற்றிணைப் பாடல்*

விளையாடு ஆயமொடு வெண்மணல் அழுத்தி (நற். 172:1)

*என்கிறது.*

**மணல் விளையாட்டு**

*இது இருவர் விளையாடும் விளையாட்டாகும்.*

**மணல் குழி**



மணலை முட்டாகக் குவித்து படத்தில் உள்ளவாறு எதிர் எதிராக அமர்ந்து கொள்ள வேண்டும்.

மாதுமாது மனவரஞ்சிதம்
கோது கோது கொழுந்து வெத்தலை
வெள்ளிக்கு ரெண்டாம் சொல்லிக் கொடுத்தா
டாயக் கோ டப்பக்கோ
டில்லாங்கு கோடியே கோடியே

என்று பாடிக்கொண்டே சிறிய கல்லொன்றை எடுத்து இருவரிசை பத்துக் குழிக்குள்ளும் எதில் வேண்டுமானாலும் எதிர் இருப்பவர். அறியாவண்ணம் கல்லை மறைத்து வைத்துவிடவேண்டும். மூன்று வாய்ப்புகள் உண்டு. எதிரில் இருப்பவர் சரியாகக் கண்டுபிடித்துவிட்டால் புள்ளியும் பெற்று ஆட்டம் தொடரலாம். சரியாகக் கூறாவிட்டால் ஆடியவரே ஆடவேண்டும். ஒவ்வொரு முறையும் பாடிக்கொண்டே ஆடுவர். அதிகப் புள்ளிகள் பெற்றவர் வென்றவர் ஆவர்.

இவ்விளையாட்டில் சொல்லப்பட்ட விதிமுறைகள் சங்க இலக்கிய மணல் விளையாட்டில் இல்லை. ஒளிய வைத்தல் மட்டும் ஒன்றுபட உள்ளது.

**மல்**

கருவிகளின் துணையில்லாமல் தமது உடல் வலிமையால் இருவர் தமக்குள் சண்டையிடும் ஒரு வகை வீரவிளையாட்டு. போர் முறை என்றும் கூறலாம். பலர் முன்னிலையில் நிகழுவது; திட்டமிட்டது. சிறப்பாக ஆடுவோருக்குப் பரிசில், பட்டங்கள் வழங்கப்பட்டுள்ளன. ஆட்டத்தில் தவறு நேராமல் பார்த்துக்கொள்ள நடுவர்

நியமிக்கப்பட்டிருந்தார். வெற்றி பெற வேண்டும் என்ற குறிக்கோள் இருந்ததே தவிரபோட்டி, பொறாமை உணர்ச்சிக்கு இடந்தராமல் பார்த்துக் கொள்ளப்பட்டது. பொழுது போக்காகவும், மகிழ்ச்சியை வெளிப்படுத்துவதாகவும் அமைந்தது.

மல் ஆர் அகலம் வடு அஞ்சி. (பரி 12:72)

நாட்டுப்புற விளையாட்டும் மற்போர் குறித்து 'மல்' என்றால் வலிமை என்று பொருள், தம் வலிமையை வெளிப்படுத்தப் போரிடுவதே இவ்விளையாட்டு என்கிறது. உண்மையாகவே உள்ளத்தில் சினமோ பகையோ, இல்லாமல் வெற்றி, தோல்விக்காக ஆடும் விளையாட்டு. இதற்குப் பயிற்சி தேவை.

'ஒத்தைக்கு ஒத்தை', 'ஒண்டிக்கு ஒண்டி வா' என்றும் 'மல்லுக்குக் கூப்பிடுகிறான்', 'மல்லுக் கட்றான்', 'வந்த வம்பைவிடமாட்டேன் வலுவிக்குப் போகமாட்டேன்' என்றெல்லாம் கொச்சையான சொற்கள் மூலம் இவ்விளையாட்டு கிராமப்புறங்களில் இன்றும் நடைமுறையில் உள்ளது என அறியலாம்.

**கழங்கு**

இயற்கையில் கிடைத்த காய்களைக் கொண்டு எறிந்தும், எடுத்தும், உயரத் தூக்கிப் போட்டும், கீழே கொட்டியுள்ளதைப் பொறுக்கியுமாக ஆடியுள்ளனர். பெண்கள் தங்களது இல்லங்களின் பின்புறத்திலும், மரநிழலிலும், மேன்மாடங்களிலும் அமர்ந்து ஆடுவர். இருவர் விளையாடுவது. பந்தயம் கூறி ஆடுவது. பாட்டுப்பாடிக் கொண்டே ஆடியுள்ளனர். நாளடைவில் பொன், மணி, முத்து, பூக்களால் ஆன கழங்கு கொண்டு ஆடிய விவரம் தெரிகிறது. கைக்குள் அடக்கக் கூடிய கழங்குக் காய்கள் விளையாட்டில் பயன்படுத்தப்பட்டுள்ளன. கழங்காடுவது குறித்து,

முத்த வார்மணற் பொற்கழங் காடும்

(பெரும்பாண் - 335)

என்கிறது பெரும்பாணாற்றுப்படை பாடல்.

**கல்லாங்காய்**

சிறுசிறு கற்களைக் காயாக இவ்விளையாட்டிற்குப் பயன்படுத்துவதால் இப்பெயர் வந்திருக்கலாம். (கற்களை நன்கு தேய்த்து ஆடுவதற்கு ஏற்றவாறு வழுவழுப்பாகச் செய்து கொள்வர்)

ஏழுகாய்கள் இவ்விளையாட்டில் பயன்படுத்தப்படுகின்றன. காய்கள் சிறுகற்களாக அமைகின்றன. கீழே வைக்கப்பட்டுள்ள காய்களில் ஒன்றைக் கையில் எடுத்துக்கொண்டு அதை மேல்நோக்கி எறிதல் வேண்டும். மேலெறியப்பட்ட காயானது கீழே வருவதற்குள் கீழ்வைக்கப் பட்டுள்ளதிலிருந்து மற்ற காய்கள் அசையாமல் ஒரு காயை விரைவாக எடுக்க வேண்டும்.

இதில் விரைவும், நிதானமும் தேவை. கீழுள்ள காய்களைத் தொட்டு எடுக்கும் போது, எடுக்கும் காயைத் தவிர மற்றவை அசைந்தால் விளையாட்டில் தோற்றவராகக் கருதப்பட்டு அடுத்தவர் ஆடவாய்ப்புத் தரப்படுகிறது. இப்படியே ஆட்டம் தொடர்கிறது. பத்து ஆட்டங்கள் ஆடப்படுகின்றன. ஒவ்வொரு ஆட்டத்திற்கும் ஒரு விதிமுறை உள்ளது. ஒவ்வொரு ஆட்டத்திற்கும் ஒரு பாடல் பாடப்படுகிறது. எழுத்து மாற்றம், சொல் மாற்றம் உண்டு.

பொதுவாக இவ்விளையாட்டு அதிக விழுக்காடு மகிழ்ச்சியான பொழுது போக்கிற்கும், பெண்களை வீட்டிற்குள்ளே இருத்திப் போடவும் பயன்பட்டிருக்கிறது என்ற கருத்தை அறிய முடிகிறது. இருப்பினும் ஒவ்வொரு கட்ட ஆட்டப்பாடலையும் கவனிக்கும் போது அந்தந்த சமூகச் சூழலும், சமூகத்தின் நிகழ்வும் சமூகப் பழக்க வழக்கங்களும் கூட இப்பாடல்களில் புகுத்தப்பட்டுள்ளன என்பதை உணர முடிகிறது.

சங்க இலக்கிய வில், மல், கழங்கு விளையாட்டுக்கள் இருவர் விளையாட்டாகக் கொள்ளப்பட்டு நாட்டுப்புற விளையாட்டுகளோடு ஒத்த தன்மையை விளையாட்டு முறையின் மூலம் காணமுடிகிறது. சிற்சில விதிமுறைகள் மாறுபடலாம்.

## குழு விளையாட்டு

### கண் புதைத்து ஒளிந்தாடல்

ஒருத்தியின் கண்களை மற்றொருத்தித் தன்கைகளால் மறைத்து நிற்க அந்த நேரத்தில் பிற மகளிரெல்லாம் மறைவான இடங்களுக்குச் சென்று ஒளிந்து கொள்வார்கள். பின்னர், ஒளிந்தவர்களைக் கண்டு வருமாறு கண் பொத்தப்பட்டு நின்றபெண் செலுத்தப்படுவாள். திட்டமிட்ட விளையாட்டு பரபரப்பும், எதிர் பார்ப்பும் உடையது. கண்ணைப் பொத்துகின்றவள் விளையாட்டுத் தொடர்பாகச் சில பாடல்

வரிகளைச் சொல்லி விளையாட்டை ஊக்குவிப்பாள். பலரும் சேர்ந்து விளையாடுவது சோலைகளிலும், ஒளிந்து கொள்ள வசதியான இடங்கள் உள்ள பகுதிகளிலுமாக ஆடுவது. இவ்விளையாட்டுக் குறித்து,

நலம் பெறு கை இன் என் கண் புதைத்தோய்

(ஐங்குறு 293-2)

என்கிறது சங்கப்பாடல்.

**கண்ணாமூச்சி**

முதியள் ஒரு சிறுமியின் கண்ணைப் பொத்திக் கொள்வாள். மற்றவர்கள் ஓடி ஒளிந்து கொள்வர். முதியவள் பொத்தியிருந்த கண்ணைத் திறந்து,

கண்ணாமூச்சி ரே ரே

காதடைப்பான் ரே ரே

பீமுட்டையைத் தின்னுபுட்டு

நல்ல முட்டை கொண்டு வா

எனக் கூறுவாள். ஒளிந்து கொண்டிருப்பவர்களைக் கண்டுபிடித்து தொடவேண்டும். இதற்கிடையில் ஒளிந்து கொண்டிருப்பவர்கள். முதியவளை வந்து தொட்டுவிட்டால் அவர்கள் 'அவுட்' ஆவதில்லை. கண்பொத்தி வந்தவள் பிடித்துவிட்டால் பிடிப்பட்டவள் கண்பொத்தி வரவேண்டும். யாரையும் தொடாவிட்டால் அவளே மீண்டும் கண்ணைப் பொத்தி வரவேண்டும். இவ்வாறாக ஆட்டம் தொடரும்.

இவ்விளையாட்டில் கண் பொத்துதல், ஒளிந்தவர்களைக் கண்டுபிடித்தல், பாடல் ஆகிய செயல்கள் ஒத்த தன்மையாய் உள்ளன.

**குரவை**

இது ஒருவகை நாட்டியம். இதனை விளையாட்டாகவும் மேற்கொண்டுள்ளனர். அம்மானை, ஊசல், கழங்கு, பந்து என்ற பல விளையாட்டுக்களின் வரிசையில் குரவையும் இடம்பெற்றுள்ளன. திட்டமிட்ட விளையாட்டு. பெண்கள் பலர் கூடித்தழுவியும் கைகளைக் கோத்தும், கைகொட்டியும், சத்தமிட்டு, ஒலி எழுப்பியும், பாடியும் ஆடியுள்ளனர். பெண்களுக்குரிய இவ்விளையாட்டு சில நேரங்களில் ஆண்களும்

கலந்து கொண்டு ஆடியிருக்கலாமெனக் கூற இடமுண்டு. குரவை குறித்த செய்தியை மதுரைக்காஞ்சி,

மன்றுதொறு நின்ற குரவை (மதுரை 615)

என்கிறது.

கும்மி

தமிழக நாட்டுப்புற உழைக்கும் வர்க்கப்பெண்களிடையே பொதுவாகக் காணப்படும் விளையாடல் வகை இது. பல பேதையரும் பெதும்மையரும் வட்டமாகச் சுற்றி வந்து பாடிக் கைகுவித்தடிக்கும் கூத்து கும்மி எனப்படும். கை குவித்தடிக்கும் விளையாட்டு ஆதலால் (கும்முதல் - கை குவித்தடித்தல்) இது கும்மி எனப்பட்டது. குமுமி என்ற சொல்லினின்றும் 'கும்மி' என்ற சொல் உருவாகியிருக்க வேண்டும் என்ற அ.கி.பரந்தாமனார் கருத்தும் ஈண்டு எண்ணத்தக்கது.

கும்மி திருவிழாக் காலங்களில் இரவு பகல் இருவேளைகளிலும், பிற நாள்களில் நிலவொளியிலும் பொழுதுபோக்குக்காகப் பெண்களால் விரும்பி ஆடப்படுகின்றது. பருவமுற்ற பெண்களுக்குச் சடங்கு நிகழ்த்தும் போதும் கும்மி கொட்டுதல் உண்டு. பெண்கள் விளையாட்டே ஆயினும் கோயில் திருவிழாக்கள் முடிந்த மூன்றாம் நாள் நிகழ்ச்சிகளில் ஆண்களும் கும்மியடிப்பதைக் காணலாம். ஆண்கள் கும்மியை 'ஒயில் கும்மி' என்பர்.

அகநானூற்றில் 'கொப்பி' என்றும் சீவக சிந்தாமணியில் 'கொம்மை' என்றும் கும்மி குறிப்பிடப்படுகிறது. பாடலோடு கைகொட்டும் ஓசையும் சேரும் போது தான் கும்மிப்பாடல் முழுமை பெறுகிறது.

கும்மியாட்டத்தின் போது முன்னொருவர் பாட அதைத் தொடர்ந்து ஏனையோர் பாடும் "முன்பாட்டு பின்பாட்டு" முறையில் பாடல் பாடப்படும்.

கும்மியாட்டத்திற்கென்று தனிவகைப் பாட்டுண்டு. அது 'கும்மியடி' என்று தொடங்குவதோடு, அத்தொடரையே உருவிலும் (சரணத்திலும்) மகுடமாகக் கொண்டிருக்கும் என்பார் ஞா.தேவநேயன்.[20]

---

[20] ஞா.தேவநேயன், தமிழ்நாட்டு விளையாட்டுக்கள், 1962, ப.133.

கைகளைக் கோர்த்தல், கொட்டுதல், சத்தமிட்டு ஒலி எழுப்பி பாடியும் ஆடுவர் என்ற செயல்களில் சங்க இலக்கிய - நாட்டுப்புற விளையாட்டு - கும்மி ஒத்துள்ளது. சில மாற்றங்கள் சமயக் கருத்துகள், வரலாற்று நிகழ்ச்சிகள், புராணக் கதைகள் வாழ்வியல் நிகழ்வுகள், சீர்திருத்தக் கருத்துகள் நாட்டுப்புற கும்மிப் பாடல்களின் பாடுபொருளாக அமைந்துள்ளது. சங்க இலக்கிய குரவைப் பாடலில் இவ்வாறில்லை.

**பந்து**

நாட்டுப்புற விளையாட்டில் சிறுவர் விளையாட்டாக உள்ளது. சங்க இலக்கியத்தில் பெரும்பான்மை மகளிர் விளையாட்டாகவும் ஆண்களும் விளையாடுவதாகக் கூறப்படுகிறது.

**பளிங்கு**

கண்ணாடியில் செய்த சிறுகுண்டைப் பளிங்கு என்பர். அதை வைத்து விளையாடுவதால் இவ்விளையாட்டு பளிங்கு விளையாட்டு எனப் பெயர் பெற்றது.

ஒரு குறிப்பிட்ட இடத்திலிருந்து ஏறக்குறைய எட்டடி தொலைவில் சிறிய தேங்காய் மூடியளவிற்கு வட்டவடிவத்தில் இரண்டு அங்குலம் ஆழத்தில் குழி தோண்டியிருப்பர். குழியை நோக்கிப் பளிங்கியை வீசுவதற்கு நிற்குமிடத்தில் ஒரு கோடிட்டிருப்பர்.

இவ்வாறு விதிமுறையோடு கூடிய பளிங்கு விளையாட்டுச் சங்க இலக்கியம் கூறும் 'வட்டு' என்ற சிறுவர் விளையாட்டோடு ஒன்றி பெயரில் மாற்றம் கொண்டுள்ளது.

**வட்டு**

உருண்டு செல்வதற்கு வசதியாக வட்ட வடிவமாக அமைக்கப்பட்ட வட்டுகளை, அதாவது காய்களை உருட்டி விளையாடுவது. இது ஒரு வகை சிறுவர் விளையாட்டு. ஆடுவதற்கு வசதியாகத் தரையில் கோடு கிழித்துக் கொள்வர். திட்டமிட்ட விளையாட்டு. வட்டு விளையாட்டுக் குறித்த செய்திகளைச் சங்கப் பாடல் வரிகள் பின்வருமாறு புலப்படுத்துகின்றன.

வண்ண நீர்கரந்த வட்டுவிட்டு எறிவோரும் (பரி 11-55)

வட்டு உருட்டு வல்லாய் (பரி 12-42)

கையாடு வட்டின் தோன்றும். (அகம் 108:17)

*ஆடும் கருவியின் அமைப்பு - உருட்டி விளையாடுவது தரையில் கோடு கிழித்து ஆடுவது போன்ற செயல்களில் ஒத்து விளங்குகிறது.*

## 5.5. ஆடுகளம் - ஒற்றுமை வேற்றுமை

*சங்க இலக்கிய விளையாட்டுக்கள் ஆடுகளம் அடிப்படையில் மூன்று வகையாகப் பிரிக்கப்படுகின்றன.*

### 1. வீட்டிலிருந்தவாறே விளையாடும் விளையாட்டுக்கள்.

1. *சாம விளையாட்டு*
2. *சிறு சோறு ஆக்கல்*
3. *பறவை வளர்ப்பும், விலங்கு வளர்ப்பும்*
4. *பிசி - நொடி விளையாட்டு*
5. *வள்ளை.*

### 2. வெளியிடங்களில் விளையாடும் விளையாட்டுக்கள்

1. *ஊசல்*
2. *எண்ணி விளையாடல்*
3. *ஏறுகோள்*
4. *குறும்பு விளையாட்டுக்கள்*
5. *சிறுதேர்*
6. *சிறுபறை*
7. *செடி - கொடி வளர்ப்பு*
8. *நீர் விளையாட்டு*
9. *பந்து*
10. *மணற்குவியலில் மறைத்தாடல்*

11. மல்
12. வட்டு
13. வில் விளையாட்டு
14. வேட்டை.

### 3. வீட்டிலும், வெளியிலுமாக விளையாடும் விளையாட்டுக்கள்

1. அசதியாடல்
2. அம்புலி அழைத்தல்
3. உலாவல்
4. கண் புதைத்து ஒளிந்தாடல்
5. கழங்கு
6. குரவை
7. சிற்றில்
8. சுண்ண விளையாட்டு
9. சூது
10. செடி - கொடி வளர்ப்பு
11. பறவை - விலங்குகளுடன் விளையாடல்
12. புள் ஓட்டல்
13. பாவை விளையாட்டு
14. மலர் கொய்தலும், மாலை தொடுத்தலும்.

ஆடுகளம் அடிப்படையில் நாட்டுப்புற விளையாட்டுக்கள் வீட்டிற்குள் - வீட்டிற்கு வெளியே என இருவகைகளாகக் கூறலாம். இதை அகவிளையாட்டுக்கள், புறவிளையாட்டுக்கள் என்றும் கூறலாம்.

| வீட்டிற்குள் | வீட்டிற்கு வெளியே |
|---|---|
| பல்லாங்குழி | ஆபியம் |
| தாயம் | கிட்டிப்புள் |
| ஒளிந்து விளையாடல் | குச்சி விளையாட்டு |
| கல்லாங்காய் | சடுகுடு |

| | |
|---|---|
| கண் பொத்திக் கைக் கிள்ளல் | பம்பரம் |
| பூச்சொல்லி விளையாட்டு | பளிங்கு |
| சிறுசோறு ஆக்கல் | சில்லுக்கோடு |
| | நொண்டி |
| பொம்மை விளையாட்டு | மணல் விளையாட்டு |
| கண்ணாமூச்சி | ஏறுதழுவல் |
| | மல், வில் |
| | பந்து |
| | ஊஞ்சல் |
| | நீர் விளையாட்டு |
| | கும்மி |

அகவிளையாட்டுக்களுள் சங்க இலக்கிய, நாட்டுப்புற விளையாட்டுக்களில் ஒற்றுமையுடைய விளையாட்டுக்களுள் சிறுசோறு ஆக்கல், கழங்கு, கண் புதைத்து ஒளிந்தாடல் என்ற மூன்று விளையாட்டுக்கள் மட்டுமே விளக்கப்பட்டுள்ளன.

**சிறுசோறு ஆக்கல்**

பலவகைக் கற்பனைகளோடு சிறுமியர் சோறு சமைத்து விளையாடுவது. சிற்றில் அமைத்து அதில் சிறுசோறாக்குவது. சமைத்த உணவைத் தானும் உண்டு மற்றவர்களுக்கும் பரிமாறி உண்ணச் செய்வது. தவிர மரகதம், வைரம், அகில், பனிநீர், முத்து, செம்மணி, பொன் இவற்றை வைத்தும் விளையாடியுள்ளனர்.

மூன்று கற்களை அடுப்பாக்கி, கொட்டாங்குச்சியைப் பாத்திரமாக்கி, இலை தழைகளைக் காய்கறிகளாகவும், மண்ணை அரிசியாகவும் வைத்துச் சமையல் செய்து வரிசையாக மற்றவர்களை அமரச்செய்து உணவு படைத்தல்.

இதில் பலர் விளையாடுவர். ஒருவர் காய்கறி, அரிசி வாங்கி வருவார். மற்றவர் அடுப்பை மூட்டுவார். அடுத்தவர் தண்ணீர் கொண்டு வருவார். காய்கறி நறுக்குவார் சமைப்பார். இவ்வாறாக இவ்விளையாட்டு நடைபெறும்.

அம்மா, அப்பா, தம்பி, தங்கை குடும்ப உறவுமுறை உணவு சமைக்கும் பெரியவர் பழக்கம். போலச் செய்தல் பண்பு, கூடி வேலை செய்தல், பகிர்ந்து அளித்தல் போன்ற பண்புகள் வளர இவ்விளையாட்டுத் துணைபுரிவதை இருவகை விளையாட்டுக்களும் சிறப்பாக எடுத்துக் காட்டுகின்றன.

**கண் புதைத்து ஒளிந்தாடல்**

சங்க இலக்கிய விளையாட்டில் கூறியவாறே நாட்டுப்புற விளையாட்டுக் 'கண்ணாமூச்சி' என்ற பெயரில் ஒருத்தியின் கண்களை மற்றொருத்தி தன் கைகளால் மறைத்துக்கொள்ள மற்றவர்களெல்லாம் மறைவான இடங்களுக்குச் சென்று ஒளிந்து கொள்வர். பரபரப்பும், எதிர்பார்ப்பும் உடைய விளையாட்டு விளையாட்டுத் தொடர்பாகச் சில பாடல் வரிகளைச் சொல்லி விளையாட்டை ஊக்குவிப்பாள். பலரும் சேர்ந்து விளையாடுவது. ஆடும் முறை, களம் இவற்றில் ஒன்றி உள்ளது.

**கழங்கு**

இவ்விளையாட்டு நாட்டுப்புற விளையாட்டில் கல்லாங்காய் என்று சொல்லப்படுகிறது.

இயற்கையில் கிடைக்கும் காய்களைக் கொண்டு எறிந்தும், எடுத்தும் உயரத் தூக்கியும் போட்டும் கீழே கொட்டியுள்ளதைப் பொறுக்கியுமாக ஆடியுள்ளனர். இல்லங்களின் பின்புறத்திலும், மரநிழலிலும் விளையாடுவர். பாட்டுப்பாடிக் கொண்டே ஆடியுள்ளனர். கைக்குள் அடக்கக் கூடிய கழங்குக் காய்கள் விளையாட்டில் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஆடுகளம், ஆடும்முறை - நிகழ்வுகளில் ஒன்றியுள்ளன.

**வேற்றுமை**

பறவை வளர்ப்பும், விலங்கு வளர்ப்பும் - சங்க இலக்கிய விளையாட்டு என்று கூறுவதை - நாட்டுப்புற விளையாட்டு - தொழிலாக நடைமுறையில் இருப்பதால் - விளையாட்டு என்று கூறவில்லை. கோழி, புறா, வாத்து - ஆடு, மாடு, நாய் - பூனை வளர்த்தல் விளையாட்டாக இல்லை. பிசி - நொடி - விளையாட்டு - விடுகதை சொல்லும் நிகழ்வாக இன்றும் நடைமுறையில் உள்ளது.

வள்ளை - விளையாட்டு - நெல்குற்றல் - நீரிறைத்தல், சுண்ணம் இடித்தல் போன்ற தொழில் நிகழ்வாக அகத்தில் (வீட்டிற்குள்) அமைந்துள்ளன.

**புறவிளையாட்டுக்கள்**

ஊசல் - ஊஞ்சல் என்ற பெயரில் (களத்து மேட்டில்) வெளியிடங்களில் பெரிய மரக்கிளைகளில் நீண்ட கயிற்றைக் கட்டிவிட்டு, அதில் அமர்ந்து விளையாடுவது. சங்க - நாட்டுப்புற விளையாட்டுக்களில் ஆடுகளம் - வெளியிடம் - களத்து மேடு என்பதில் ஒன்றியுள்ளது. ஊஞ்சலில் அமர்ந்து கயிறுகளை இருகைகளாலும் பிடித்துக்கொண்டு கால்களினால் மண்ணை உதைத்து வேக, வேகமாக ஆடுவது. மேலுக்கும், கீழுக்குமாக எதிர்எதிர் திசைகளில் காற்றில் மிதப்பது போல ஆடுவதில் மகளிர் அதிகமாக ஆர்வம் காட்டினர். அமர்ந்து விளையாடுவதற்குப் பலகைகளையும் அமைத்திருந்தனர். வீட்டு விளையாட்டாகவும் ஆடியுள்ளனர்.

**ஏறுகோள்**

வெளியிடங்களில் பார்வையாளர்கள் பலர் சூழ்ந்திருக்க, அரங்கு அமைத்துக் கொண்டு விளையாடுவது. இளைஞர்கள் ஆர்வமுடன் கலந்து கொண்ட வீர விளையாட்டு.

ஆயுதம் ஏதுமின்றி கூரிய கொம்புகளை உடைய எருதுகளை உயிரையும் பொருட்படுத்தாமல் அடர்த்தும், ஊர்ந்தும், அடக்கி மகிழ்வர்.

இவ்விளையாட்டில் கூறப்படும் நிகழ்வுகள் அனைத்தும் இருவகை விளையாட்டிலும் ஒற்றுமைக் காணப்படுகிறது.

**மணற்குவியலில் மறைத்தாடல்**

வெளியிடங்களில் விளையாடும் விளையாட்டு இதை மணல் விளையாட்டு என்று நாட்டுப்புற விளையாட்டில் கூறப்படுகிறது.

மணற்குவியலில் ஒரு பொருளை மறைத்து வைப்பதும், அதனைக் கண்டெடுக்குமாறு தன்னுடன் விளையாடுபவர்களைக் கேட்பது. பொழுது போக்கு விளையாட்டு. ஆர்வத்தைத் தூண்டுவது எப்படியும் கண்டு பிடித்துவிட வேண்டுமென்ற உறுதியை வளர்ப்பது.

புறவிளையாட்டுக்களுள் சில நாட்டுப்புற விளையாட்டுக்களோடு வேறுபட்டுள்ளன. நீர்விளையாட்டு இருபாலர் விளையாட்டாக சங்க இலக்கியம் குறிக்கிறது. நாட்டுப்புற விளையாட்டில் பெண்கள் நீர் விளையாட்டில் ஈடுபட்டதாக இல்லை. ஆனால் சிறுவர்கள் விளையாட்டில் இடம்பெறுகிறது.

பறவைகளைக் காணல் அவற்றின் செயல்கள் போல் செய்தல், எதிரொலி கேட்டல், புள் ஓட்டல் இவை போன்ற வெளியிடங்களில் விளையாடும் விளையாட்டுக்கள் எனச் சங்க இலக்கியம் கூறும் பெண்பாலர் புறவிளையாட்டுக்கள் நாட்டுப்புறப் பெண்கள் விளையாட்டுக்களோடு வேறுபட்டுள்ளன.

## 5.6. விளையாடும் முறை : ஒற்றுமை வேற்றுமை

போட்டி அடிப்படை, பாடல் அடிப்படை, கருவி அடிப்படை என விளையாடும் முறையைப் பகுத்துப் பார்க்கலாம்.




ஏறுதழுவல், மற்போர் இரண்டும் இரண்டு வகை விளையாட்டிலும் ஒத்த தன்மையுடன் கூறப்பட்டுள்ளன. விற்போர் - அரச குடும்பத்தினர் போட்டி அடிப்படையில் குறிக்கோளை அடையும் இலட்சியத்துடன் விளையாடியதாகக் கூறப்பட்டுள்ளது.

நாட்டுப்புற விற்போர் - காட்டுக்கு வேட்டைக்குச் செல்பவர்கள் கொடிய விலங்குகள் தங்களைத் தாக்காமல் இருக்க தற்காப்புக்காக வில்லைப் பயன்படுத்தினர். பிற்காலத்தில் சிறுவர்கள் 'கில்டாப் பில்ட்'' என்று அந்த விளையாட்டை விளையாடி வருகின்றனர். இவ்விளையாட்டுச் சங்க இலக்கிய விற்போரில் வேறுபட்டுள்ளது.

ஊஞ்சல் என்பது ஊசல் என்றும் பூங்கொத்துக்களைச் சுற்றி நீண்ட மரக்கிளையில் கயிறு கட்டி விளையாடுவது வைக்கோல் புரியால் கயிறாகக் கட்டுவது - வீட்டில் சிற்றூசல் ஆடுவது. பெண்கள் விளையாட்டாக இருந்தாலும் பிற்காலத்தில் ஆடவர்களும் ஆடுகின்றனர். சில செயல்பாடுகள் ஒன்றியும் சில வேறுபட்டும் உள்ளன.

**கல்லாங்காய்**

கழங்கு என்றும் கூறப்படுகிறது. விளையாடும் பொழுது மகிழ்ச்சி, பொழுதுபோக்கு என்ற நோக்கத்தில் விளையாடப்படுவது. வெற்றி - தோல்வி இல்லை.



*கண்புதைத்து ஒளிந்தாடல், கண்ணாமூச்சி - இரண்டிலும் சில பாடல் வரிகள் உள்ளன.*

*கழங்கு - கல்லாங்காய் விளையாட்டிலும் பாடல் உள்ளன.*

*நிலவை அழைக்கும் போது,*

நிலா நிலா ஓடி வா
நில்லாமல் ஓடி வா
...........

எண்ணிக்கை - ஒன்று யாவர்க்கும்
தலை ஒன்று
இரண்டு முகத்தின்
கண் இரண்டு
........

*நாட்டுப்புற விளையாட்டுப் பாடல்கள் - சங்க இலக்கிய விளையாட்டுப் பாடலோடு ஒன்றவில்லை. ஆயினும் பாடல் உள்ளன என்று குறிக்கிறது. இவ்வாறு விளையாடும் முறைகளில் சிலவற்றில் ஒன்றியும் சிலவற்றில் வேறுபட்டும் உள்ளன.*

## 5.7. விளையாட்டு வகைகள் - ஒற்றுமை வேற்றுமை

**சங்க இலக்கிய விளையாட்டு**

1. *உடல் உறுப்பு இயக்க விளையாட்டுக்கள்*
2. *பொறிபுலன் இயக்க விளையாட்டுக்கள்*
3. *அறிவு இயக்க விளையாட்டுக்கள்*
4. *உடல் உறுப்பு இயக்கமும் பொறிபுலன் இயக்கமும் சார்ந்த விளையாட்டுக்கள்*
5. *உடல் உறுப்பு இயக்கமும் அறிவு இயக்கமும் சார்ந்த விளையாட்டுக்கள்*

*என வகைப்படுத்தப்படுகின்றன.*

**நாட்டுப்புற விளையாட்டுக்கள்**

1. *உடல் திறன் விளையாட்டுக்கள்*
2. *அறிவுத்திறன் விளையாட்டுக்கள்*

3. உடல், அறிவுத்திறன் சார்ந்த விளையாட்டுக்கள்

என வகைப்படுத்தப்படுகின்றன.

**நாட்டுப்புற - சங்க இலக்கியம்**

**உடல் உறுப்பு இயக்க விளையாட்டுக்கள்**

1. ஊசல்
2. கழங்கு
3. குரவை - ஏறுகோள், மல், நீர் விளையாட்டுக்கள்

இந்த மூவகை விளையாட்டுக்கள் எடுத்துக்காட்டப்படுகின்றன.

ஊசல் வெளியிடங்களில் விளையாடும் விளையாட்டாகக் கூறப்படுகிறது. மகிழ்ச்சி, பொழுதுபோக்கு விளையாட்டு; பெண்கள் மட்டும் ஆடிய விளையாட்டு - பின்னர் ஆண்களும் விளையாடுவதாக அமைந்தது. விரைவும், வேகமும், மாறுபடும். குறிக்கோள் ஒன்றும் இல்லை. உடல் சார்ந்த பயிற்சியாக அமைந்தது.

மரக்கிளைகளில் - பூங்கொத்துக்களால் மறைத்து கயிறுகட்டி ஆடியுள்ளனர். வயற்புறங்களில் வைக்கோல் புரிகட்டி விளையாடியுள்ளனர்.

கழங்கு, குரவை - உடல் உறுப்பு இயக்கமும், பொறிபுலன் இயக்கமும் சார்ந்தது. காய்களை எறிந்தும், எடுத்தும், உயரத்தூக்கிப் போட்டும், கீழே கொட்டியுள்ளதைப் பொறுக்கியுமாக ஆடியுள்ளனர்.

கைகளுக்கு அசைவும் - கண் பார்வையும் கூர்மையாக இருக்க வேண்டும். ஓய்வு நேரத்தைப் பெண்கள் நன்கு பயன்படுத்தி வீட்டிலிருந்தபடியே விளையாடி மகிழ்ந்ததாகத் தெரிவதால் சுறுசுறுப்பாக இருக்க முடிந்துள்ளது.

காய்களை எறிந்தும், எடுத்தும் விளையாடுவதால் கண்களுக்கும், கைகளுக்கும் நல்ல பயிற்சி கிடைக்கிறது.

**குரவை**

*கூடி ஆடுவதால் கிடைக்கப்பெறும் மகிழ்ச்சி ஒப்பற்றது. பெண் மக்களின் ஆற்றல் வெளிப்பட ஏதுவான நிகழ்ச்சி. நாட்டுப்புற, சங்க இலக்கிய விளையாட்டுக்களில் கும்மி - குரவை என்ற பெயரில் விளையாடும் முறைகளில் ஒத்த தன்மையுடையவை.*

**அறிவுத்திறன் விளையாட்டுக்கள்**

*பாவை விளையாட்டு, பிசி - நொடி விளையாட்டு, தாயம், பல்லாங்குழி, விற்போர், ஆடுபுலி ஆட்டம், சூது - சொக்கட்டான்.*

**பாவை விளையாட்டு**

*'பாவை' என்றால் உருவம் என்பது பொருள். பாவை புனைந்து பெண்கள் விளையாடியுள்ளனர். பாவையைக் குழந்தையாகப் பாவித்து, கதைகள் சொல்லி, தாலாட்டுப்பாடி மகிழ்ச்சியாக விளையாடியுள்ளனர். நாட்டுப்புறச் சிறுமியர்களும் மரத்தால் செய்யப்பட்ட பொம்மைகளை ஆண், பெண்களாக நினைத்துத் திருமணம் செய்துவித்தும் - குழந்தையாகக் கற்பித்தும் விளையாடி உள்ளனர். கற்பனை வளத்தைப் பெருக்கும் பொழுதுபோக்கு விளையாட்டு. சிந்தனைத் திறன் அறிவு வயப்பட்டது.*

**நாட்டுப்புற விளையாட்டுக்கள் - சங்க இலக்கிய விளையாட்டிலிருந்து அறிவுத்திறன் விளையாட்டின் வேற்றுமை**

*தாயம், பல்லாங்குழி, பரமபதம் போன்ற விளையாட்டுக்கள். பல்லாங்குழியில் ஏழு குழிகளில் போடப்படும் காய்களை எதைப் பிரித்து ஆடினால் என்ன கிடைக்கும் எது துடைகுழி - என்பனவற்றைத் திறம்பட அறிந்துள்ளனர். பரமபதம் - ஏகாதசி திருநாளன்று இரவு கண் விழித்துப் பரமபதம் என்ற பட விளையாட்டினை ஆடுகின்றனர். தாயக்கட்டை தான் கருவி.*

*இதில் ஏணி - பாம்பு படம் இருக்கும். காய்களை உருட்டி கட்டங்களில் வைக்கும் பொழுது ஏணியாக இருந்தால் மேல் கட்டத்திலும், பாம்பாக இருந்தால் அதன் கீழ் வால் பகுதியிலும், காய்களை வைக்க வேண்டும். வாழ்வு என்பது ஏற்றமும், இறக்கமும்*

உடையது. இதை உணர்ந்து நடந்தால் பரமனின் திருவடி (பதம்) சேரலாம் என்ற உண்மைத் தத்துவத்தைப் பரமபத விளையாட்டு உணர்த்துகிறது. இவ்விளையாட்டுக்கள் அறிவுத்திறன் - உடல் திறனும் சார்ந்த விளையாட்டுக்கள் - சங்க இலக்கிய விளையாட்டோடு வேற்றுமை உடையது.

**உடல் உறுப்பு, பொறிபுலன், அறிவு இயக்கம் மூன்றும் சார்ந்த விளையாட்டுக்கள்**

அம்பு - வில் விளையாட்டு

வேட்டை

கழங்கு, குரவை.

**அம்பு - வில் விளையாட்டு**

வில்லில் அம்பை வைத்துக் குறி பார்த்து எறிதல்; சிலவகை அடையாளங்களை உருவாக்கி அவற்றின் மீது அம்பெய்தல் - போட்டி போட்டு விளையாடுதல்

இலட்சியத்தில் வெற்றி பெறுவது. பொழுதுபோக்கு, வீரத்தை நிலை நாட்டிக் கொள்ளவுமாகப் பயன்படுத்தப்பட்டது. உடல் அசைவு - கண் குறி பார்த்தல் - அறிவுக்கூர்மை ஆக மூன்று இயக்கங்களும் இணைந்து செயல்படுவதால், வெற்றி காண முடிகிறது. இதையே நாட்டுப்புறச் சிறுவர்கள் 'கில்டாபில்ட்' என்ற விளையாட்டாக மேற்கொள்வர்.

'வேட்டை' என்ற சொல் விலங்குகளை வீழ்த்துவதைப் பொதுவாகக் குறிக்கும். வெற்றி விளையாட்டு வீரத்தை வெளிப்படுத்தும் விளையாட்டு, மகிழ்வான விளையாட்டு. இதனை ஒரு தொழிலாகவும், பொழுது போக்காகவும் கருதியுள்ளனர். சங்க கால மன்னர்களும், வீரர்களும் மேற்கொண்டனர்.

இக்காலத்தில் தொழிலாக உள்ளது. கூட்டமாகச் செயல்படுவது. மனித ஆற்றலை வெளிப்படுத்துவதும் இவ்விளையாட்டின் பயனாகும். தனித்தனியாகப் பகுத்துப் பார்த்தாலும் அனைத்து விளையாட்டுக்களும் உடல் திறன், அறிவுத்திறன், பொறிபுலன் இயக்கம் மூன்றும் சார்ந்த விளையாட்டுக்களாகவே உள்ளன.

*சங்க இலக்கிய விளையாட்டுக்களும் நாட்டுப்புற விளையாட்டுகளும் - சிலவற்றில் ஒத்தும் ஒரு சில விளையாட்டுக்களில் ஓரிரு செயல்கள் வேறுபட்டும் உள்ளன.*

*விளையாட்டுக்களின் வகைபாடுகள் - அவ்வவ்வியல்களில் விளக்கமாக எடுத்துரைக்கப்படுவதால், இங்கு சுட்டுவது சுருங்கக் கூறுவதாக அமைந்துள்ளது.*

## 5.8. சங்க இலக்கியம் - நாட்டுப்புற விளையாட்டுக்களில் குறிப்பிடப்படும் இருபாலர் விளையாட்டுக்கள் - ஒற்றுமை வேற்றுமை

### சங்க இலக்கிய இருபாலர் விளையாட்டுக்கள்

1. *அசதியாடல்*
2. *அம்புலி அழைத்தல்*
3. *அலவன் ஆட்டல்*
4. *உலாவல்*
5. *ஊசல்*
6. *எண்ணி விளையாடல்*
7. *சுண்ண விளையாட்டு*
8. *சூது*
9. *நீர் விளையாட்டு*
10. *பந்து*
11. *பறவைகளைக் காணலும் அவற்றின் செயல்கள் போல் செய்தலும்*
12. *பறவை, விலங்குகளுடன் விளையாடல்.*

### நாட்டுப்புற இருபாலர் விளையாட்டுக்கள்

1. *நொண்டி*
2. *கண்ணாமூச்சி*
3. *கல்லா? மண்ணா?*
4. *அம்புலி காட்டல்*
5. *எண்ணுப்பெயர், வினா விடைப் பாடல்கள்*
6. *பறவை, விலங்கு பெயர்களை விளையாட்டாக அறியச் செய்தல்*
7. *ஊஞ்சல்.*

**சங்க இலக்கிய நாட்டுப்புற இருபாலர் விளையாட்டுக்கள் ஒற்றுமை**

1. *அம்புலி அழைத்தல்*
2. *ஊஞ்சல்*
3. *எண்ணுப்பெயர், வினா - விடைப்பாடல்கள் மூலம் விளையாடச் செய்தல்.*
4. *பறவை, விலங்கு பெயர்களை விளையாட்டாக அறியச் செய்தல்.*

**அம்புலி அழைத்தல்**

*சிறுவர், சிறுமியர் விளையாட்டாக உள்ளது. அம்புலி நிலவைக் காட்டி உணவு ஊட்டுதல்; அழுகையை நிறுத்தி சிரிக்கச்செய்தல் என்ற பொதுவான கூறுகளில் ஒற்றுமை.*

*எண்ணுப்பயிற்சிப் பாடல்கள் விளையாட்டாக ஒன்று முதல் பத்து வரை உள்ள எண்களைக் கற்றுத் தரும் பொருட்டுப் பாடப்படுவன.*

ஒன்று யாவர்க்கும் தலை ஒன்று
இரண்டு முகத்தின் கண்இரண்டு
.................
.................
பத்து இருகை விரல் பத்து.

*சங்க இலக்கியப் பாடல்கள் யானைகள், குதிரைகள், படகுகள், விளக்குப் பந்தங்கள், உப்பு வண்டிகள் இவற்றை எண்ணி விளையாடியதாகக் கூறுகின்றன (புறம்.116, நற்: 331 & 372, பதிற்று: 43).*

*பறவை, விலங்குகளின் பெயர்களை அறியச் செய்தல் சங்க இலக்கிய விளையாட்டோடு ஒன்றி பாடலுடன் அறியப்படுகிறது.*

காக்கா காக்கா
கண்ணுக்கு மை கொண்டுவா
குருவி குருவி
கொண்டைக்குப் பூக் கொண்டு வா.....

*இக்காலத்தும் நாய், பூனை, கிளி இவற்றோடு விளையாடும் பழக்கம் தொடர்ந்து உள்ளது. உயிர்களிடத்து அன்பு வேண்டும் என்ற நேயம் புலப்படுகிறது.*

ஊஞ்சல் இருவகை விளையாட்டிலும் பொழுதுபோக்கு மற்றும் மனமகிழ்ச்சி விளையாட்டாகக் கூறப்படுகிறது. விளையாடும் முறை - பொதுவாக உள்ளது. மகளிர் ஆடிய ஊஞ்சல் - ஆண்களும் விளையாடுவதாக உள்ளது.

**வேற்றுமை**

சூது - சங்க இலக்கிய விளையாட்டு; ஆண்கள், பெண்கள் இருபாலரும் விளையாடுவதாகக் கூறப்பட்டுள்ளது. பொழுதுபோக்கு விளையாட்டு பந்தயம் கூறி ஆடுவது தனக்கு ஒப்பார் இல்லையெனக் கூறுவது. எவர் எதிர்த்தாலும் வெல்லுவதாகக் கொடி உயர்த்துவது. சில குறிப்பிட்ட சொற்களைக் கூறிக் கொண்டே ஆடுதல் யாவும் இவ்விளையாட்டில் குறிப்பிடத்தக்கவை. சூது விளையாட்டுக் குறித்த செய்திகளைச் சங்கப்பாடல் வரிகள் பின்வருமாறு எடுத்துக்காட்டுகின்றன.

பொதியில் நரை
நரை முதாளர் நாயிடக் குழிந்த
வல்லின் நல்லுலகமே (புறம் 32-4)

சூதார் குறுந்தொடிச் சூரமை நுடக்கத்து. (ஐங்குறு - 71)

சூது சங்க இலக்கியத்தில் இருபாலர் விளையாட்டாகக் கூறப்பட்டுள்ளது. நாட்டுப்புற விளையாட்டில் ஆண்கள் மட்டும் விளையாடும் விளையாட்டாக உள்ளது.

**நீர் விளையாட்டு**

நாட்டுப்புற விளையாட்டில் ஆண்கள் விளையாட்டாக மட்டுமே உள்ளது. (விதி விலக்குகள் உண்டு) பந்து - சிறுவர் விளையாட்டாக நாட்டுப் புறவிளையாட்டில் குறிக்கப் பெறுகிறது.

இவ்வாறு சங்க இலக்கிய - நாட்டுப்புற விளையாட்டுக்கள் - விளையாடும் பொதுவான விதிமுறைகள், செயற்பாடுகளில் ஒன்றியும் சிலவற்றில் வேறுபட்டும் காணக்கிடக்கின்றன.

**சங்க இலக்கிய நீர் விளையாட்டு**

*நீரில் விளையாடுவது பொழுதுபோக்காக ஆடுவது, போட்டி போட்டுக் கொண்டு ஆடுவது. வெற்றி பெற வேண்டுமென்ற எண்ணத்தில் விளையாடுவது. தான் கற்ற வித்தைகளைக் காட்டிப் பரிசும் பாராட்டும் பெறுவது. பலரும் வேடிக்கைப் பார்க்க விளையாடுவது. நீரில் நீச்சலடித்தும், படகுகளைப் பயன்படுத்தியும் விளையாடிக் காட்டுவது. நீர் விளையாட்டு ஒரு விழாவாகவும் நடைபெற்றது.*

*ஆண், பெண் இருவரும் விளையாடினர் என்ற செய்தியைச் சங்க இலக்கியப் பாடல் வரிகள் பின்வருமாறு தெரிவிக்கின்றன.*

மலிபுனல் நிகழ்தரும் தீம்நீர் விழாவின் (பதிற்று 8:1)

விழவுப் புனல் (பதிற்று 12-99)

அறம் காவற் பெண்டிர்
மணி அணிந்த தம் உரிமை மைந்தரோடு ஆடித்
தணிவின்று வையைப் புனல். (பரி 4-8-50)

*திட்டமிட்ட தனித்திறமை, வெளிப்பாட்டுக்கு வகைச் செய்தது. நீரினை அடக்கி ஆளுந்திறன் வெளிப்படுதல்; திட்டமிட்ட மகிழ்ச்சிப் பொழுதுபோக்கு விளையாட்டு.*

**நாட்டுப்புறச் சிறுவர்கள் நீர் விளையாட்டு**

*காலையில் நீர் நிலைகளில் குளிக்கச் செல்லும் நாட்டுப்புறச் சிறுவர்கள் பலர் ஒன்றுகூடி மதகின்மேல் நின்று கொண்டு வரிசையாக நீரில் 'துடும்' எனக் குதிப்பர். நீரிலிருந்து கொண்டே கண்டுபிடித்து விளையாடுவர். அப்பொழுது ஒருவன் யார் பிடிக்க வேண்டும் என்பதற்கு ஒரு கருத்தைக் கூறி, பிடிக்க வேண்டியவனை அறிவிப்பான். 'ஆத்துல ஒரு கெண்டை பிடிச்சேன் சுட்டேன். பொசுக்கினேன் எல்லாருக்கும் கொடுத்தேன் ஒருத்தனுக்கு மட்டும் கொடுக்கவில்லை' அவன் இவன் எனச் சுட்டுவான். அவனே நீருக்குள் மூழ்க்கிச் செல்பவர்களைப் பிடிக்க வேண்டும். நீருக்குள் முழுகி முழுகி அகப்படாமல் செல்வர். தலையை மெதுவாக வெளியே நீட்டுவர்; நீந்திச் செல்வர். ஒருவரைத் தொட்டுவிட்டால் அவர் மீண்டும் பிடிக்கத் தொடங்குவார்.*

*நீரிலிருந்து வெளியே வந்து மறுபடியும் மதகின் மேலிருந்து குதிப்பர். இவ்வாறாக நீரில் விளையாடி மகிழ்வர். கண்கள் சிவப்பேறி விடுவதுண்டு. நீரில் மூழ்கும்போது மூச்சை அடக்கிக் கொள்ளும் பயிற்சி பெறுகின்றனர். கை, கால்களை அசைத்து நீந்திச் செல்வதால் கை, கால்களுக்குப் பயிற்சி கிடைக்கிறது. நாட்டுப்புறச் சிறுவர்களுக்கு இயல்பாகவே இவ்வாய்ப்பு நிலை கிட்டுகிறது.*

தொடித்தலை விழுத்தண்டு ஊன்றி நடுக்குற்று
பெருமுதாளரேமாகிய எமக்கு . . . . . . . . . (புறம் - 243)

*சங்க இலக்கியப் புறநானூற்றுப் பாடலில் பாடல்வரி சிறப்புக் காரணமாகத் தொடித்தலை விழுத்தண்டு ஊன்றினார் எனப்பெயர் பெற்ற புலவர் மேற்கூறிய பாடலில் தான் வயது முதிர்ந்த பின் நீர்நிலையைக் காண்கிறார். அப்பொழுது சிறுவர்கள் நீருக்குள் 'துடும்' எனக் குதித்து நீந்தி நீர்நிலையில் விளையாடிய தன் இளமைக்கால நிகழ்ச்சியை நினைவுகூர்ந்து பாடல் பாடியுள்ளார். ஈண்டு அதுவும் நினைவு கூறத்தக்கது.*

*இவ்விரண்டு விளையாட்டுக்களையும் பார்க்கும்பொழுது வெற்றி பெறுதல் - தான் கற்ற வித்தைகளைக் காட்டிப் பாராட்டுப் பெறுவது; பலரும் வேடிக்கை பார்க்க விளையாடுவது; நீரில் நீச்சலடிப்பது; தனித்திறமை, நீரினை அடக்கி ஆளுந்திறன்.*

*அனைத்துச் செயல்களும் ஒன்றி உள்ளன. மகளிர் நீர் விளையாட்டில் கலந்து கொள்வது வேறுபட்டுள்ளது. இன்று உலக அளவில் போட்டி விளையாட்டாக உள்ளது.*

**அசதியாடல்**

*நகையாடுதல், பரிகாசஞ்செய்தல், வேடிக்கை வார்த்தை கூறுதல், பொய்யாயினவற்றைச் செய்து மகிழல். ஆண் - பெண் இருபாலரும் ஒருவரோடு ஒருவர் வேடிக்கையாகப் பேசி, செய்கையாற் செய்து காட்டி, பொழுது போக்கி மகிழுவது அசதியாடல்.*

*திட்டமிட்டது; பொழுது போக்குக்குரியது; தனித்துவம் மிக்கது ஓரிருவரைத் தனக்குத் துணையாகச் சேர்த்துக் கொண்டும் விளையாடுவது. நெஞ்சொடு - தனக்கு*

மட்டுமே கேட்பதாகப் பாடி, பேசிப் பரிகாசம் செய்வது. அடுத்தவர் காதுபடவும் கூறுவது. கற்பனை மிகுபட அந்தந்த இடத்திற்கும், நிகழ்ச்சிக்கும் தக்கவாறு பேசிச் சிரிப்பது.

மனம் புண்படாமல் பேசி விளையாடுவது ஆண் - பெண் குறிப்பாகக் கூன், குறளன், விதூடகன் விளையாடியுள்ளனர். அரசன், அரசி, அமைச்சன் ஆகியோரும் தமக்குள் அசதியாடியதாகக் காப்பியங்கள் குறிப்பிடுகின்றன. அசதியாடல் குறித்த செய்தியைக் கலித்தொகைப் பாடல் வரிகள் விளக்குகிறது. (94: 13-16)

ஆண் - பெண் இருபாலரிடையே உறவு வளருவதற்கும், ஒருவருடைய மனதை மற்றொருவர் புரிந்து கொள்ளுவதற்கும் மனிதநேயம் உறுதிப்படுவதற்கும் துணையாக அமைந்துள்ளது.

இருபாலரும் விரும்பிய பொழுதுபோக்கு அசதியாடல். ஒருவரை ஒருவர் புரிந்துகொள்ள, உணர்ச்சியைக் கட்டுப்படுத்தத் துணைசெய்கிறது. இயற்கைச் சூழலில் - காற்றோட்டமான வெளிப்புறத்தில் இவ்விளையாட்டினை அமைத்துக் கொண்டுள்ளனர்.

இக்காலத்தில் இவ்விளையாட்டுத் திருமணத் தொடர்பான நிகழ்ச்சி, இளைஞர்கள் பங்கேற்கும் பொது நிகழ்ச்சிகளில் காணப்பெறுகிறது.

### அலவன் ஆட்டல்

கடற்கரைப் பகுதி, நீர் தங்கும் பகுதிகளில் உள்ள அலவன்கள் கரைநோக்கி வரும்போது அவற்றைக் கைகளில் பிடித்து ஆட்டியும், மோத விட்டும் மகிழ்ந்துள்ளனர். நெய்தல் நிலத்து மக்களுக்குப் பொழுது போக்காக இருந்துள்ளது. இச்செய்திகளைப் பட்டினப்பாலையும் (100-101), நற்றிணையும் (11:7) தெரிவிக்கின்றன.

பொழுதுபோக்கு மகிழ்ச்சியால் விளையாடியோர் பெற்ற ஊக்கம் மாற்றுப் பணியைக் கவனிக்க உதவியது. கடற்கரை மணல் நோக்கி ஓடிவரும் அலவன்களை

அங்குமிங்கும் அலைக்கழிப்பது பொழுதுபோக்கு நிகழ்ச்சியாக நகர மக்களுக்கு அமைந்துள்ளது.

**உலாவல்**

நிதானமாக நடப்பது; பொழுதுபோக்கு நிகழ்ச்சி; தனித்து ஆடுவது; மகிழ்வாகச் சிற்றடி எடுத்து வைப்பது. இவ்விளையாட்டிற்குப் பிறகு மனதின் கனம் குறைவதுபோல் உணருவது. வீட்டின் நிலா முற்றத்தில், மேல் மாடியில் பின்புறத்தில் உலாவுவது. வெளிப்புறச் சோலைகளில், கடற்கரை மணலில் உலாவுவது. செல்வந்தர்களின் பொழுதுபோக்கு.

உலவும் பொழுது அநேகமாக அதிக அணிகலன்கள் அணிவதில்லை. அவசரமாகவோ, வேகமாகவோ, விரைவாகவோ, செல்வதில்லை. சங்க காலத்திற்குப் பிறகு எழுந்த இலக்கியங்களில் உலாவு மண்டபம் இருந்த செய்தி தெரிகிறது. உலாவல் குறித்த செய்திகளை மதுரைக்காஞ்சி விளக்குகிறது (446-452).

உடல், உள்ளம் இரண்டுமே தெளிவும், ஊக்கமும் பெற்றது. நோய் அகல உதவியுள்ளது.

நாட்டுப்புற விளையாட்டுக்களில் விளையாட்டாகக் குறிக்கப்படவில்லை. இருப்பினும் உறவு முறையினர் நகையாகப் பேசுவதும் - நடப்பதும் நடைமுறையில் உள்ளது.

## 5.9. தொகுப்புரை

இவ்வியலில் சங்க இலக்கிய - நாட்டுப்புற விளையாட்டுக்களின் விளக்கம் - ஒற்றுமை வேற்றுமை வரையறை ஒற்றுமை வேற்றுமை எடுத்துக்காட்டுகளுடன் விளக்கப்பட்டுள்ளன.

சங்க இலக்கிய விளையாட்டுக்களின் பெயர் நாட்டுப்புற விளையாட்டுக்களின் பெயர்களோடு எவ்வாறு ஒன்றியும் மாறுபட்டும் உள்ளன என்றும் விளக்கப்பட்டுள்ளன.

ஆடும் நபர்களின் எண்ணிக்கை - தனிநபர் - இருவர் (அ) அதற்கு மேற்பட்டோர் - குழு எனப் பிரித்து விளையாடும் விளையாட்டுக்கள் மேற்கோளுடன் விளக்கப்பட்டுள்ளன.

ஆடுகளம் அடிப்படையில் அகவிளையாட்டு, புறவிளையாட்டு எனப் பிரித்து அவற்றை எடுத்துக்காட்டுகளோடு ஒப்பிட்டும் வேறுபடுத்தியும் பார்க்கப்பட்டுள்ளது.

விளையாடும் முறையில் கருவி - அடிப்படை ஒரு கருவி - ஒன்றுக்கும் மேற்பட்ட கருவிகள் பயன்படுத்தி விளையாடும் முறை விளக்கப்பட்டுள்ளது.

உடல் திறன் விளையாட்டுக்கள் - அறிவுத்திறன், பொறிபுலன் இயக்க விளையாட்டுக்கள் - இவை மூன்றும் சார்ந்த விளையாட்டுக்கள் எனச் சங்க இலக்கிய நாட்டுப்புற விளையாட்டுக்களுக்கு எடுத்துக்காட்டுகள் கூறி விளக்கப்பட்டுள்ளன.

இருபாலர் விளையாட்டுக்கள் - சங்க இலக்கியத்தில் கூறப்படும் முறைகள் நாட்டுப்புற இலக்கியத்தில் சற்று மாறுபாட்டுடன் உள்ளன. ஒத்த விளையாட்டுக்களும் விளக்கப்பட்டுள்ளன.

சில விளையாட்டுக்கள் இன்று கூறப்படாவிட்டாலும் விளையாட்டு நிலையில் நடைமுறையில் உள்ளன. பறவை, விலங்குகளுடன் விளையாடல் என்பது - குழந்தை நிலையில் பாடல் வடிவில் கூறப்படுகிறது. எண்ணுப்பெயர் அறியும் பொருட்டு உடல் உறுப்புகளை ஒன்று இரண்டு எனத் தரம் அறிந்த நிலையில் பாடல் வடிவில் அறிவுத்திறனை, சிந்தனை ஆற்றலை வளர்க்கும் முறையும் எடுத்துக் கூறப்பட்டுள்ளது.

விளையாட்டுக்கள் ஒன்றோடு ஒன்று தொடர்புடையனவாக இருப்பதால், அவ்வவ்வியல்களில் விளக்கமாகச் சொல்லப்பட்டும் தேவைக்கேற்ப சில விளையாட்டுக்கள் மீண்டும் சொல்ல வேண்டிய நிலையில் மீண்டும் விளக்கப்பட்டுள்ளன.

பொதுவாக விளையாட்டுக்கள் - பால் அடிப்படை - பங்கு பெறுவோர் அடிப்படை, ஆடுகளம், ஆடு கருவி, பாடல் அடிப்படை, போட்டி, செயல்கள் எனப் பகுத்துப் பார்த்தால் மகளிர் - அறிவுத்திறன், ஆடவர் - உடல்திறன் பொறிபுலன் சார்ந்தும், போட்டியாகவும், மனமகிழ்ச்சிக்காகவும், பொழுது போக்கிற்காகவும் விளையாடிய நிலையை நன்கு உணர முடிகிறது.

சங்க இலக்கிய - நாட்டுப்புற விளையாட்டுக்களை எவ்வகையில் வகைப்படுத்தினாலும், அதன் தன்மை மாறாது. முக்கியக் கூறான உடற்பயிற்சியும், அறிவுத்திறனும் என்றும் நிலைத்திருப்பதைக் காணலாம்.

# முடிவுரை

இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டு ஆராயப்பட்டுள்ளது. முதலாவது இயலான 'சங்க இலக்கிய விளையாட்டுக்கள் - நாட்டுப்புற விளையாட்டுக்கள் - ஒரு பார்வை' என்ற இயலில் கொடுக்கப்பட்டுள்ள கருத்துக்களின் தொகுப்பு.

சங்க இலக்கிய - நாட்டுப்புற விளையாட்டுக்கள் பொதுவாக எல்லா மக்களாலும் விளையாடப்படுவன. அறிவுத்திறனையும், உடல் நலத்தையும் பேணுபவை. பல்வேறு அறிஞர்கள் விளையாட்டுக்கள் பற்றிப் பல்வேறு கருத்துக்களைக் கூறுகிறார்கள். கருத்துக்கள் யாவும் விளையாட்டுக்களைப் பல்வேறு கோணங்களில் எடுத்தியம்புகின்றன.

விளையாட்டுக்களை எவ்வகையில் வகைப்படுத்தினாலும் அதன் தன்மை மாறாது. முக்கியக் கூறான உடற்பயிற்சியும், அறிவுத்திறனும் சங்க மற்றும் நாட்டுப்புற விளையாட்டுக்களில், நிலைத்திருப்பதைக் காணலாம்; இக்கருத்து என்றும் மாறாதது.

'சிறுவர் - சிறுமியர் விளையாட்டுக்கள்' என்ற இரண்டாவது இயலில் சிறுவர்களின் கற்பனையாற்றலையும், நடிப்புத்திறனையும், சிந்தனை வளத்தையும் வளர்க்க வல்ல விளையாட்டுக்கள் விளக்கிக் கூறப்பட்டுள்ளன.

இவ்வியலில் விளக்கப்பட்டுள்ள விளையாட்டுக்கள் பொதுவாகச் சிறுவர் - சிறுமியர் பொழுதுபோக்கிற்காக ஆடும் ஆட்டங்களே. ஒரு சில ஆட்டங்களில் போட்டி (வெற்றி, தோல்வி) மனப்பான்மை காணப்படுகிறது. மற்ற ஆட்டங்களில் எல்லோருக்கும் ஆட்டத்திற்கு வாய்ப்புக் கிடைக்கிறது.

உயர் உள்ளல் பற்றிய சிந்தனையைக் குழந்தை மனத்தில் வித்திட்டு வளர்க்கிறது. ஒப்பிட்டுப் பார்ப்பது மகிழ்ச்சி கொள்வது, திருத்திக் கொள்வது போன்ற ஆளுமைப்

பண்புகளை வளர்த்துக் கொள்ள உதவியது. பொறுமைக் குணம், நம்பிக்கை, தேடிக்கண்டு பிடித்து வெற்றி பெற வேண்டுமென்ற உறுதியை வளர்ப்பது. மறைவாக உள்ள பொருளை விழிப்புடன் தேடுவதற்கான பயிற்சி கிடைக்கிறது.

ஒருவருக்கொருவர் விட்டுக்கொடுக்கும் தன்மையும், தவறு செய்தவரை மன்னிக்கும் தன்மையும் உருவாகிறது. சிறுதேர் விளையாட்டு மூலம் அழகுணர்ச்சி தொழிற்துறை அறிவும் ஆற்றலும் பெருகுகிறது.

சங்க இலக்கிய - நாட்டுப்புறச் சிறுவர் - சிறுமியர் விளையாட்டுக்கள் முப்பது இவ்வியலில் எடுத்துக்காட்டுக்களுடன் விளக்கப்பட்டுள்ளன. உடற்பயிற்சி, மனமகிழ்ச்சி விளையாட்டுக்களே அதிகம். சிறுவர் - சிறுமியர் விளையாட்டிற்கேற்ற தன்மையுடையனவாய் இவ்விளையாட்டுக்கள் அமைந்துள்ளன.

'ஆண்கள் விளையாட்டுக்கள்' மூன்றாவது இயலாக அமைந்துள்ளது. இவை யாவும் புறவிளையாட்டுக்களாகவும், வீரவிளையாட்டுக்களாகவும் அமைந்துள்ளதைக் காணமுடிகிறது. உடல் உழைப்பிற்கு முக்கியத்துவம் இருப்பதால் உடற்பயிற்சியும் ஏற்படுகிறது.

சங்க இலக்கிய - நாட்டுப்புற விளையாட்டுக்கள் முறையே ஆறும், பதினைந்தும் உடல், அறிவு, பொறிபுலன் என வகைப்படுத்தியும் காண முடிகிறது.

இலக்கியங்களில் குறிக்கப்பெறாத விளையாட்டுக்களும் விளக்கப்பட்டுள்ளன. விளையாட்டின் பெயர், ஆடுகளம், ஆடும்நபர் கருவிகள், ஆடும் முறை குறித்தும் ஒற்றுமை - வேற்றுமை ஆராயப்பட்டுள்ளன. சில விளையாட்டுக்கள் ஆண் - பெண் இருபாலரும் விளையாடக்கூடியதாக உள்ளன (சங்க இலக்கியம்).

ஆண்கள் விளையாட்டுக்களில் சில பகைமை வளர்க்கும். அதே நேரத்தில் ஒருவருக்கொருவர் மனித நேயத்துடன் பழகவும், நட்பு ஏற்படவும் உதவுகின்றன.

மேலைநாட்டு விளையாட்டுக்கள் அறிவிற்கும் உடலுக்கும் வேலை தருகிறது. ஆனால் நம் நாட்டு விளையாட்டுக்களிலோ ஐம்புலனுக்கும் வேலை கிடைக்கிறது. அத்துடன் சிந்தனை செய்யவும் வழி வகுக்கின்றது. அதற்கு மேலும் ஒழுக்கத்தினையும், பண்பாட்டினையும் போதிப்பதை இவ்வியல் எடுத்தியம்புகின்றது.

'பெண்கள் விளையாட்டுக்கள் நான்காவது' இயலாக அமைந்துள்ளது. பெண்கள் விளையாட்டுக்கள் பெரும்பாலும் அறிவுத்திறன் சார்ந்தவையாகவும், உடல் உறுப்பு இயக்கம், பொறிபுலன் இயக்கமும் சார்ந்த விளையாட்டுக்களாகவும் அமைந்துள்ளதை இவ்வியலில் விளக்கப்பட்டுள்ள விளையாட்டுக்கள் மூலம் அறிய முடிகிறது.

இவ்வியலில் சங்க இலக்கிய விளையாட்டுக்கள் பத்தும், நாட்டுப்புறப் பெண்கள் விளையாட்டுக்கள் ஒன்பதும் எடுத்துக்காட்டுக்களுடன் விளக்கப்பட்டுள்ளன. விளையாட்டு வகைகள் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன.

சங்க இலக்கிய - நாட்டுப்புற விளையாட்டுக்களும் ஒப்பீடு செய்யப்பட்டுள்ளன. பொழுதுபோக்கு, மனமகிழ்ச்சி, உடற்பயிற்சியுடன் கூடியதாகவும் உள்ளதை அறிய முடிகிறது.

கும்மி - குரவையாக அமைந்து திருவிழாக் காலங்களில் சமயம் சார்ந்த, சமயம் சாராத நிகழ்வுகளில் ஒரு நிகழ்த்துக் கலையாகவும் விளங்குகிறது. ஆழ்ந்த சிந்தனை, அறிவு நுட்பம், உள்ள உணர்ச்சிகளை வெளிப்படுத்தல், மன அழுத்தக் குறைவு, விட்டுக் கொடுத்தல், உடன் இருப்பவர்களுக்கு உதவுதல் போன்றவைகளைப் பெண்கள் விளையாட்டுக்கள் மூலம் அறிய முடிகிறது.

பெண்கள் தங்கள் அறிவுத்திறத்தையும், தரத்தையும் உயர்த்திக் கொள்ள அவர்களுக்கு விளையாட்டுக்கள் உதவுகின்றன.

ஐந்தாவது இயலான 'சங்க இலக்கிய - நாட்டுப்புற விளையாட்டுக்கள் ஓர் ஒப்பீடு' என்ற தலைப்பில் ஒவ்வொரு வகையிலும் மூன்று விளையாட்டுக்கள்

வீரத்தை உணர்த்தும் 'ஏறுதழுவல்' பொங்கல் விழாவின் போது சிறப்பான நிகழ்வாகவே மக்கள் மத்தியில் இடம்பெற்றுள்ளது.

விளையாட்டுக்கள் மக்கள் அனைவர்க்கும் பொதுவாக இருந்துள்ளன. செல்வர்க்கு மட்டும் உரியனவாய் இருக்கவில்லை. இருபாலாரும், பல நிலையினரும், பல பிரிவு மக்களும், அனைத்து வயதினரும் விளையாடியுள்ளனர்.

விளையாடுவதற்குக் கருவிகள் இருந்துள்ளன. நல்ல சூழ்நிலையில் விளையாடியுள்ளனர். உலாவுவதற்கு மண்டபம் இருந்துள்ளது. விழாக்களைப் பலநாள் கொண்டாடியுள்ளனர். பகலிலும் ஆடியுள்ளனர்; இரவிலும் ஆடியுள்ளனர். உடல் ஓய்வு பெற உறக்கம் தேவை என்பதை உணர்ந்திருந்தனர்.

நிகண்டுகள் விளையாட்டுச் சொற்களைத் தொகுத்துத் தந்துள்ளன. ஆனால் அவை யாவும் பெண்பாலார் விளையாட்டுச் சொற்கள். ஆண்பாலார்க்கு அவ்வகையில் சொற்கள் உருவாகாததால், அவை அவ்வாறு தனியாகத் தொகுத்துத் தரவில்லை. இதற்குரிய காரணம் விளையாட்டுச் சொற்களின் தோற்றம் பற்றித் தனியாக ஆராய்ந்தால் புலப்படலாம்.

பழங்காலத்தில் வீட்டு வாழ்க்கை பெண்களுக்கு உரியதாக இருந்தது என்பதற்குச் சான்றாக இல்லாள், இல்லோள், மனையோள் போன்ற சொற்களைச் சங்க இலக்கியத்திலிருந்து எடுத்துக்காட்டுவர். இக்கூற்றிற்கு ஆதரவாக விளையாட்டுக்களிலிருந்தும் சான்று கிடைத்துள்ளது. வீட்டு வாழ்க்கையுடன் தொடர்புடைய சிறுசோறு ஆக்கல், சிற்றில் செய்தல் என்பவை பெண்களுக்கு மட்டும் உரிய விளையாட்டுக்களாகச் சங்க இலக்கியத்திலும் காப்பியங்களிலும் வந்துள்ளன.

பெரும்பாலும் ஆண்பாலார் விளையாட்டுக்கள் கடின முயற்சியினவாயும், பெண்பாலார் விளையாட்டுக்கள் எளிய முயற்சியினவாயும் உள்ளன. எவ்வகையான கடும் பயிற்சியாலும் ஓர் ஆணின் உடல் போல ஒரு பெண்ணின் உடலை வலிமையுடையதாய் மாற்ற இயலாது என்பதை இது புலப்படுத்துகிறது.

போட்டி விளையாட்டுக்களில் எதிர்த்து விளையாடுபவரை ஏளனமாகப் பேசியுள்ளனர். குறும்பு விளையாட்டுக்கள் ஆண்பாலாருக்கு மட்டும் உரியனவாய் வந்தள்ளன.

பறவைப்போர் - விலங்குப் போர் காணல் என்ற விளையாட்டை அன்புநெறியும் அருள்நெறியும் வளர்த்த சமயங்கள் ஓங்கி வளர்ந்த காலத்திலும் இலக்கியங்கள் குறிப்பிட்டு வந்துள்ளன.

பாவைகளிடையே திருமணம் செய்து வைத்துப் பெண்கள் விளையாடியுள்ளனர். இது திருமணம் தொடர்பான வினைகள் புரிவது சமுதாயத்தில் பெண்களுக்குரிய கடமையாய் இருந்ததைப் புலப்படுத்துகிறது.

தமிழரின் வீரவிளையாட்டான ‘சிலம்பம்’ முதன்முதலில் கி.பி. பதினெட்டாம் நூற்றாண்டைச் சார்ந்த தேம்பாவணியில் தான் குறிப்பிடப்பட்டுள்ளது. ‘சடுகுடு’ (கபாடி) என்ற தமிழர் விளையாட்டை இலக்கியங்கள் ஏனோ சுட்டவில்லை.

இன்பம் பெறுவதற்காக விளையாட்டு என்பது தமிழரின் விளையாட்டுக் கொள்கையாக இருக்கலாம்.

‘பல்லாங்குழி’ என்ற தமிழக விளையாட்டு, ஆப்பிரிக்காக் கண்டத்தில் பரவலாகக் காணப்படுகிறது என்றும், இதனால் திராவிட மக்களுக்கும், நீக்ரோ மக்களுக்கும் தொடர்பு இருந்திருக்கும் என்றும் கூறப்படுகிறது.[1]

‘பிடி’ என்பதை மற்போரில் மேற்கொள்ளப்படும் ‘catch’ என்பதற்குச் சமமான தமிழ்ச் சொல்லாகக் கொள்ளலாம். ‘நொடி’ என்பதை ‘quiz’ என்பதற்கும், ‘பாசி’

---

1 டாக்டர் ப.தாயம்மாள் அறவாணன், ‘பல்லாங்குழி’ திராவிட ஆப்பிரிக்க ஒப்பீடு, ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டு மலர் (86:7).

என்பதை 'puzzle' என்பதற்கும், உரிய சொற்களாகப் பயன்படுத்தலாம். 'வெளி' என்பதை 'மைதானம்' என்ற பொருளில் 'ground' என்பதற்குரிய சொல்லாகக் கொள்ளலாம்.

தமிழ்நாட்டு விளையாட்டுக்கள் அனைத்தும் இடம்பெற்ற ஒரு நூல் இன்னும் வெளிவரவில்லை. இந்நூல் உருவாகப் பல துறைச் செய்திகள் தேவை. அவை அனைத்தையும் தொகுக்க வேண்டும்.

இத்தகைய சான்றாதாரங்களுடன் நாட்டுப்புற விளையாட்டுக்களையும், நாட்டுப்புற விளையாட்டுப் பாடல்களையும் இன்று வரை நூல் வடிவிலும், கட்டுரை வடிவிலும் வெளிவந்த தமிழ்நாட்டு விளையாட்டுக்களையும், பழங்குடியினர் விளையாட்டுக்களையும் முழுமையாகவும் செம்மையாகவும் திரட்டிக் கொள்ள வேண்டும். இவற்றை எல்லாம் விரித்து எழுதும் போது 'தமிழ்நாட்டு விளையாட்டுக்கள்' பற்றிய முழுமையான, விரிவான, தெளிவான, செம்மையான ஒரு நூல் கிடைக்கும் என உறுதியாக நம்பலாம்.

சங்க இலக்கிய - நாட்டுப்புற விளையாட்டுக்கள் அழியாமல் பாதுகாக்கப்பட வேண்டிய அவசியத்தை அறிஞர்கள் ஆய்வுகள், கட்டுரைகள், நூல்கள் மூலம் வெளிப்படுத்திக் கொண்டே இருந்தால் சங்க இலக்கிய - நாட்டுப்புற விளையாட்டுக்கள் புத்துயிர் பெற்று மக்களின் வாழ்வியல் உண்மைகளை விளக்கும் காலக் கண்ணாடியாக விளங்கும் என்பது மிகையில்லை.

**மேலாய்வுக்கான சில பரிந்துரைகள்**

1. ஏதேனும் ஒரு வகை நாட்டுப்புற விளையாட்டை எடுத்துக்கொண்டு அதன் அமைப்பை அனைத்து மாவட்டங்களிலும் அறிதல்.
2. ஏதேனும் ஒரு விளையாட்டை எடுத்துக்கொண்டு இலக்கியங்களில் அதன் தன்மை அறிதல்.
3. தஞ்சை மாவட்ட நாட்டுப்புற விளையாட்டுக்களைத் தஞ்சை மாவட்ட மீனவர் விளையாட்டுக்களோடு ஒப்பிட்டு ஆராயலாம். 10

## துணைநூற் பட்டியல்


அறவாணன், க.ப., — **அற்றை நாட்காதலும் வீரமும்,**
*பாரி நிலையம்,*
*சென்னை,*
*1978.*

அன்னகாமு, செ., — **ஏட்டில் எழுதாக் கவிதைகள்,**
*கழக வெளியீடு,*
*திருநெல்வேலி,*
*1987.*

இராகவையங்கார், மு., — **விலங்குப்போர் விளையாட்டு - ஆராய்ச்சித் தொகுதி,**
*பாரி நிலையம்,*
*சென்னை,*
*1964.*

இராசாராம், த., — **தமிழில் அம்மானைப் பாடல்கள்,**
*ஜெயகுமாரி ஸ்டோர்ஸ்,*
*நாகர்கோவில்,*
*1970.*

இராமநாதன், ஆறு., — **நாட்டுப்புறவியல் ஆய்வுகள்,**
*மணிவாசகர் பதிப்பகம்,*
*சிதம்பரம்,*
*1986.*

இராமநாதன், ஆறு., — **நாட்டுப்புறப் பாடல்கள் காட்டும் தமிழர் வாழ்வியல்,**
*மணிவாசகர் பதிப்பகம்,*
*சிதம்பரம்,*
*1982.*

இளங்கோவடிகள், — **சிலப்பதிகாரம்,**
*ந.மு.வேங்கடசாமி நாட்டார் (உரை),*
*சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம்,*
*சென்னை,*
*ஐந்தாம் பதிப்பு - 1956.*

????
**உதயணகுமார காவியம்,**
பொ.வே.சோமசுந்தரனார் (உரை),
சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம்,
சென்னை,
முதற்பதிப்பு - 1964.

கச்சியப்பமுனிவர்,
**தணிகைப்புராணம்,**
கா.நமச்சிவாய முதலியார்,
சென்னை,
1927.

கம்பர்,
**கம்பராமாயணம்,**
தமிழ்ப்புத்தகாலயம்,
சென்னை
முதல் பதிப்பு,
1965.

கலைக்களஞ்சியம்,
**தமிழ்வளர்ச்சிக் கழகம்,**
சென்னை,
1954.

கருணாகரன், கி.,
**நாட்டுப்புறவியலாய்வு நெறிமுறைகள்,**
இந்தியத் தமிழ்நாடுப் புறவியல்
கழகம்,
சிதம்பரம்,
1989.

குலசேகர பாண்டியர்,
**இலிங்கபுராணம்,**
இரலஷ்மிவிலாஸ் அச்சுக்கூடம்,
சென்னை,
ஆனிமாதம்.

குணசேகரன், கே.ஏ.,
**நாட்டுப்புற நடனங்களும்**
**பாடல்களும்,**
நியூ செஞ்கரி புக் ஹவுஸ் பிரைவேட்
லிமிடெட்,
சென்னை,
1992.

குணசேகரன், கே.ஏ.,
**தமிழக மலையின் மக்கள்,**
நியூ செஞ்சுரிபுக் ஹவுஸ் பிரைவேட்
லிமிடெட்,
சென்னை,
1994.

| | |
|---|---|
| குருவிக்கரம்பை சண்முகம், | **மரப்பாச்சி, நாட்டுப்புறவியல் ஆய்வுக் கோவை -4,**<br>*அண்ணாமலை நகர்,*<br>*சிதம்பரம்,*<br>*1987.* |
| கொங்குவேளிர், | **பெருங்கதை,**<br>*டாக்டர் உ.வே.சா(பதி)*<br>*கமர்சியல் அச்சுக்கூடம்,*<br>*சென்னை,*<br>*1887.* |
| கோனேரியப்ப முதலியார், | **உபதேச காண்டம்,**<br>*கலாரத் நாகரே அச்சுக்கூடம்,*<br>*சென்னை,*<br>*1887.* |
| கோதண்டராமன், மா., | **வடார்க்காடு மாவட்ட நாட்டுப்புறப் பாடல்கள்,**<br>*திருமலை தெய்வம்,*<br>*சென்னை,*<br>*1998.* |
| சக்திவேல், சு., | **நாட்டுப்புறவியல் ஓர் அறிமுகம், தொகுதி - 1, 2.**<br>*தமிழ்ப் பல்கலைக்கழகம்,*<br>*தஞ்சாவூர்,*<br>*1992.* |
| சக்திவேல், சு., | **நாட்டுப்புற இயல் ஆய்வு,**<br>*மணிவாசகர் பதிப்பகம்,*<br>*சென்னை,*<br>*1995.* |
| சண்முகம், ஆ., | **தமிழர் மரபுகள்,**<br>*அருள் பிரிண்டர்ஸ்,*<br>*தஞ்சாவூர்,*<br>*1999.* |
| சண்முகசுந்தரம், க., | **நாட்டுப்புறவியல்,**<br>*மணிவாசகர் பதிப்பகம்,*<br>*சென்னை,*<br>*1994.* |

